சுதந்திர

# தமிழ் வாசகம்

## இரண்டாம் புத்தகம்

ஆக்கியோர்:

R. நாகராஜ ராவ்

ஆசிரியர், E. R. ஹைஸ்கூல், திருச்சிராப்பள்ளி

V. நரசிம்ம அய்யர், B. O. L.,

தமிழாசிரியர், ஸேவா ஸதனம் ஹைஸ்கூல், சென்னை

P.B. 343. TEL "BOOK"

ஸதர்ன் பப்ளிஷர்ஸ்

தெப்பக்குளம், திருச்சி.

 [விலை 0-5-0

ஏழாம் பதிப்பு—மார்ச் 1952

*Approved by the Text-Book Committee on May 24, 1949*
*Supplement to Part I-B of the Fort St. George*
*Gazette No. 20-B Standard use (Part I) Page 4.*
*Class use ( Part II ) Page 10.*

MADRAS RIPON PRESS, PUDUKKOTTAI (851.)

# முகவுரை

"சுதந்திர தமிழ் வாசகம்" என்னும் பெயருடைய யல
ரும் இப்புத்தகத்தில் உள்ள பாடங்கள் காலத்திற்கேற்பப்
பழையன களைந்து, புதியன புகுத்தி எழுதப்பெற்றுள்
ளன. வகுப்பிற் கேற்பப் படிப்படியான முறையில்
வாசிப்பதற்கு வேண்டிய பயிற்சிகளைக் கொடுப்பது
என்ற நோக்கத்தையும் அடிப்படையாகக்கொண்டு, விஷ
யங்களைத் தேர்வதிலும் கவனம் செலுத்தப்பெற்றுள்ளது.
உலகவியலில் பொருந்தாதனவற்றை அறவே நீக்கி, சமூக
ஒற்றுமையும், பரந்த நோக்கமும், தேசபக்தியும், ஊக்க
மும், அளிக்கற்பாலனவாகிய விஷயங்களையே பாட
முறையில் அமைத்துள்ளோம். வகுப்புகளைக் கையாண்ட
அனுபவத்தைக் கொண்டு வெளியிடப் பெற்றுள்ள இப்
புத்தகங்கள் மாணவர்களுக்கு வேண்டிய மொழிப்
பயிற்சியையும் நல்லறிவையும் பயக்குமென நம்புகிறோம்.

ஆக்கியோன்

# பொருளடக்கம்



# 1. தாமரைப் பூ

தாமரைப் பூ மிகவும் அழகானது.
தாமரைக் கொடி நீரில் முளைக்கும்.
தாமரை இலை நீர்மேல் மிதக்கும்.
தாமரைப் பூக்களில் பலவகை உண்டு.
தாமரைப் பூ சூரிய உதயத்தில் மலரும்.
மலரில் இதழ்கள் விரிந்திருப்பதைப் பார்.
மலராத பூ மொட்டு எனப்படும்.

| தாமரை | உதயம் | மிதக்கும் |
|---|---|---|
| முளைக்கும் | விரிந்து | வகை |

பயிற்சி:

விடை சொல்லு:

1. தாமரைப் பூ எப்போது மலரும்?
2. தாமரைக் கொடி எங்கே முளைக்கும்?
3. மொட்டு என்பது என்ன?

# 2. பயிற்சிப் பாடம்



இது ஒரு பசு



இவை பசுக்கள்



இவன் ஒரு பையன்



இவர்கள் பையன்கள்



இவள் ஒரு பெண்



இவர்கள் பெண்கள்

அது ஒரு வீடு.

அவை வீடுகள்.

நான் ஒரு மாணவன்.

நாங்கள் மாணவர்கள்.

நீ ஒரு மாணவி.

நீங்கள் மாணவிகள்.



# 3. அணில்

அணில் ஒரு சிறிய பிராணி.

அது அழகாயிருக்கும்.

எப்பொழுதும் சுறுசுறுப்பாகத் திரியும்.

மரக்கிளைகளில் அது ஓடுவதைப் பார்.

அது பழங்களைக் கொறித்துத் தின்னும்.

அணில் எவருக்கும் தீமை செய்வதில்லை.

பிள்ளைகளே, நீங்களும் அணிலைப்போல் சுறுசுறுப்பாயிருங்கள்.

களிப்புடன் உங்கள் வேலைகளைச் செய்யுங்கள்.

| | | |
|---|---|---|
| பிராணி | சுறுசுறுப்பு | களிப்பு |
| தீமை | திரியும் | கொறித்து |

பயிற்சி :

கோடுகள் உள்ள இடங்களில் சரியான சொற்களைச் சேர்த்துப்படி :

1. அணில் ஒரு சிறிய———
2. அணில் பழங்களைக்———தின்னும்.
3. அணில் எவருக்கும்———செய்வதில்லை.

# 4. பயிற்சிப் பாடம்



பறவை பறக்கிறது.



பறவைகள்
பறக்கின்றன.

அவன் ஓடுகிறான்.

அவர்கள் ஓடுகிறார்கள்.

நீ என்ன செய்கிறாய்?

நீங்கள் என்ன செய்கிறீர்கள்?

நான் நிற்கிறேன்.

நாங்கள் நிற்கிறோம்.

எங்கள் மாமா நேற்று இங்கே வந்தார்.
இன்று அவர் இங்கே இருக்கிறார்.
நாளை அவர் சென்னை செல்வார்.
என்னுடைய பந்து எங்கே இருக்கிறது
உன்னுடைய பந்து அங்கே இருக்கிறது
நாளை நீங்கள் எங்கே இருப்பீர்கள்?
நாளை நாங்கள் இங்கே இருப்போம்.

| | | |
|---|---|---|
| நேற்று | இங்கே | நில் |
| இன்று | அங்கே | செல் |
| நாளை | எங்கே | இரு |



# 5. எங்கள் பள்ளிக்கூடம்

நாங்கள் பள்ளிக்கூடத்தில் படிக்கிறோம். எங்கள் பள்ளிக்கூடம் ஓர் ஆரம்பப் பாடசாலை. எங்கள் பள்ளிக்கூடத்தில் ஐந்து வகுப்புக்கள் இருக்கின்றன.

உபாத்தியாயர் எங்களுக்குப் ப பாடங்களைக் கற்றுக் கொடுக்கிரு நாங்கள் பாடங்களைக் கற்றுக்கொள் கிரோம்.

மாலை நேரத்தில் நாங்கள் விளையாடு கிரோம். விளையாடும்போது உபாத்தி யாயர்களும் சேர்ந்து கொள்வார்கள் ஒழுங்காக விளையாடுவோம்.

விளையாடவேண்டிய நேரத்தி விளையாடுவோம். படிக்கவேண்டி நேரத்தில் படிப்போம். எந்த வேலை யும் குறித்த நேரத்தில் செய்வோம்.

| | | |
|---|---|---|
| வகுப்பு | விளையாடு | நேரம் |
| கற்றுக்கொள் | பாடசாலை | கற்றுக்கொடு |
| ஒழுங்கு | உபாத்தியாயர் | குறித்த |
| | பள்ளிக்கூடம் | |

பயிற்சி:

**விடை கூறு:**

1. உன் பள்ளிக்கூடத்தின் பெயர் என்ன ?
2. உன் பள்ளிக்கூடத்தில் எத்தனை வகுப்புக இருக்கின்றன ?
3. நீ எப்பொழுது விளையாடுவாய்? எப்பொழு படிப்பாய்?

    

## 6. வடமொழி எழுத்துக்கள்

ஸத்தியம் உள்ளவர் ஜயம் பெறுவர்.

ரோஜா ஹாரம் ஒன்று கட்டு.

ஸௌந்தரி தந்த புஸ்தகம் எங்கே?

திராக்ஷைப் பழத்தில் ரஸம் அதிகம்.

இந்த வேஷ்டி என்ன விலை?

ஸேதுராமன் மைஸூர் சென்றான்.

உனக்கு ஸஹோதர ஸஹோதரிகள் உண்டா?

ஹிந்தி பாஷை உனக்குத் தெரியுமா?

காந்தி மஹான் ஒரு சாந்த மூர்த்தி.

| | | | |
|---|---|---|---|
| ரோஜா | திராக்ஷை | ஸத்தியம் | ஹாரம் |
| புஸ்தகம் | ரஸம் | கூஜா | பக்ஷி |
| வேஷ்டி | ஸஹோதரன் | சஹோதரி | பாஷை |



# 7. வயல்

பயிர்கள் விளையும் நிலத்திற்கு வயல் என்று பெயர். நன்செய், புன்செய் என்று இரண்டுவகை நிலங்கள் உண்டு. செய் என்பது நிலம். நல்ல தரமுள்ள நிலம் நன்செய் எனப்படும்; கீழ்த்தர முள்ள நிலம் புன்செய் ஆகும்.

நன்செய் மண்வளமும் நீர்வளமும் அதிகம் உடையது. நன்செய் நிலத் திற்குப் பாசன வசதியும் எருவும் அதிகம்

வேண்டும். நெல், கோதுமை, வாழை, வெற்றிலை, கரும்பு முதலியன நன்செய்ப் பயிர்கள்.

புன்செய் நிலத்திற்குக் காலத்தில் பெய்யும் மழையே முக்கியம். கம்பு, சோளம், கேழ்வரகு, துவரை, பயறு, கடலை முதலியன புன்செய்ப் பயிர்கள்.

| | | | |
|---|---|---|---|
| நன்செய் | மன்வளம் | கம்பு | புன்செய் |
| நீர்வளம் | வெற்றிலை | தரம் | பாசனவசதி |
| கரும்பு | துவரை | பயறு | சோளம் |
| எரு | செழிப்பு | கடலை | பயிர் |
| | விளையும் | | |

பயிற்சி :

விடை கூறு:

1. செய் என்பது என்ன?
2. நிலங்கள் இரு வகைகள் யாவை?
3. நன்செய் நிலம் என்பது எது?
4. கீழ்த்தரமுள்ள நிலம் எது?

கோடுகள் உள்ள இடங்களில் ஏற்ற சொற்களை அமைத்துக் கூறு :

நெல் ஒரு ——— பயிர்.

சோளம் ஒரு ——— பயிர்.

——— நிலத்தில் வெற்றிலை விளையும்.

கம்பு ——— நிலத்தில் விளையும்.



# 8. உழவர்

உழவர்கள் நிலங்களை உழுகிறார்கள்; அவற்றைப் பண்படுத்துகிறார்கள்; பிறகு அந்நிலங்களில் விதைகளைத் தெளித்துப் பயிர் செய்கிறார்கள்.

பயிர்கள் விளைந்து தானியங்களைக் கொடுக்கின்றன. தானியங்கள் மக்களுக்கு முக்கிய உணவு. பழம், காய்,

கிழங்கு, கீரை முதலிய வேறு பல உணவுப் பொருள்களும் உண்டு. உழவர்களே இவற்றையும் விளைவிக்கிறார்கள். உழவர்கள் செய்யும் தொண்டு மிகச் சிறந்தது.

மக்கள் தானியங்கள் விளைவிக்கிறார்கள்
உழவர் உணவுப்பொருள் உழுகிறார்கள்
தொண்டு பண்படுத்துகிறார்கள் நிலங்கள்
சிறந்தது பயிரிடுவோர்

பயிற்சி :

1. உலகிற்கு உணவு அளிப்பவர் யார்?
   உலகிற்கு உணவு அளிப்பவர் ———.
2. மக்களுக்கு முக்கிய உணவு ஆவன யாவை?
   மக்களுக்கு முக்கிய உணவு ஆவன ———;
3. பல்வேறு உணவுப் பொருள்கள் யாவை?
4. பின் வரும் கட்டத்தை நிரப்பு :

| தானியங்கள் | பழங்கள் | காய்கள் |
|---|---|---|
| 1. நெல்<br>2.<br>3.<br>4. | மாம்பழம் | கத்தரிக்காய் |



# 9. நூல் நூற்றல்

நான் நூல் நூற்கிறேன். நூல் நூற்றல் ஒரு முக்கியமான தொழில். நூலினால் ஆடைகள் நெய்யப்படும். ஆடைகள் மக்களுக்கு இன்றியமையாதவை.

ஒவ்வொருவரும் சிறிது நேரம் நூற்பது நல்லது. நூற்பதால் லாபமும் உண்டு; பொறுமை படியும்; சோம்பல் நீங்கும். சிறியோர், பெரியோர், ஆண்கள், பெண்கள் எல்லோரும் நூற்கலாம்.

**உனக்கு நூல் நூற்கத் தெரியுமா? தெரியா விட்டால் உடனே பழகிக் கொள்.**

| | | |
|---|---|---|
| நூல் | சோம்பல் | தெரியாவிட்டால் |
| நூற்றல் | படியும் | பழகிக்கொள் |
| ஆடை | எல்லோரும் | இன்றியமையாதவை |
| லாபம் | நெய்யப்படும் | சிறியோர் |
| பொறுமை | ஒவ்வொருவரும் | பெரியோர் |

பயிற்சி :

**கோடிட்ட இடங்களில் சரியான வார்த்தைகளைச் சேர்த்துப்படி :**

1. நூல் நூற்றல் ஒரு முக்கியமான ——— .
2. ——— ஆடைகள் நெய்யப்படும்.
3. நூல் நூற்பதால் ——— உண்டு.



# 10. ஆசை கொண்ட நாய்

('பசியால் மெலிந்த' என்னும் மெட்டு.)

ஆசை கொண்ட நாயொன்று
ஆப்பம் ஒன்றைத் திருடிய பின்
வாயில் அதனைக் கௌவிக் கொண்டு
வாய்க்கால் பாலம் மீதினிலே
நடந்து செல்கையில் நாய் தலையை
நீட்டிப் பார்த்தது நீரினுள்ளே.
தன்போல் உருவம் தனைக்கண்டு
அதன் பணியாரம் அபகரிக்க
ஆசை மனத்தில் மிகக் கொண்டு
வாயைத் திறந்து குரைத்ததனுல்
வாய்ப் பணியாரம் வாய்க்காலில்
விழுந்து நீரில் முழுகியதே.

# 11. பலவகைப் பிறப்புகள்



இவை புழு, பூச்சிகள். புழுக்கள் நெளிந்து செல்லும். பூச்சிக்கு இறக்கைகள் உண்டு. பூச்சியின் உடலைப் பார். அது மூன்று பாகங்களாக இருக்கும்.



பாம்பு ஊர்ந்து செல்லும் ஒரு பிராணி. சில பாம்புகள் விஷம் உடையவை. பல்லி, ஓணான் முதலியவையும் ஊர்ந்து செல்லும் பிராணிகளே.



மீன், தவளை, முதலியன நீரில் வாழும் பிராணிகள். இவைகளுக்கு நீர் வாழ்வன என்று பெயர். இவை நீரில் நீந்திச் செல்லும்.

இவை பறவைகள். பறவைகள் பறக்கும். பறவைகள் முட்டை இடும்; குஞ்சு பொறிக்கும்; கூடுகளிலும், பொந்துகளிலும் வசிக்கும்.





மிருகங்களுக்கு நான்கு கால்களும் ஒரு வாலும் உண்டு. மிருகங்கள் குட்டி போடும். மிருகத்திற்கு விலங்கு என்றும் பெயர்.

மரம், செடி, கொடி, புல், பூண்டு ஆகிய இவைகளுக்குத் தாவரங்கள் என்று பெயர். தாவரங்கள் இடம் விட்டு இடம் பெயரா. ஆனால் இவையும் உணவு உட்கொள்ளும்; வளரும் பிராணிகளைப் போலவே தாவரங்களுக்கும் உயிர் உண்டு.



பிறப்புகளில் உயர்ந்தது மனிதப் பிறப்பு. மனிதருக்குப் பகுத்தறிவு உண்டு. மனிதர்கள் நன்மை தீமைகள் அறிவார்கள்; அறிவைப் பெருக்கி நாகரிகமாக வாழ்வார்கள்.

| | | |
|---|---|---|
| பகுத்தறிவு | விஷம் | தாவரம் |
| நாகரிகம் | பொந்து | உற்றுப்பார் |
| விலங்கு | பிறப்புகள் | பெயரா |

கேள்விகள் :

1. பறவைகளின் தன்மைகளைக் கூறு.
2. பூச்சியின் உடல் எவ்வாறு அமைந்திருக்கிறது?
3. பாம்பு எப்படிப்பட்ட பிராணி?

பயிற்சி :

1. நீர்வாழ்வன என்பவை நீரில் வாழும். நீரில் வாழ்வதால் நீர்வாழ்வன என்று பெயர். இதே மாதிரி மாற்றிப் படி:

(அ) பறவைகள் பறக்கும்; பறப்பதால் ——— ———.

(ஆ) ஊர்வன ஊர்ந்து செல்லும்; ஊர்ந்து செல்வதால் ——— ——— ———

2. இக் கட்டத்தை நிரப்பு:

| விலங்குகள் | பறவைகள் | பூச்சிகள் |
|---|---|---|
| 1. பசு<br>2.<br>3.<br>4. | குருவி | பட்டுப் பூச்சி |

# 12. ஒற்றுமை



நான்கு எருதுகள் மிக ஒற்றுமையாக வாழ்ந்து வந்தன. அவை எங்கே சென்றாலும் சேர்ந்தே செல்லும். மேயும் போதும் சேர்ந்தே மேயும்.

ஒரு நாள் ஒரு சிங்கம் அவ்வெருதுகளைக் கண்டது; அவற்றில் ஒன்றையாவது கொன்று தின்ன எண்ணிற்று. அதனால் அது அவற்றின் அருகே சென்றது.



சிங்கத்தைக் கண்டதும் எருதுகள் சினம் கொண்டன. எல்லாம் சிங்கத்தை நோக்கி ஒரு முகமாகத் திரும்பின; கொம்புகளைத் தாழ்த்திக் கொண்டு சிங்கத்தை ஒரே முட்டாக முட்டச் சென்றன.

எருதுகளின் ஒற்றுமையைக் கண்ட சிங்கம் அதிசயங்கொண்டு ஓடிப் போயிற்று.



சில நாட்கள் கழிந்த பின் எருதுகளுக்குள் ஒற்றுமை குலைந்தது. அவை ஒன்றோடொன்று சேராமல் தனித் தனியாக மேய ஆரம்பித்தன.



அவ் வேற்றுமையைக் கண்ட சிங்கம் மறுபடியும் அவ்வெருதுகளை எதிர்த்தது. ஒவ்வொரு எருதையும் தனித் தனியே அடித்துக் கொன்றது.

| | | | |
|---|---|---|---|
| மேயும் | ஒரு முகமாக | தனித் தனியாக | அருகே |
| சினம் | ஒரே முட்டாக | வேற்றுமை | அதிசயம் |
| பகை | அழியும் | வெல்லலாம் | தோல்வி |

### கேள்விகள் :

1. எருதுகள் முதலில் எப்படி வாழ்ந்து வந்தன ?
2. சிங்கத்தைக் கண்ட எருதுகள் என்ன செய்தன ?
3. எருதுகளைச் சிங்கம் எப்படிக் கொல்ல முடிந்தது ?

### பயிற்சி :

1. படங்களை ஒவ்வொன்றாகப் பார்த்துக் கதையைச் சொல்லு.
2. தகுந்த வார்த்தைகளை அமைத்து முடி :
   (அ) —— தாழ்த்தி சிங்கத்தை முட்டச் சென்றன.
   (ஆ) ஒற்றுமையால்—— வெல்லலாம்.
   (இ) —— தோல்வி ஏற்படும்.



# 13. கூண்டுக் கிளி

அக்காள்.- தம்பீ, அங்கே என்ன செய்கிறாய்?

தம்பி.- அக்கா, நான் கூண்டிலுள்ள கிளியைக் கவனிக்கிறேன்.

அ.-கிளியைப் பற்றி நீ என்ன கவனிக்கிறாய்?

த.- இந்தக் கிளி சுறுசுறுப்பாக இல்லை; சோர்ந்து இருக்கிறது.

அ.-ஆம். அதற்கு மகிழ்ச்சி இல்லை; அதனால் தான் சோர்ந்து இருக்கிறது.

த.- மகிழ்ச்சி இங்கே என்ன குறைவு அக்கா? அழகான கூண்டில் இருக்கிறது; பால், பழம், சோறு, தண்ணீர் எல்லாம் இருக்கின்றன. சோர்வு எதற்காக?

அ.-தம்பி, உன்னை ஓர் அழகான அறைக்குள் அடைத்து வைக்கிறேன். உண்ண உணவும், குடிப்பதற்கு நீரும் கொடுக்கிறேன். நீ அந்த அறைக்குள்ளேயே இருப்பாயா?

த.- அக்கா, நல்ல யோசனை சொல்லுகிறாய்! என் இஷ்டப்படி நான் ஓடியாட வேண்டாமா?

அ.-கிளியும் கூண்டில் அடைபட்டு இருப்பதை விரும்பாது; தன் இனத்தோடு சேர்ந்து தன் இஷ்டப்படி வெளியே பறந்து வாழ விரும்பும்.

த.- அப்படியானால் பறவைகளைப் பிடித்து. அடைத்து வைக்கக் கூடாதா அக்கா?

அ.-பறவை மட்டும் அல்ல; எந்தப் பிராணியையும் பிடித்து அடைத்து வைக்கக் கூடாது.

| | | |
|---|---|---|
| சேர்ந்து | யோசனை | வாழ்க்கை |
| இஷ்டம் | மகிழ்ச்சி | போந்து |
| அறை | அடைத்துவைத்து | கவனிக்கிறேன் |

கேள்விகள்:

1. கூண்டில் அடைபட்ட கிளி எவ்வாறு இருந்தது? ஏன்?
2. கிளி எப்பொழுது சுறுசுறுப்பாக இருக்கும்?
3. எவ்வாறு வாழ்வதற்குக் கிளி விரும்பும்?

பயிற்சி:

சரியானபடி வரிசைப்படுத்திக் கூறு:

| | |
|---|---|
| சுதந்திர வாழ்க்கையே | மகிழ்ச்சி இல்லை. |
| அடிமை வாழ்க்கை | இன்பமானது. |
| கூண்டிலுள்ள கிளிக்கு | துன்பம் தரும். |



# 14. ஆரோக்கியம்

இந்தப் படத்தில் இரண்டு மனிதர்களைப் பார்க்கிறோம். ஒருவன் மெலிந்து நோயாளியாகக் காணப் படுகிறான். மற்றவன் ஆரோக்கியமாகவும் பலமுள்ளவனாகவும் காணப்படுகிறான்.

ஏன் தெரியுமா? அவர்கள் வசிக்கும் வீடுகளைப்பாருங்கள். நோயாளியின் வீடு பள்ளமான தரையில் கட்டப்பட்டிருக்கிறது. அதைச் சுற்றியுள்ள இடம் குப்பை கூளமாகவும் சதுப்பு நிலமாகவும் இருக்கிறது.

சுற்றுப்புறம் அசுத்தமாக இருப்பதால் அங்கே கொசுக்களும் அதிகம். நல்ல காற்று இல்லை

அவன அசுததமான காற்றைச் சுவாசிக்கிறுன்; கொசுக்கடியால் வருந்துகிறுன். ஆகையால் அவனுக்கு ஆரோக்கியம் இல்லை.

மற்றவன் மேட்டுப்பாங்கான இடத்தில் தன் வீட்டைக் கட்டியிருக்கிறுன். சுற்றுப்புறம் உலர்ந்த தரையாகவும், சுத்தமாகவும் இருக்கிறது. நல்ல காற்றை அவன் சுவாசிக்கிறுன். அவன் நோயில்லாமல் இன்பமாக வாழ்கிறுன்.

இப் பாடத்திஞல் நீங்கள் என்ன தெரிந்து கொள்கிறீர்கள்? ஆரோக்கியமே இன்பம். சுத்தம் ஆரோக்கியம் தரும்.

| | | |
|---|---|---|
| மெலிந்து | சதுப்பு நிலம் | காற்று |
| நோயாளி | சுற்றுப்புறம் | கொசு |
| ஆரோக்கியம் | சுத்தம் | மேட்டுப் பாங்கு |
| குப்பை கூளம் | அசுத்தம் | சுவாசிக்கிறுன் |

கேள்விகள் :

1. படத்தில் உள்ள இருவரில் ஒருவன் எவ்வாறு காணப்படுகிறுன்? மற்ருெருவன் எவ்வாறு காணப்படுகிறுன்?

2. எப்படிப்பட்ட இடத்தில் வீடுகளைக் கட்டவேண்டும்? வீட்டின் சுற்றுப்புறம் எப்படி இருக்க வேண்டும்?

பயிற்சி :

பிள்ளைகள் ஒருவரோடொருவர் உரையாடல் :

1. படத்தில் காணப்படும் மனிதர்களைப்பற்றி.
2. வீடுகள், சுற்றுப்புறம், உணவு முதலியவைகளைப் பற்றி.

# 15. வாகனங்கள்



பாரவண்டி மிகப் பழமை யானது. அதற்குக் கட்டை வண்டி என்றும் பெயர். பார வண்டிகளை இழுக்க இரட்டை மாடுகள் கட்டுவார்கள்.



வில் வண்டி சவாரி செய்ய உதவும். வில் வண்டிகளில் குதிரைகளையும், மாடுகளையும் பூட்டி ஓட்டுவார்கள். குதிரை கள் வேகமாக ஓடும்.



ஸைக்கிள் வண்டி பெரும் பாலும் இரண்டு சக்கரங்கள் உடையது. ஸைக்கிளின் சக்கரங்களை உற்றுப் பார். அவை, காற்றடைத்த ரப்பர் கட்டுகளை உடையவை.



மோட்டார் வண்டி எந்திர வண்டி. நல்ல சாலைகளில் மோட்டார் வண்டிகள் ஓடும். அவை பல வித உருவத்தில் அமைக்கப்படும்.



ரயில் வண்டி தண்டவாளத்தில் ஓடும். தண்டவாளத்திற்கு இருப்புப் பாதை என்று பெயர். ரயில் எஞ்ஜின் நீராவியின் சக்தியால் செல்லும். அது வண்டித் தொடர்களை இழுத்துக் கொண்டு ஓடும்.



ஆகாய விமானம் நூதனமான வாகனம். இது ஆகாயமார்க்கத்தில் செலுத்தப்படும்.



கப்பல் கடலில் செல்லும். கப்பல்களில் பாய்மரக்கப்பல் என ஒருவகை உண்டு. பாய்மரக் கப்பல் வீசும் காற்றின் சக்தியால் செலுத்தப்படும். நீராவிக் கப்பல் நீராவி எந்திரத்தால் செலுத்தப்படும்.

மனிதர்கள் தம் அறிவினால் இவ்வாகனங்களை அமைத்திருக்கிறார்கள். இவற்றின் உதவியால் போக்கு வரவு இலகுவாக நடைபெறுகிறது.

இவற்றால் நாகரிகம் வளர்ச்சியடைகிறது; பல தேச மக்கள் ஒருவரோடொருவர் நேசமும் உறவும் கொள்கிறார்கள்.

| | | |
|---|---|---|
| இலகு | பாய்மரக்கப்பல் | நூதனமான |
| வாகனம் | நீராவிக்கப்பல் | கப்பல் |
| எந்திரம் | பாரவண்டி | கட்டு |
| சைக்கிள் | வில்வண்டி | சாலை |
| விமானம் | எஞ்சின் | அமைக்கப்படும் |
| நாகரிகம் | போக்குவரவு | நடைபெறுகின்றன |

## கேள்விகள்:

1. மிகப் பழமையான வாகனம் எது?
2. நூதனமான வாகனம் எது?
3. கடல் வழியில் செல்வதற்கு உதவும் வாகனம் எது?

## பயிற்சி:

சைக்கிள், மோட்டார், ஆகாய விமானம் ஆகிய வாகனங்களைப் பற்றி உரையாடல்.



## 16. ஓடி விளையாடு பாப்பா

ஓடி விளையாடு பாப்பா,—நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா,
கூடி விளையாடு பாப்பா,—ஒரு
குழந்தையை வையாதே பாப்பா.

சின்னஞ் சிறு குருவி போலே—நீ
திரிந்து பறந்து வா பாப்பா,
வண்ணப் பறவைகளைக் கண்டு—நீ
மனதில் மகிழ்ச்சி கொள்ளு பாப்பா.

கொத்தித் திரியு மந்தக் கோழி—அதைக்
கூட்டி விளையாடு பாப்பா,
எத்தித் திருடு மந்தக் காக்காய்—அதற்
கிரக்கப் படவேணும் பாப்பா.

பாலைப் பொழிந்து தரும் பாப்பா,—அந்தப்
பசு மிக நல்லதடி பாப்பா,
வாலைக் குழைத்து வரும் நாய் தான்—அது
மனிதர்க்குத் தோழனடி பாப்பா.

வண்டி யிழுக்கும் நல்ல குதிரை—நெல்
வயலில் உழுது வரும் மாடு
அண்டிப் பிழைக்கும் நம்மை ஆடு—இவை
ஆதரிக்க வேணுமடி பாப்பா.

காலை யெழுந்தவுடன் படிப்பு—பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு
மாலை முழுதும் விளையாட்டு—என்று
வழக்கப் படுத்திக் கொள்ளு பாப்பா.

பொய் சொல்லக் கூடாது பாப்பா—என்றும்
புறஞ் சொல்ல லாகாது பாப்பா,
தெய்வம் நமக்குத் துணை பாப்பா—ஒரு
தீங்கு வர மாட்டாது பாப்பா.

— பாரதியார்



# 17. ஔவையார்

தகப்பனார்: பாலு, இப்போது நீ எந்தப் பாடம் படிக்கிறாய்?

பாலு: அப்பா, நான் ஆத்திசூடி படிக்கிறேன்.

தகப்பனார்: ஆத்திசூடி யார் இயற்றியது?

பாலு: ஆத்திசூடியை ஔவையார் அருளிச் செய்தார்.

தகப்பனார்: ஔவையார் யார்? அவர் எந்த நாட்டினர்? அவர் என்னென்ன நூல்கள் இயற்றியிருக்கிறார்?

பாலு: இந்த விவரங்களெல்லாம் எனக்குத் தெரியாது அப்பா. தயவுசெய்து தாங்கள் எனக்கு அறிவிக்க வேண்டும்.

தகப்பனார்: ஔவையார் என்பவர் கல்வியிற் சிறந்த ஓர் அம்மையார். அவர் தமிழ் நாட்டினர். ஆத்திசூடி, கொன்றைவேந்தன்

வாக்குண்டாம், நல்வழி முதலியன அவர் இயற்றிய நூல்கள்.

பாலு : ஔவையார் இயற்றிய நூல்களால் நமக்கு என்ன பயன்?

தகப்பனார் : அந்நூல்களைப் படிப்பதால் நமக்கு நல்ல அறிவு உண்டாகும்.

பாலு : அந் நூல்களை மட்டும் படித்தால் போதுமா அப்பா?

தகப்பனார் : நூல்களைப் படிப்பது மட்டும் போதாது; படித்த வழியில் நடக்க வேண்டும்.

| | | |
|---|---|---|
| ஆத்திசூடி | இயற்றிய | விவரங்கள் |
| கொன்றைவேந்தன் | நூல்கள் | தயவு செய்து |
| வாக்குண்டாம் | அம்மையார் | அறிவிக்கவேண்டும் |
| நல்வழி | தமிழ்நாட்டினர் | அருளிச்செய்தார் |
| ஔவையார் | நடக்கவேண்டும் | |

கேள்விகள் :

1. ஔவையார் எந்த நாட்டினர்?
2. ஆத்திசூடி யார் இயற்றியது?
3. நூல்களைப் படித்தால் என்ன பயன்?

பயிற்சி :

சரியானபடி வரிசைப்படுத்தி வாசி :

| | |
|---|---|
| ஆத்திசூடி என்பது | கல்வியிற் சிறந்தவர். |
| படித்த வழியில் | ஒரு நூல். |
| ஔவையார் | நடக்கவேண்டும். |



# 18. சூரியன்

சூரியன் தினந்தோறும் காலையில் உதிக்கின்றது; மாலையில் அது மறைகிறது. சூரியன் தோன்றுகிற காலம் பகல், சூரியன் தோன்றாத காலம் இரவு எனப்படும். ஒரு பகலும் ஓர் இரவும் சேர்ந்தது ஒரு நாள்.

ஏழு நாட்கள் கொண்டது ஒரு வாரம். ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என வாரத்தின் நாட்கள் ஏழு. சாதாரணமாக முப்பது நாட்கள் ஆனால் ஒரு மாதம் என்கிறோம். பன்னிரண்டு மாதங்கள் ஒரு வருடம்.

சூரியன் உலகிற்கு வெளிச்சமும் வெப்பமும் தருகிறது. ஆனால் வருஷத்தில் சில காலங்களில்

சூரிய வெப்பம் கடுமையாகத் தோன்றும். சில காலங்களில் சூரிய வெப்பம் கடுமையாகத் தோன்ருது. அப்போது குளிர் அதிகமாக இருக்கும். காற்று, மழை இவைகளுக்கு சூரியனே காரணம். சூரியன் இல்லாவிட்டால் எந்தப் பிராணியும் உயிர் வாழ முடியாது; பயிர் பச்சைகளும் தழைக்கமாட்டா.

| | | |
|---|---|---|
| உதிக்கிறது | கடுமையாக | பயிர்பச்சை |
| மறைகிறது | வெப்பம் | தழைக்க |
| தினந்தோறும் | உயிர்வாழ | காரணம் |

கேள்விகள் :

1. சூரியன் எப்போது உதிக்கிறது? எப்போது மறைகிறது?
2. நாட்களைக் கணக்கிடுவதற்குக் காரணமாய் உள்ளது எது?
3. சூரியன் எங்கெந்த வழிகளில் உலகிற்கு உதவுகிறது?

பயிற்சி :

தருகிறது, தோன்ருது, வாரம், தோன்றும், மாதம்—இவ் வார்த்தைகளைக் கோடுகள் உள்ள இடங்களில் சரியாக அமைத்துப் படி.

பகலில் சூரியன் ——.
இரவில் சூரியன் ——.
சூரியன் வெளிச்சம் ——.
ஏழு நாட்கள் கொண்டது——.
முப்பது நாட்கள் கொண்டது——.



# 19. தேனீ

படத்தில் பல ஈக்களைப் பார். இவை சாதாரணமான வீட்டு ஈக்கள் அல்ல. இவை தேனீக்கள். இந்த ஈ இனம் பூக்களிலுள்ள தேனை நாடிச் செல்லும். அவற்றிலுள்ள தேனை உட்கொண்டு வரும். பிறகு தேனைத் தம் கூட்டில் உமிழ்ந்து சேர்த்து வைக்கும்.

தேன்கூடு ஒருவித மெழுகினால் ஆனது. அம் மெழுகு தேனீக்களின் உடலிலிருந்தே உண்டாகிறது. தேனீக்கள் தம் கூட்டை வெகு அழகாக அமைக்கும். கூட்டினுள் பல அறைகள் இருக்கும். தேய்பிறையில் தேனீக்கள் தேனை மிகுதியாகச் சேர்த்து வைக்கும். அமாவாசையன்று தேன்கூடு தேன் நிரம்பிக் காணப்படும். வளர்பிறையில் அவை தேனை மிகுதியாகக் குடித்துக் களிக்கும்.

மனிதர் புகை போட்டுத் தேனீக்களை விரட்டு வார்கள்; பிறகு கூட்டைப் பிழிந்து தேனை எடுத்துக்கொள்வார்கள். தேன் மெழுகையும் தனியே வைத்துக்கொள்வார்கள்.

தேன் ஓர் இனிய உணவுப் பொருள். அது மருந்துகளுடனும் கலக்கப்படும். தேனீக்கள் தம் உணவுக்காகத் தேனைச் சேகரிக்கின்றன. அது மனிதருக்கு மிகவும் உபயோகப்படுகிறது.

தேனீக்கள் மரக் கிளையில் கூட்டை அமைக் கும். மனிதர் தேனுக்காகத் தேனீக்களை வளர்ப் பதும் உண்டு. தேனீ வளர்த்தல் ஒரு நல்ல தொழில் ஆகும்.

| | | |
|---|---|---|
| தேன் | மெழுகு | சேகரிக்கின்றன |
| தேனீ | பிறை | அமாவாசை |
| நாடி | பிழிந்து | உபயோகம் |
| உமிழ்ந்து | அறை | விரட்டுவார்கள் |

கேள்விகள் :

1. தேனீக்கள் தேனை எப்படிச் சேர்த்து வைக்கின்றன ?
2. மனிதர் தேனை எப்படி எடுக்கிறார்கள் ?
3. தேன் மனிதருக்கு எப்படி உபயோகப்படுகிறது ?

பயிற்சி :

தகுந்த வார்த்தைகளை நிரப்பு :

1. தேன்கூடு ஒருவித ——— ஆனது.
2. தேனீக்கள் தம் கூட்டை ——— அமைக்கும்.



# 20. சுத்தம்

சுத்தம் உள்ளவர் சுகம் பெறுவர். அசுத்தம் துன்பம் தரும். உணவு, உடை, உடல், சொல், செய்கை, மனம் ஆகிய ஆறும் சுத்தமாய் இருக்க வேண்டும்.

நல்ல உணவு உட்கொள்ளுதல் உணவுச் சுத்தம். ஆடைகளை அழுக்கற வைத்துக்கொள் வது உடைச்சுத்தம். அழுக்கு நீங்கக் குளிப்பது உடல் சுத்தம். உணவும், உடையும், உடலும் சுத்தமாகப் பாதுகாக்கப்பட்டால் நோய்கள் வாரா; தேகம் ஆரோக்கியமாக இருக்கும்.

இவை போலவே, சொல்லும், செய்கையும் மனமும் சுத்தம் பெறுதல் வேண்டும். யாவரிடத்தி லும், எப்போதும் இதமாகப் பேசுவதும், உண்மை கூறுவதும் பேச்சில் சுத்தமாகும். யாவருக்கும் எப்போதும் நன்மைகளையே செய்வது செய்கை யில் சுத்தம். யாவரிடத்திலும், எப்போதும் நல்ல எண்ணம் உடையவராய் இருப்பது மனச் சுத்தம்.

சுத்த வாழ்வே ஒருவருக்கு இன்பமும் புகழும் அளிக்கும். பிள்ளைகளே, நீங்கள் மேற் கூறிய ஆறுவகையிலும் சுத்தம் உள்ளவர்களாக வாழ்வீர்களாக.

| | | |
|---|---|---|
| சுத்தம் | வாழ்வீர்களாக | பாதுகாக்கப்பட்டால் |
| அசுத்தம் | ஆரோக்கியம் | இதமாக |
| இன்பம் | யாவரிடத்திலும் | நன்மை |
| துன்பம் | யாவருக்கும் | வாழ்வு |
| நோய் | எப்போதும் | |

## கேள்விகள் :

1. ஒவ்வொருவரும் எந்தெந்த வகைகளில் சுத்தமாக இருக்க வேண்டும் ?
2. உடைச் சுத்தமாவது யாது ?
3. பேச்சில் சுத்தம் என்பது யாது ?
4. யாரிடத்தில் நோய்கள் வாரா ?

## பயிற்சி :

**எதிர் மொழிகள் :**

இன்பம் × துன்பம். சுத்தம் × அசுத்தம். நன்மை × தீமை.



# 21. சைக்கிள்

தங்கையே பார், தங்கையே பார்.
சைக்கிள் வண்டி இதுவே பார்.

சிங்காரமான வண்டி
சீமையிலே செய்த வண்டி.

இரும்பாலே செய்த வண்டி
எங்கெங்கும் ஓடும் வண்டி.

மாடில்லை குதிரையில்லை
மாயமாய்ப் பறந்திடும் பார்.

தீயில்லை புகையுமில்லை
தீவிரமாய்ச் சென்றிடும் பார்.

காலாலே மிதிப்பதனுல்
கடும் விசையில் போயிடும் பார்.

ஒன்றன் பின் ஒன்ருக
உருளும் பை தாக்களைப் பார்.

அக்காளும் தங்கையும் போல்
அவை போகும் அழகைப் பார்.

—தேசிக விநாயகம் பிள்ளை

# 22. சந்தை

புத்தூர் ஒரு பெரிய கிராமம். அங்கே ஆயிரம் வீடுகள் உண்டு. புத்தூரைச் சுற்றிலும் பல சிறு கிராமங்கள் இருக்கின்றன. புத்தூரில் ஒரு சந்தைப் பேட்டை இருக்கிறது. அங்கே வெள்ளிக்கிழமை தோறும் சந்தை கூடும். சுற்றுக் கிராமங்



ளில் உள்ளவர்கள் சந்தைக்கு வருவார்கள். ந்தையில் ஒரே இரைச்சலாக இருக்கும்.

குடியானவர்கள் தங்களிடத்தில் அதிகமாக ள்ள தானியங்கள், காய்கறி முதலிய பொருள் ளைச் சந்தையில் கொண்டு பாய் விற்பார்கள்; தங்க நக்கு வேண்டிய துணிமணி ள், பாத்திரங்கள், மண் ணெண்ணெய், உப்பு, கண் டிச் சாமான்கள், மிளகு, ரகம், மருந்துகள் முதலிய வேறு பொருள்களை ாங்கிக்கொண்டு போவார்கள்.



பல வியாபாரிகள் சந்தையில் கடைகள் வைப் ர்கள். ஜனங்களுக்கு வேண்டிய பற்பல பொருள் ளையும் கொண்டுவந்து விற்பார்கள். அந்த ஊரில்

கிடைக்கக்கூடிய பொருள்களை வாங்குவார்கள். அவைகளை மற்ற இடங்களுக்குக் கொண்டுபோய் விற்பார்கள். ஒவ்வோர் இடத்தில் ஒவ்வொரு கிழமையில் சந்தை கூடும்.



நகரங்களில் கடைத்தெருக்கள் இருக்கும். அங்கே தினந்தோறும் கடைகளில் வியாபாரம் நடக்கும். அருகே யுள்ள கிராமவாசிகள் தங்களுக்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் அக் கடைகளில் வாங்கக் கூடும். கிராமங்களில் உண்டாகும் உணவுப் பொருள்களும் மற்றப் பொருள்களும் நகரங்களில் விலையாகும். வெளியிடங்களிலிருந்து வரக்கூடிய பல பொருள்களும் நகரங்களில் கிடைக்கும்.



| | | |
|---|---|---|
| **சந்தைப்பேட்டை** | **துணிமணி** | **கடைத்தெரு** |
| **தேவை** | **விலையாகும்** | **நகரம்** |
| **கடைத்தெரு** | **கடமை** | **ஜனங்கள்** |

**கேள்விகள் :**

1. *சந்தையில் என்னென்ன பொருள் கிடைக்கும்?*
2. *கிராமங்களில் எப்பொழுது சந்தை கூடும்?*
3. *நகரங்களில் வாரச் சந்தை ஏன் கூடுவதில்லை?*

# 23. படம் பார்த்துக் கதை சொல்லல்-I

பின் வரும் படங்களைப் பார்த்துக் கதையைச் சொல்லு:



## 24. படம் பார்த்துக் கதை சொல்லல்-II

**பின் வரும் படங்களைப் பார்த்துக் கதையைச் சொல்லு:**



# 25. கிளி

பச்சைக் கிளியே வா வா
பாலுஞ் சோறும் உண்ண வா
கொச்சி மஞ்சள் பூச வா
கொஞ்சி விளை யாட வா.

கவலையெல்லாம் நீங்கவே
களிப்பெழுந்து பொங்கவே
பவழவாய் திறந்து நீ
பாடுவாயோ தத்தம்மா.

வட்டமாயுன் கழுத்திலே
வானவில்லை ஆரமாய்
இட்ட மன்னர் யாரம்மா
யானறியக் கூறம்மா.



பையப் பையப் பறந்து வா
பாடிப் பாடிக் களித்து வா
கையில் வந் திருக்க வா
கனியருந்த ஓடி வா.

— தேசிக விநாயகம் பிள்ளை

# 26. உண்மை உயர்வு தரும்

தண்டலை என்பது ஒரு அழகான ஊர். அவ்வூரில் ஒரு தனவந்தர் இருந்தார். அவர் பெயர் அரியநாதர். அவருக்கு ஒரே ஒரு மகன் உண்டு. அவன் பெயர் உத்தமன். உத்தமன் சிறு பையன்; அவனுக்கு வயது ஏழு.

அரியநாதர் ஒரு விவசாயி. அவருக்குப் பல வயல்களும், தோப்புகளும், தோட்டங்களும் உண்டு.



அவர் தம்முடைய தோப்பில் பல மாங்கன்றுகளை நட்டிருந்தார். அவை தழைத்து அழகாயிருந்தன. அவற்றைக் காவல் காக்க ஒரு வேலைக்காரனையும் நியமித்திருந்தார்.

ஒரு நாள் அரியநாதர் வெளியேபோயிருந்தார். அப்போது உத்தமன் மாந்தோப்பிற்குச் சென்றான். மாங்கன்றுகளின் அழகைக் கண்டான். அவற்றில் சிலவற்றைக் கிள்ளி இலைகளைப் பறித்தான். அவற்றின் நிறத்தையும் அழகையும் கண்டு களிப்படைந்தான்.

மறுநாள் அரியநாதர் தோப்பிற்குச் சென்றார். சில கன்றுகள் கிள்ளப்பட்டிருப்பதைக் கண்டார். அவர் கோபத்துடன் காவற்காரனைக் கூப்பிட்டார். அவனைத் தம் பிரம்பினால் அடிக்கச் சென்றார். அப்போது உத்தமனும் அருகில் நின்றான். தான் செய்த குற்றத்திற்காக வேலைக்காரன் அடிபடுவதை அவன் விரும்பவில்லை; தன் குற்றத்தைத் தானே ஒப்புக் கொள்வது கடமை என்று எண்ணினான்.



ஆகையால் அவன் தன் தகப்பனாரைப் பார்த்து, "அப்பா, மாங் கன்றுகளைக் கிள்ளினவன் நானே; நானே குற்றவாளி ஆவேன்; வேலைக்காரன் ஒன்றும் அறியாதவன்; தயவு செய்து என்னைத் தண்டியுங்கள்" என்றான்.

அரியநாதர் தம் கையிலிருந்த பிரம்பைக் கீழே நழுவவிட்டார். "குழந்தாய், நீ உன் குற்றத்தை ஒப்புக்கொண்டாய்; உண்மையைக் கூறினாய்; ஆகையால், உன்னை மன்னிக்கிறேன்: எப்போதும் நீ உண்மை பேசி உயர்வு அடைவாயாக" என்று கூறினார்.

உத்தமன் தன் வாழ் நாளில் எப்போதும் உண்மையுள்ளவனுகவே இருந்தான். அதனுல் அவன் பல உயர்ந்த பதவிகளைப் பெற்ருன் ; ஊரார் எல்லோரும் அவனைப் புகழ்ந்தார்கள்.

'உண்மை உயர்வு தரும்.'

| | | |
|---|---|---|
| தனவந்தர் | வேலைக்காரன் | உயர்பதவி |
| வாழ்நாள் | காவல் காக்க | குற்றவாளி |
| விவசாயி | கிள்ளப்பட்டு | தண்டியுங்கள் |
| தோப்பு | அருகில் | மன்னிக்கிறேன் |
| தோட்டம் | ஒப்புக்கொள்வது | |

கேள்விகள் :

1. அரியநாதர் தம் தோப்பில் எந்தக் கன்றுகளை நட்டிருந்தார்?
2. உத்தமன் ஒரு நாள் தோப்பில் சென்று என்ன செய்தான்?
3. அரியநாதர் தம் வேலைக்காரனை ஏன் அடிக்கச் சென்றார் ? அப்போது உத்தமன் என்ன சொன்னுன் ?
4. உத்தமன் தம் வாழ்நாளில் உயர் பதவிகளை அடையக் காரணம் என்ன ?



# 27. பாரதியார்

இப் படத்தில் காணப்படுபவர் ஒரு சிறந்த தேசபக்தர். இவருடைய பெயர் சுப்பிரமணிய பாரதியார். இவர் 1882-ம் வருஷத்தில் எட்டய புரம் என்ற ஊரில் பிறந்தார். இவர் முப்பத் தொன்பது வயதுதான் வாழ்ந்திருந்தார். ஆயி னும் இவர் தம் குறுகிய வாழ்நாளில் நாட்டிற்குச் செய்த சேவை மிகப் பெரிது.

பாரதியார் மிகச் சிறு வயதிலேயே தமிழில் கவி பாடும் புலமையைப் பெற்ருர். ஆங்கிலம்,

சம்ஸ்கிருதம் ஆகிய மொழிகளிலும் இவர் பயிற்சி பெற்றார். சத்தியம், தைரியம், ஊக்கம், அன்பு, நேசம், பரோபகாரம் முதலிய அரிய குணங்கள் இவரிடம் நிரம்பி இருந்தன.

அடிமைப் புத்தி என்பது பாரதியாரிடம் கிடையாது. சுதந்திர மணம் கமழும் இனிய கீதங்கள் பல இவர் இயற்றினார்; அவற்றின் மூல மாக எல்லோருக்கும் சுதந்திர தாகத்தை உண்டு பண்ணினார்.

பாரதியார் தம் வாழ் நாளை வீண் நாள் ஆக்க வில்லை. நாட்டின் சுதந்திரமே எப்போதும் இவ ருடைய சிந்தனை. இவர் வறுமையாலும், நோயா லும் மிகவும் பீடிக்கப்பட்டார். தமக்கு நேர்ந்த துன்பங்களை இவர் சட்டை செய்யவே யில்லை; தம் ஆயுளெல்லாம் நாட்டிற்கே உழைத்தார்; 1921-ம் ஆண்டில் அகால மரணம் அடைந்தார்.

பாரதியாரின் ஞாபகார்த்தமாக, எட்டயபுரத் தில் ஒரு மணி மண்டபம் கட்டப்பட்டிருக்கிறது. நம் நாட்டில் எல்லோரும் பாரதியாரைப் போற்று கிறோம். பாரதி விழா தமிழ் நாடெங்கும் கொண் டாடப்படுகிறது. பிள்ளைகளே, நீங்கள் பாரதியா ரைப்போல் உண்மை வீரராகவும், தேச பக்தர் களாகவும் விளங்குவீர்களா?

| | | |
|---|---|---|
| **தேசபக்தர்** | **சுதந்திரதாகம்** | **அகாலமரணம்** |
| **புலமை** | **வாழ்நாள்** | **மணிமண்டபம்** |
| **கீதங்கள்** | **வீண்நாள்** | **பாரதிவிழா** |
| **இசை** | **ஆயுளெல்லாம்** | **ஞாபகார்த்தம்** |

## கேள்விகள் :

1. *சுப்பிரமணிய பாரதியார் என்னென்ன அரிய குணங்கள் உடையவர் ?*
2. *அவர் தம் ஆயுளெல்லாம் யாருக்காக உழைத்தார் ?*
3. *மணிமண்டபம் எந்த ஊரில் கட்டப்பட்டிருக்கிறது? எதற் காகக் கட்டப்பட்டிருக்கிறது ?*

## பயிற்சி :

1. *ஜவாஹர்லால் நேரு ஒரு தேசபக்தர். ராஜாஜி ஒரு தேச பக்தர். நீ அறிந்த வேறு சில தேச பக்தர்களின் பெயர்களைக் கூறு.*
2. *சத்தியம், அன்பு, பரோபகாரம், தைரியம் இவைகளை வாக்கி யங்களில் வைத்துக் கூறு.*

   *(உதாரணம்) சத்தியமாக கட*



# 28. ரயில் பிரயாணம்

படத்தில் காண்பது ரயில் வண்டித் தொடர். ரயில்வண்டி சாதாரணமான சாலைகளில் செல்லாது; இருப்புத் தண்டவாளங்களின் மேல் ஓடும். தண்டவாளத்திற்கு ரயில் அல்லது இருப்புப் பாதை என்று பெயர். முதலில் ஓர் எந்திர வண்டியைப் பார். அதற்கு எஞ்சின் என்று பெயர். அது நீராவியின் சக்தியால் செல்லக் கூடியது. பல வண்டிகள் ஒன்றோடொன்று தொடர்ந்து இணைக்கப்பட்டு இருக்கின்றன. அதற்கு வண்டித் தொடர் என்று பெயர். அவ் வண்டித் தொடரை எஞ்சின் இழுத்துச் செல்லும்.

எஞ்சினைச் செலுத்துபவருக்கு டிரைவர் என்று பெயர். வண்டிகளில் பிரயாணிகள் ஏறி உட்காருவார்கள்.

ரயில் வண்டி வெகுவேகமாய்ச் செல்லும். ரயிலில் பிரயாணம் செய்வதால் செலவு அதிகம் ஏற்படாது; பயமில்லாமலும் சௌக்கியமாகவும் செல்லலாம்; தூரத்திலுள்ள இடத்திற்கும் விரைவில் செல்லலாம்.

ரயில் பிரயாணத்தால் நாகரிகம் பரவுகிறது; மனிதர்களுள் உறவும் நேசமும் ஏற்படுகின்றன.

ரயில் வண்டிகளில் சாமான்களை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு அனுப்பலாம். அதனால் வர்த்தகம் வளர்கிறது. வெளியூர்களிலிருந்து வரும் பற்பல பொருள்களையும் மனிதர்கள் சுலபமாகப் பெறுகிறார்கள்.

| | | |
|---|---|---|
| ரயில் | சக்தி | டிரைவர் |
| பிரயாணம் | பரவுகிறது | எந்திரம், |
| வண்டித்தொடர் | வர்த்தகம் | இணைக்கப்பட்டு |
| எஞ்சின் | உறவு | இழுத்துச் செல்லும் |
| நீராவி | நேசம் | பிரயாணிகள் |
| சௌக்கியமாக | பயமில்லாமல் | நாகரிகம் |
| தண்டவாளம் | இருப்புப்பாதை | |

கேள்விகள் :

1. ரயில் வண்டி வெற்றுச் சாலையில் ஓடுமா? எப்படிப்பட்ட பாதையில் ஓடும்?
2. வண்டிகளை இழுத்துச் செல்வது எது?
3. வண்டிகள் எவ்வாறு இணைக்கப்பட்டிருக்கின்றன?

பயிற்சி :

1. ரயில் பிரயாணம் ஒன்றைப் பற்றிப் பிள்ளைகளுடன் உரையாடுதல்.
2. ரயில் வண்டி விளையாட்டு.




# 29. கார்டு சொல்லிய கதை

பார்வைக்கு நான் அட்டைத் துண்டு. அதனால் என்னைக் குறைவாக எண்ணாதீர்கள். நான் உலகிற்குச் செய்யும் சேவை பெரிது.

தபாலாபீசில் முக்காலணா கொடுத்து மனிதர்கள் என்னை வாங்குகிறார்கள்; என் உடலில் பல செய்திகளை எழுதுகிறார்கள். மற்றொரு புறத்தில் மேல் விலாசம் குறிக்கப்படுகிறது. பிறகு என்னைக் கொண்டுபோய்த் தபாற் பெட்டிக்குள் இடுகிறார்கள்.

குறித்த நேரத்தில் தபால் சேவகர் அப் பெட்டியைத் திறக்கிறார். என்னை அவர் தபாலா பீசுக்கு எடுத்துச் செல்லுகிறார். அங்கு என் உடலில் முத்திரை குத்தப்படுகிறது. அம் முத் திரையில் தேதியும், நேரமும், புறப்படும் இடமும் குறிப்பிடப்பட்டிருக்கும்.

ரயிலிலும், வண்டியிலும், ஆள் வசமுமாக என்னைச் சேரவேண்டிய இடத்திற்கு அனுப்பு வார்கள். அவ்வூர்த் தபாலாபீசில் எனக்கு மற்றொரு முத்திரை குத்தப்படும். அது நான் போய்ச் சேர்ந்ததற்குக் குறி. அவ்வூர் தபால் சேவகர் என்னை எடுத்துச் சென்று, விலாசதாரிடம் சேர்ப்பிப்பார். அவர் என்னை உற்றுப் பார்த்துச் செய்திகளைத் தெரிந்து கொள்வார்.

ஒவ்வொரு இடத்திற்கும் மனிதர்கள் தாமே நேரில் சென்று செய்திகளைத் தெரிவிப்பது எளி தல்ல. அதனால் அதிக காலம் கழியும்; செலவும் அதிகமாகும்; மற்ற வேலைகளும் கெடும்.

முக்காலணாச் செலவில், வெகு தூரத்தில் உள்ளவர்களுக்கும் நான் செய்திகளைக் கொண்டு போய் அறிவிக்கிறேன். உண்மையில், உலகிற்கு நான் செய்யும் சேவை மிகப் பெரிது அல்லவா!

| | | |
|---|---|---|
| எளிது | மற்ருேரு | தபாலாபீஸ் |
| சேவை | இனத்தார் | எழுதுகிருர்கள் |
| குறி | செய்தி | செல்லவேண்டிய |
| தேதி | குத்தப்படும் | சேரவேண்டிய |
| முத்திரை | மேல்விலாசம் | சேர்ப்பிப்பார் |

## கேள்விகள் :

1. *கார்டிற்கு எத்தனை பாகங்கள் உண்டு?*
2. *செய்திகள் எங்கே எழுதப்படும்?*
3. *மற்ருெரு புறத்தில் என்ன குறிக்கப்படும்?*
4. *முத்திரையில் என்னென்ன விவரங்கள் குறிப்பிடப்பட்டிருக்கும்?*
5. *முக்காலணு கார்டு நமக்குச் செய்யும் உதவி யாது?*

## பயிற்சி :

*கார்டு எழுதப் பழக்கம்; தபாற் பெட்டியைப் பற்றிய சம்பாஷணை; தபாற்காரராக நடித்தல்.*

# 30. உலகநீதி

1. ஓதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம்.
2. ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்.
3. மாதாவை ஒருநாளும் மறக்க வேண்டாம்.
4. வஞ்சனைகள் செய்வாரோடு இணங்க வேண்டாம்.
5. நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்.
6. நல்லிணக்கம் இல்லாரோடு இணங்க வேண்டாம்.
7. தருமத்தை ஒரு நாளும் மறக்க வேண்டாம்.
8. வெஞ்சமரில் புறங்கொடுத்து மீள வேண்டாம்.
9. மதியாதார் வாசல்தனை மிதிக்க வேண்டாம்.
10. கருதாமல் கருமங்கள் முடிக்க வேண்டாம்.
11. காணாத வார்த்தையைக் கட்டுரைக்க வேண்டாம்.
12. புண்படவே வார்த்தைதனைச் சொல்ல வேண்டாம்.
13. புறஞ்சொல்லித் திரிவாரோடு இணங்க வேண்டாம்.
14. துர்ச்சனராய்த் திரிவாரோடு இணங்க வேண்டாம்.
15. தருமத்தை ஒருநாளும் மறக்க வேண்டாம்.

# 31. ஆத்திசூடி

1. அறம் செய விரும்பு.
2. ஆறுவது சினம்.
3. இயல்வது கரவேல்.
4. ஈவது விலக்கேல்.
5. ஊக்கமது கைவிடேல்.
6. எண் எழுத்து இகழேல்.
7. ஏற்பது இகழ்ச்சி.
8. ஐயம் இட்டு உண்.
9. ஒதுவது ஒழியேல்.
10. கண்டொன்று சொல்லேல்.
11. நன்றி மறவேல்.
12. பருவத்தே பயிர் செய்.
13. இளமையில் கல்.
14. சோம்பித் திரியேல்.
15. வைகறைத் துயில் எழு.

சுதந்திர

# தமிழ் வாசகம்

மூன்றும் புத்தகம்

ஆக்கியோர் :

R. நாகராஜ ராவ்,

ஆசிரியர், E. R. ஹைஸ்கூல், திருச்சிராப்பள்ளி.

V. நரசிம்ம அய்யர், B. O. L.,

தமிழாசிரியர், ஸேவா ஸதனம் ஹைஸ்கூல், சென்னை

P.B. 343. TEL "BOOK"

ஸதர்ன் பப்ளிஷர்ஸ்

தெப்பக்குளம், திருச்சி.



[விலை 0-7-0

# முகவுரை

'சுதந்திர தமிழ் வாசகம்' என்னும் பெயருடன் மலரும் இப்புத்தகத்தில் உள்ள பாடங்கள் காலத்திற்கேற்பப் பழையன கழிந்து, புதியன புகுத்தி எழுதப்பெற்றுள்ளன. வகுப்பிற்கேற்பப் படிப்படியான முறையில் வாசிப்பதற்கு வேண்டிய பயிற்சிகளைக் கொடுப்பது என்ற நோக்கத்தையும் அடிப்படையாகக் கொண்டு, விஷயங்களைத் தேர்வதிலும் கவனம் செலுத்தப்பெற்றுள்ளது. உலகவியலில் பொருந்தாதனவற்றை அறவே நீக்கி, சமூக ஒற்றுமையும், பரந்த நோக்கமும், தேச பக்தியும், ஊக்கமும், அளிக்கற்பாலனவாகிய விஷயங்களையே பாட முறையில் அமைத்துள்ளோம். வகுப்புகளைக் கையாண்ட அநுபவத்தைக் கொண்டு வெளியிடப்பெற்றுள்ள இப்புத்தகங்கள் மாணவர்களுக்கு வேண்டிய மொழிப் பயிற்சியையும் நல்லறிவையும் பயக்குமென நம்புகிறோம்.

ஆக்கியோர்.

# பொருளடக்கம்

சுதந்திர

# தமிழ் வாசகம்

## 1. பொங்கல் பண்டிகை

பொங்கல் பண்டிகை தமிழ் நாட்டினருக்கு மிகவும் முக்கியமான ஒரு பண்டிகை. ஒவ்வொரு ஆண்டிலும் தை மாதத்தின் முதல் நாள் இது கொண்டாடப்படும். பொங்கலுக்கு முந்திய நாள் போகிப்



பண்டிகை. பொங்கலுக்கு மறுநாள் மாட்டுப் பொங்கல்.

போகிப் பண்டிகைக்கு இந்திர விழா என்பது பண்டைப் பெயர். போகி என்ற சொல் இந்திரனைக் குறிக்கும். இந்திரனின் அருளால்தான் மழை பெய்

கிறதென்பது நம் நாட்டவரின் நம்பிக்கை. மழை விவசாயத்துக்கு இன்றியமையாதது. ஆகையால் பயிர்கள் விளைந்து அறுவடையானதும் இந்திரனுக்கு நன்றி செலுத்தும் முறையில் இந்திரவிழா கொண்டாடப்படுகிறது.

குடியானவர் பொங்கல் பண்டிகையன்று புதிய நெல்லரிசியைக் கொண்டு பொங்கல் பொங்கி, உறவினரும் நண்பருமாக விருந்துண்டு களிப்பர்.

குடியானவர்களுக்குப் பயிர்த்தொழிலில் உதவி செய்தவை மாடுகளே யல்லவா? அதனால்தான் அவைகளுக்கு நன்றி செலுத்துவதற்காக, மாட்டுப் பொங்கல் கொண்டாடப்படுகிறது. பொங்கலுக்கு மறுநாள் மாடுகளைக் குளிப்பாட்டி அவற்றிற்கு வெல்லப் பொங்கல் வைத்துப் படைப்பார்கள். மாலையில் அவற்றை அலங்கரித்து உற்சாகமாக ஓடவிடுவார்கள்.

பொங்கல் பண்டிகையைச் சங்கராந்தி என்றும் சொல்வதுண்டு. தை மாதம் முதல் நாள் சூரியன் மகர ராசிக்குப் பெயருகின்றது. இது வடமொழியில் மகர சங்கராந்தி எனப்படும். இது முதல் ஆறுமாத காலத்திற்கு உத்தராயணம் என்று பெயர். பெரும்பாலான திருவிழாக்கள் இக்காலத்தில் தான் நடைபெறும். ஆகவே உத்தராயணத்தின் ஆரம்பம் ஒரு மங்கள நாளாகக் கொண்டாடப்படுகிறது.

| | | |
|---|---|---|
| பொங்கல் | முந்திய நாள் | அருள் |
| பண்டிகை | மறுநாள் | அறுவடை |
| போகி | இந்திரன் | விழா |
| மாட்டுப்பொங்கல் | உத்தராயணம் | சங்கராந்தி |
| விருந்து | மகர ராசி | மங்களம் |

கேள்விகள்

1. பொங்கல் பண்டிகை எப்போது கொண்டாடப் படும்?
2. பொங்கலுக்கு முந்திய நாள் என்ன பண்டிகை?
3. மாட்டுப் பொங்கல் எதற்காகக் கொண்டாடப் படும்?

## 2. வாசிக்கும் முறை



படத்திலுள்ள சிறுவனைப் பாருங்கள். அவன் எவ்வாறு தன் புத்தகத்தைப் பிடித்திருக்கிருன்? புத்தகத்தை இடக்கையால் பற்றி, அதை மார் பளவில் உயர்த்திப் பிடித்துக்கொள்ள வேண்டும். முகத்தை மறைக்கும்படி புத்தகத்தைப் பிடிக்கக் கூடாது. தலை குனிந்தபடியே படிக்கக் கூடாது.

வகுப்பில் படிக்கும்பொழுது படிக்கும் விஷ யத்தைக் கண்ணல் பார்த்து மனத்தில் கிரகித்துக்

கொள்ள வேண்டும்; பிறகு முகம் நிமிர்ந்து, வகுப்பைப் பார்த்து வாக்கியத்தைக் கூறவேண்டும். இவ்வாறே ஒவ்வொரு வாக்கியமாகப் படிக்க வேண்டும்.

எல்லா வாக்கியங்களையும் ஒரே குரலில் வாசிக்கக்கூடாது. ஆங்காங்குள்ள கருத்துக்குத் தக்கபடி குரலை உயர்த்தியும் தாழ்த்தியும் வாசிக்க வேண்டும். சொற்களைத் தெளிவாகவும் கேட்போருக்கு விளங்கும்படியாகவும் படிப்பதே நல்ல முறை. கருத்து முடியும் இடங்களில் சிறிது நிறுத்தியும், வியப்பு, அச்சம், வினா முதலியன தோன்றும்படியும், ஏற்றபடி குரலை மாற்றவேண்டும்.

வாசிப்பதற்கு உதவியாக ஆங்காங்கு நிறுத்துக் குறிகள் உபயோகிக்கப்படும். அவை பின் வருமாறு:—

. இது முற்றுப்புள்ளி. ஒவ்வொரு வாக்கியத்தின் முடிவிலும் இது வைக்கப்படும்.

; இது அரைப்புள்ளி. வாக்கியங்கள் இணைந்து வரும்போது, ஒரு சொற்றொடரின் கருத்து முடிந்த இடத்தில் இக்குறி வைக்கப்படும்.

, இது கால்புள்ளி. வாக்கியத்தின் ஒரு பகுதியில் கருத்தைப் பிரித்துக் காட்ட இது உதவும்.

! இது ஆச்சரியக்குறி. அச்சம், வியப்பு, முதலிய உணர்ச்சிகளைக் காட்ட இக்குறி இடப்படும்.

? இது வினாக்குறி. வினா வாக்கியத்தின் முடிவில் இக்குறி இடப்படும்.

“ ” இவை மேற்கோள் குறிகள். ஒருவர் பேசியதை அவர் பேசியபடியே எழுதும்பொழுது இவை உபயோகிக்கப்படும்.

இந்த நிறுத்துக் குறிகளைப் பாடங்களில் ஆங் காங்குக் கவனித்துத் தெரிந்து கொள்ளுங்கள்.

| | | |
|---|---|---|
| மார்பளவில் | தெளிவாக | வியப்பு |
| மறைக்கும்படி | விளங்கும்படி | அச்சம் |
| விஷயம் | தோன்றும்படி | வினு |
| நிமிர்ந்து | ஏற்றபடி | வாக்கியம் |
| ஆச்சரியம் | உணர்ச்சி | மேற்கோள் |

கேள்விகள்

1. வாசிக்கும்போது புத்தகத்தை எப்படிப் பிடித்துக் கொள்ள வேண்டும்?
2. படிக்கும்போது குரலை எப்படி மாற்ற வேண்டும்?
3. நிறுத்துக் குறிகள் யாவை?

பயிற்சி

பின்வரும் சொற்றொடர்களில் தகுந்த இடங்களில் முற்றுப்புள்ளி வைத்து எழுது:—

நான் படிக்கிறேன் இது மூன்றும் பாடப்புத்தகம் இது புதிய புத்தகம் என் தந்தை இதை எனக்கு வாங்கித் தந்தார்

# 3. முன் யோசனையின் அவசியம்

ஒரு மலைக்காட்டில் ஓர் ஆடு இருந்தது. ஒரு நாள் அது எதிரிலிருந்த மற்றொரு மலைக்குப் போய் மேய விரும்பிற்று. இடையில் ஒரு பள்ளத்தாக்கு இருந்தது. அதைக் கடப்பதற்குக் குறுக்கே ஒடுக்க மான ஒரு பாதை இருந்தது. அப்பாதையில் ஒரே ஒரு ஆடுதான் நடக்க முடியும். அப்பாதையின் வழியே அந்த ஆடு நடந்து சென்றது. சிறிது தூரம் சென்றதும், எதிரில் மற்றொரு ஆடு இந்தப் பக்கத்திற்கு வந்து கொண்டிருந்தது.

இரண்டு ஆடுகளும் ஒன்றை நோக்கி மற்றொன்று நடந்தன. அப்பாதையின் நடுமத்தியில் இரண்டும் எதிர் எதிராகச் சந்தித்தன. ஒதுங்கி நடப்பதற்கே இடமில்லை என்றால், திரும்பிச் செல்ல முடியுமா? கோபத்தோடு ஒன்றை யொன்று பார்த்தன. பிறகு தலையோடு தலை மோதிக்கொண்



டன; ஒன்றை யொன்று பலமாக முட்டித்தள்ள ஆரம்பித்தன. கடைசியில் என்ன நேர்ந்தது? இரண்டும் பள்ளத்தாக்கில் விழுந்து இறந்தன.

அதே மலையில் மற்றொரு ஆடு வசித்து வந்தது. ஒரு நாள் அது எதிர்ப்புறத்திற்குச் செல்ல விரும்பிற்று.

முன்கூறிய ஒடுங்கிய பாதையில் அந்த ஆடு நடந்து சென்றது. சிறிது தூரம் சென்றதும் எதிர்ப்புறத்திலிருந்து மற்றொரு ஆடு வருவதைக் கண்டது. இரண்டு ஆடுகளும் அப்பாதையின்

இடையில் எதிர் எதிராகச் சந்தித்தன. ஆனால் இவை முட்டி மோதிக் கொள்ளவில்லை; செங்குத்தான பாதையையும், பள்ளத்தாக்கையும் கவனித்தன; சிறிது நேரம் யோசனை செய்தன.



ஓர் ஆடு கீழே படுத்துக்கொண்டது. மற்றொன்று மெதுவாக அதன்மேல் நடந்து இப்பால் வந்துவிட்டது. உடனே படுத்திருந்த ஆடும் எழுந்து தன் வழியே சென்றது. தம்முடைய மதியால் இரண்டு ஆடுகளும் நன்மை அடைந்தன.

| | | |
|---|---|---|
| இழந்தன | நோக்கி | பள்ளத்தாக்கு |
| மேய | முட்டி | ஒடுக்கமான |
| குறுக்கே | மோதி | எதிர் எதிராக |
| பாதை | மலைக்காடு | சந்தித்தன |
| | யோசனை | |

### கேள்விகள்

1. புத்தியில்லாத ஆடுகள் ஏன் இறந்தன?

2. புத்தியுள்ள ஆடுகள் எவ்வாறு அபாயத்திலிருந்து தப்பின?

3. இப்பாடத்திலிருந்து நீ தெரிந்துகொள்ளும் நீதி என்ன?

### பயிற்சி

1. குறுக்கே, ஒடுக்கமான, எதிர் எதிராக—இந்த வார்த்தைகளை உபயோகித்து ஒவ்வொரு வாக்கியம் எழுது.

2. கீழே தரப்பட்டுள்ள வாக்கியங்களுக்கு முற்றுப் புள்ளி வைத்து எழுது:—

அதே மலையில் மற்றொரு ஆடு வசித்தது ஒரு நாள் அது எதிர்ப்புறத்திற்குச் செல்லவிரும்பிற்று முன்கூறிய ஒடுங்கிய பாதையில் அது சென்றது எதிர்ப்புறத்திலிருந்து மற்றொரு ஆடு வருவதைக் கண்டது.

# 4. திருவள்ளுவர்

தலை சிறந்த தமிழ்ப் புலவர்களுள் திருவள்ளுவர் ஒருவர். திருவள்ளுவரின் பெருமையை எல்லாரும் கொண்டாடுகிறார்கள்.

திருவள்ளுவரின் தாயார் பெயர் ஆதி; தந்தையார் பெயர் பகவன். வள்ளுவர் வாசுகி என்னும் பெண்மணியை மணம் செய்துகொண்டு குடும்ப வாழ்க்கை நடத்தி வந்தார்.

திருவள்ளுவர் தம் வாழ்க்கைக்காக நெசவுத் தொழிலைச் செய்து வந்தார். அவர் அறிவும் ஒழுக்கமும் குன்றாதவர். அவர் தாம் உணர்ந்த அறிவு நுட்பங்களை எல்லோருக்கும் சொல்ல

விரும்பினர். ஆதலால் அவர் திருக்குறள் என்ற ஓர் அரிய நீதி நூல் இயற்றியருளினர்.

திருக்குறள் மிகக் குறுகிய செய்யுட்களால் ஆனது; படிப்பதற்கு எளிது; ஆழ்ந்த கருத்துக் களைக் கொண்டது. திருக்குறளைப் படிப்பது ஒவ்வொரு தமிழனுக்கும் முக்கிய கடமையாகும்.



திருவள்ளுவரின் கொள்கைகள் எல்லாருக்கும் பொதுவானவை. எல்லாச் சமயத்தாரும் திருக்குறளை விரும்புகின்றனர். எல்லா நாட்டினரும் திருக் குறளைக் கொண்டாடுகிறார்கள்.

சிறுவயதிலிருந்தே திருக்குறளை மனப்பாடம் செய்யவேண்டும். அந்நூலை ஆண்பாலாரும் படிக்க லாம்; பெண்பாலாரும் படிக்கலாம்; அனைவரும் படிக் கலாம். திருக்குறளைப் படிப்பதால் உண்மையான அறிவு உண்டாகும்; நல்ல ஒழுக்கம் படியும். அதில்

கூறியுள்ளபடி நடப்பவர்கள் இன்பமும் பெருமையும் அடைவார்கள்.

| | | |
|---|---|---|
| கொள்கை | ஆண்பாலார் | சமயத்தார் |
| சமயம் | பெண்பாலார் | உடன் பிறந்தார் |
| நீதி நூல் | அனைவரும் | அறிவு நுட்பம் |
| மனப்பாடம் | ஒழுக்கம் | ஆழ்ந்த கருத்து |

## கேள்விகள்

1. திருவள்ளுவரின் தாயார் பெயர் என்ன? தந்தையார் பெயர் என்ன ?

2. திருவள்ளுவர் இயற்றிய அரிய நூல் எது ?

3. தமிழரின் கடமை என்ன ?

## பயிற்சி

1. அனைவரும், மனப்பாடம், நெசவுத் தொழில்—இந்த வார்த்தைகளை உபயோகித்து ஒவ்வொரு வாக்கியம் எழுது.

2. கோடிட்ட இடங்களில் தகுந்த வார்த்தைகளை அமைத்து வாக்கியங்களைப் பூர்த்தி செய் :—

திருவள்ளுவர் வாழ்க்கைக்காக — — — செய்து வந்தார்.

திருவள்ளுவரின் கொள்கைகள் எல்லோருக்கும் —,

# 5. வானவில்



தம்பி: அண்ணு, அது என்ன ? வானத்திலே எத்தனை வர்ணங்கள்!

அண்ணன்: ஆம், அதற்கு வானவில் என்று பெயர்.

த: வானவில் என்றல் என்ன அண்ணு? அதில் பல வர்ணங்கள் ஏது ?

அ: அது ஒரு பெரிய வில்லைப்போல் நீண்டு, வளைந்து காணப்படுகிறது; வானத்தில் இருக்கிறது. ஆகையால் அதற்கு வானவில் என்று பெயர்.

த: வானவில் எப்போதும் தெரிகிறதில்லையே! கரிய மேகம் சூழ்ந்திருக்கும் போது மட்டும் அல்லவா தெரிகிறது! அதற்கு என்ன காரணம்? பல நிறங்கள் எவ்வாறு தோன்றுகின்றன ?

தம்பி, அந்நிறங்கள் சூரிய கிரணங்களிலுள்ள நிறங்கள். மேகத்திலுள்ள நீர்த்துளிகளில் சூரிய கிரணங்கள் படும்பொழுது நிறங்கள் பிரிந்து தெரிகின்றன.

த: சூரிய கிரணங்களில் பல நிறங்கள் உண்டா? வெண்மை என்றல்லவா நினைத்திருந்தேன்.

அ: நீ ஒரு பட்டைக் கண்ணாடியை வைத்துக் கொண்டு, சூரிய வெளிச்சத்தில் காட்டி விளையாடுவது உண்டல்லவா! அதில் பல நிறங்கள் தெரிவதைக் கவனித்ததில்லையா!

த: ஆம், பட்டைக் கண்ணாடியில் தெரியும் நிறங்களும் இதே நிறங்கள்தான்.

அ: கண்ணாடியில் அந்நிறங்கள் எவ்வாறு வந்தன? சூரிய ஒளி அதன் வழியே செல்கிறது. அப்போது சூரிய கிரணங்களின் உண்மையான நிறங்கள் பிரிந்து தெரிகின்றன. மேகத்திலுள்ள நீர்த் துளிகளும் கண்ணாடிபோல் தெளிவாக உள்ளவை; ஆகையால் அவற்றின் வழியாகச் சூரிய கிரணங்கள் செல்லும்போதும் அந்நிறங்கள் தெரிகின்றன. இப்போது அந்நிறங்களின் வகைகளைக் கவனித்துச் சொல்லு.

த: வானவில்லில் ஏழு நிறங்கள் காணப்படுகின்றன. சில நிறங்களின் பெயர்கள் எனக்குத் தெரியவில்லை.

அ: ஏழு நிறங்களின் பெயர்களையும் வரிசையாகச் சொல்லுகிறேன். அவைகளை ஞாபகத்தில் வைத்துக்கொள். அவை, ஊதா, கருநீலம், நீலம், பச்சை, மஞ்சள், கிச்சிலி, சிவப்பு என்பன.

| | | |
|---|---|---|
| வர்ணங்கள் | நீர்த் துளி | சூரியகிரணம் |
| வானவில் | கண்ணாடி | பட்டைக் கண்ணாடி |
| மேகம் | ஞாபகத்தில் | சூரிய வெளிச்சம் |

## கேள்விகள்

1. *வானவில் எப்போது தெரியும்?*
2. *வானவில்லில் தெரியும் நிறங்கள் என்னென்ன?*
3. *அவை எவற்றின் நிறங்கள்?*

## பயிற்சி

1. *கோடிட்ட இடங்களில் தகுந்த வார்த்தைகளை அமைத்து எழுது:—*

*வானவில்லில் —— நிறங்கள் காணப்படுகின்றன.*

*மேகத்திலுள்ள நீர்த்துளிகள் —— போல் தெளிவாக உள்ளவை.*

2. *கண்ணாடி, மேகம், நீர், நிறம், வானம், சூரியன், மனிதன், மரம், மாடு, பூச்சி — இவை பொருள்களைக் குறிக்கும் சொற்கள். சில பொருள்கள் உயிருள்ளவை; சில பொருள்கள் உயிர் இல்லாதவை. ஏதேனும் ஒரு பொருளின் பெயராயுள்ள சொல் பெயர்ச் சொல் என்று சொல்லப்படும்.*

3. *பின்வரும் வாக்கியங்களிலுள்ள பெயர்ச் சொற்களைக் கூறு:*

(i) *கண்ணாடி தெளிவாக இருக்கும்.*

(ii) *தோட்டத்தில் மரங்கள் உயரமாக வளர்ந்திருக்கின்றன.*

(iii) *தெருவில் குழந்தைகள் விளையாடுகிறார்கள்.*

## 6. பொறுமையுள்ள சிறுவன்

காவிரி யாற்றின் கரையில் திருவளர் சோலை என்றொரு சிற்றூர் உண்டு. அவ்வூரில் கருணையப்பர் என்றொரு கனவான் இருந்தார். அவர் ஏழைகளிடத்தில் இரக்கம் உடையவர்; சிறுவர்களிடம் அவருக்குத் தனிப் பிரியம் இருந்தது.

தினந்தோறும் அவர் சிறுவர் சிறுமிகளுக்கு ஆளுக்கொரு ரொட்டி கொடுப்பார். ஒவ்வொரு நாள் காலையிலும், திரளான பிள்ளைகள் அவருடைய வீட்டு வாயிலில் கூடுவார்கள். "நான் முன்னே, நீ முன்னே" என்று ஒருவர் மேல் ஒருவர் விழுந்து கொண்டும், ஒருவரை யொருவர் தள்ளிக் கொண்டும் போய் ரொட்டியைப் பெறுவார்கள். கருணையப்பர் நகை முகத்துடனும், பொறுமையுடனும் ஆளுக்கொரு ரொட்டி கொடுப்பார்.

அச்சிறுவர் கூட்டத்தில் குணசீலன் என்பவன் ஒருவன். அவன் ஓர் ஏழைப் பையன். அவன் மட்டும் கூட்டத்தில் சேரமாட்டான்; பொறுமையாக விலகி நிற்பான். எல்லாப் பிள்ளைகளும் வாங்கிக் கொண்ட பின், கடைசியில் கருணையப்பரிடம் சென்று ரொட்டியைப் பெறுவான்.

குணசீலனுடைய அடக்கத்தையும், பொறுமையையும் கருணையப்பர் கவனித்துக்கொண்டே இருந்தார். ஒரு நாள் அவனுக்கு ஒரு வெகுமதி அளிக்க எண்ணினார். ஒரு ரொட்டித் துண்டில் ஒரு பொன்காசை மறைத்துத் திணித்து வைத்திருந்தார். குணசீலன் வழக்கம்போல் கடைசியில் சென்று கையை நீட்டினான்; அவர் கொடுத்த ரொட்டியைக்

களிப்புடன் பெற்றான். வீட்டிற்குச் சென்று அதை விண்டபோது அதனுள்ளிருந்த பொற்காசைக் கண்டான். தவறுதலாக அக்காசு ரொட்டிக்குள் வந்திருக்கக்கூடும் என்று அவன் எண்ணினான். மறுநாள் அக்காசை எடுத்துச் சென்று, வணக்கத்துடன் அதை அவரிடம் கொடுத்தான்.



கருணையப்பர் அக்காசைப் பெற்றுக்கொள்வாரா? "பையா, உன் அடக்கத்திற்கும், பொறுமைக்கும் பரிசாக, நான் இப்பொற்காசை ரொட்டியில் இட்டுக் கொடுத்தேன்; அதை நீயே வைத்துக் கொள்" என்றார்.

| | | |
|---|---|---|
| சிற்றூர் | நகைமுகம் | பொற்காசு |
| கனவான் | அடக்கம் | வேகுமதி |
| திணித்து | களிப்புடன் | பரிசு |

## கேள்விகள்

1. கருணையப்பர் என்பவர் யார்? அவர் எந்த ஊரில் வசித்து வந்தார்?

2. பிள்ளைகள் எவ்வாறு ரொட்டியைப் பெறுவார்கள்?

3. குணசீலன் எவ்வாறு ரொட்டியைப் பெறுவான்?

4. குணசீலனுக்கு கிடைத்த பரிசு என்ன?

## பயிற்சி

1. கீழ்க்கண்ட வார்த்தைகளை உபயோகித்து ஒவ்வொரு வாக்கியம் எழுது:—

நகைமுகம், பொற்காசு, பரிசு, களிப்புடன்.

2. பின்வரும் வார்த்தைகளுக்கு எதிரான அர்த்தமுடைய வார்த்தைகளைச் சொல்லு:

(உதாரணம்: சிறிது × பெரிது)
சிற்றூர், ஏழை, பிரியம், கடைசி.

3. பின்வரும் வாக்கியங்களிலுள்ள பெயர்ச் சொற்களைக் கூறு:

(i) குணசீலன் வழக்கம் போல் கடைசியில் சென்று கையை நீட்டினன்.

(ii) கருணையப்பர் அக்காசைப் பெற்றுக்கொள்வாரா?

(iii) ஒரு நாள் அவனுக்கு வெகுமதி அளிக்க எண்ணினர்.

# 7. பாரத தேசம்

வெள்ளிப் பனிமலையின்
மீதுலவுவோம்—அடி
மேலைக் கடல்முழுதுங்
கப்பல் விடுவோம்;





பள்ளித் தலமனைத்துங்
கோயில் செய்குவோம்
—எங்கள்
பாரத தேசமென்று
தோள் கொட்டுவோம்.

சிங்களத் தீவினுக்கோர்
பாலமமைப்போம்;
சேதுவை மேடுறுத்தி
வீதி சமைப்போம்;





வங்கத்திலோடி வரும்
நீரின் மிகையால்
மையத்து நாடுகளிற்
பயிர் செய்குவோம்.

ஆயுதம் செய்வோம்
நல்ல காகிதம் செய்வோம்;
ஆலைகள் வைப்போம்
கல்விச் சாலைகள் வைப்
[போம்;





ஓயுதல் செய்யோம்;
தலைசாயுதல் செய்யோம்;
உண்மைகள்சொல்வோம்
பல வண்மைகள் செய்
[வோம்.

குடைகள் செய்வோம்
உழுபடைகள் செய்வோம் ;
கோணிகள் செய்வோம்
இரும்பாணிகள் செய்வோம்.





நடையும் பறப்புமுணர்
வண்டிகள் செய்வோம் ;
ஞாலம் நடுங்க வரும்
கப்பல்கள் செய்வோம்.

காவியம் செய்வோம்
நல்ல காடு வளர்ப்
[போம் ;
கலை வளர்ப்போம் ;
கொல்லருலை வளர்ப்
[போம் ;





ஓவியம் செய்வோம்
நல்ல ஊசிகள் செய்வோம்;
உலகத் தொழிலனைத்தும்
உவந்து செய்வோம்.

—பாரதியார்.

| | | |
|---|---|---|
| பனிமலை | ஓயுதல் | ஞாலம் |
| பள்ளித்தலம் | வண்மை | காவியம் |
| சமைப்போம் | உழுபடை | ஓவியம் |
| மிகை | பறப்பு | உவந்து |

**கேள்விகள்**

1. *வெள்ளிப் பனிமலை என்பது எது?*
2. *மேலைக் கடல் எதைக் குறிக்கிறது?*
3. *எந்த நீரைக்கொண்டு மையத்து நாடுகளில் பயிர் செய்வோம்?*
4. *பாரத தேசத்தினர் செய்யப்போகும் தொழில் களில் ஐந்து சொல்லு.*
5. *நடையும் பறப்புமுணர் வண்டிகள் எவை?*

# 8. மயில்

தகப்பனார்: *செல்லமுத்து, உன் புஸ்தகத்திற்குள் என்னென்னவோ வைத்திருக்கிறாயே! புஸ் தகம் கிழிந்து போகாதா!*

சே: *என்னென்னவோ இல்லை அப்பா; மயில் வைத்திருக்கிறேன். அது குட்டி போடும்.*

த: *மயிலா? குட்டியா? நீ பேசுவதே வேடிக்கை யாயிருக்கிறது. அது மயிலுமல்ல, குட்டியும் போடாது.*

சே: *பிள்ளைகள் எல்லாரும் மயில் என்றுதானே சொல்லுகிறார்கள் அதை! வேறு என்ன அப்பா, அது?*

த: *மயில் என்பது ஒரு பறவை; அது கோழியின் இனத்தைச் சேர்ந்தது. அதன் தோகையில் உள்ள இறகில் ஒரு துண்டு இது.*

சே: மயில் எங்கே வசிக்கும்? அதன் தோகை எப்படி இருக்கும்?

த: மயில் உஷ்ண தேசங்களில், சோலைகளில் வசிக்கும். அதன் பின்புறத்தில் தோகை அமைந்திருக்கும். பல இறகுகளின் சேர்க்கையே தோகையாகும்.



சே: மயிலைப் பற்றி இன்னும் சொல்லுங்கள் அப்பா.

த: சொல்லுகிறேன் கேள். உடல் அமைப்பில் மயில் கோழியைப் போலவே இருக்கும். ஆனால் உருவத்தில் கோழியைவிடச் சற்று பெரியது. சாதாரணக் கோழிக்குத் தோகை இல்லை; மயிலுக்குத் தோகை உண்டு. அத்தோகையை அது சில சமயம் விசிறியைப் போல் விரித்துக் கொண்டு ஆடும். மற்ற வேளைகளில், தோகை சுருங்கி நீண்டு காணப்படும்.

சே: மயில் எப்போது ஆடும்? மயில் ஆடுவது அழகாய் இருக்குமா?

த: கார் காலத்தில், மேகத்தைக் கண்டால் மயில் ஆடும். அதன்தோகையில் பல பெரிய புள்ளிகள் காணப்படும்; அவற்றைக் கண்கள் என்று சொல்வதுண்டு. மயிலின் இறகு பீலி எனப் படும்; அது மிருதுவும் அழகும் உடையது. மயிலின் தோகை பச்சை, நீலம், மஞ்சள், கறுப்பு ஆகிய பல நிறங்களும் பொருந்திப் பளபளப்பாக இருக்கும். மயிலின் நடை ஒய்யார மானது. அது ஆடுவது அழகாக இருக்கும்.

சே: கார் காலத்தில் மேகத்தைக் கண்டால் மயில் ஏன் ஆடவேண்டும்?

த: அப்போது குளிர்ந்த காற்று வீசும். குளிர்ந்த காற்றில் மயிலுக்கு மகிழ்ச்சி அதிகம். ஆகை யால் அப்போது அது ஆடுகிறது.

சே: மயிலின் உணவு என்ன?

த: பூச்சி, புழுக்களே மயிலுக்கு முக்கிய உணவு. வளர்ப்பவர்கள் அதற்குத் தவிட்டையும் உண வாக வைப்பார்கள்.

சே: மயிலை மனிதர்கள் வளர்ப்பதுகூட உண்டா? அதனால் மனிதருக்கு என்ன உபயோகம்?

த: அழகுக்காகச் சிலர் மயிலை வளர்ப்பார்கள். வேடர்கள் மயில்களைப் பிடித்து, அவற்றின் தோகை இறகுகளைப் பிடுங்கி விற்பார்கள். அவற்றால் அழகான விசிறிகள் கட்டலாம். மயில் இறகின் அடிப்புறம் மருந்துக்கு உதவும். சிலர் மயிலின் இறைச்சியைத் தின்பார்கள்.

| | | |
|---|---|---|
| என்னென்னவோ | தோகை | கார்காலம் |
| உஷ்ணதேசம் | அமைப்பு | அடிப்புறம் |
| ஒய்யாரம் | மேகம் | இறைச்சி |
| உபயோகம் | வேடர் | பீலி |

## கேள்விகள்

1. மயில் எந்த இனத்தைச் சேர்ந்தது ?
2. மயில் எப்போது ஆடும் ? ஏன் !
3. மயிலின் உணவு என்ன ?

## பயிற்சி

1. கீழேயுள்ள வார்த்தைகளை உன் சொந்த வாக்கியங்களில் உபயோகி :

உபயோகம், கார்காலம், ஒய்யாரம்.

2. கோடிட்ட இடங்களில் சரியான வார்த்தைகளை எழுது :

(i) மயில் — — — இனத்தைச் சேர்ந்தது.

(ii) மயிலின் இறகு — — — எனப்படும்.

(iii) மயில் — — — காலத்தில் மேகத்தைக் கண்டால் ஆடும்.

8. இந்தப் பாடத்தில் முதல் ஐந்து வரிகளிலிருக்கும் பெயர்ச் சொற்களை எழுது.

# 9. திரிசிராமலை



திரிசிராப்பள்ளி ஒரு பழமையான தலம். இவ்வூரின் மத்தியில் ஒரு குன்று விளங்குகிறது. அதற்குத் தாயுமானவர் மலை, அல்லது திரிசிரா மலை என்று பெயர். அது முற்றிலும் கற்பாறையாலானது. வேறு பல குன்றுகளைப் போல் விகாரமாக இல்லை. இம்மலை அழகிய உருவம் உடையது. இதன் உயரம் இருநூற்று ஐம்பது அடி; சுற்றளவு சுமார் ஒரு மைல் இருக்கும்.

இக்குன்றின்மீது ஒரு சிறந்த கோவில் இருக்கிறது. அதற்குத் தாயுமானவர் கோவில் என்று பெயர். பல்லவ மன்னர்கள் அக்கோவிலைக் கருங்கற்களால் கட்டியிருக்கிறார்கள். கருங்கற் பாறையைப் பலவிடங்களில் குடைந்தும், சுற்றிலும் கருங்கல் மதில்கள் எழுப்பியும் கோவில் அமைக்கப்பட்டி

ருக்கிறது. இதனால் நம் முன்னோர்களின் சிறபத் திறமை விளங்குகிறது. மலையின் மேல் செல்லு வதற்கு அழகான படிகளும் கட்டப்பட்டிருக்கின்றன.

மலையைச் சுற்றி நான்கு உள் வீதிகளும், நான்கு வெளி வீதிகளும் அமைந்துள்ளன. வெளி வீதிகள் தேரோடும் வீதிகள். உள் வீதிகள் மிக மேடாக இருக்கின்றன. உள் வீதிகளைச் சுற்றி நான்கு பக்கங்களிலும் மதிற்சுவர்கள் உள்ளன. இவையும் கருங்கற்களால் ஆனவை. விசுவநாத நாயக்கர் என்ற அரசர் இச்சுவர்களைக் கட்டினார் என்பர்.

மலையின் உச்சியில் ஒரு விநாயகர் கோவில் இருக்கிறது. அதற்கு உச்சிப் பிள்ளையார் கோவில் என்று பெயர். முஸ்லிம் பெரியார் ஒருவர் இம் மலையில் தங்கியிருந்தாராம். அதனால் முஸ்லிம்களும் இம்மலையைக் கொண்டாடுகிறார்கள்.

குன்றின் மீது ஏறிச் சுற்றிலும் பார்த்தால் வெகு தூரத்தில் உள்ள இடங்கள் தெரியும். நகரத்திலுள்ள ஆயிரக்கணக்கான வீடுகளும் பார்க்க வெகு அழகா யிருக்கும். காவிரியும், கொள்ளிடமும், ரயில் பாதைகளும், சாலைகளும், கோபுரங்களும், வயல் களும் ஆகிய காட்சிகள் கண்ணைக் கவரும். ஆங்காங்கு நடக்கும் ஜனங்களும், ஓடும் வண்டி களும் மிகச் சிறுத்துத் தெரியும். மலையின் ஒரு புறத்தில் ஒரு மணிக்கூண்டும் கட்டப்பட்டிருக்கிறது. தினமும் குறிப்பிட்ட நேரங்களில் அம்மணி அடிக்கப் படும். அதன் ஒலி வெகு தூரம் கேட்கும்.

திருச்சிராப்பள்ளிக்கு இம்மலையே ஓர் சிறப்பு. வெளியூரார் பலர் இதனைக் காண வருவர். இதன் அழகும், சிறப்பும் கண்கவர்பவை.

| | | |
|---|---|---|
| தலம் | கண்ணைக்கவரும் | தேரோடும் வீதி |
| கோபுரம் | மணிக்கூண்டு | உள் வீதி |
| மதில் | சிற்பம் | வெளி வீதி |
| குன்று | வெளியூரார் | |

## கேள்விகள்

1. திரிசிரா மலைக்கு மற்றொரு பெயர் என்ன?
2. இது பார்வைக்கு எவ்வாறு காணப்படுகிறது?
3. மலையிலுள்ள கோயில்கள் யாரால் கட்டப்பட்டவை?

## பயிற்சி

1. பொருள் கூறு:
   தலம், கண்ணைக்கவரும், வீதி.
2. எதிரான அர்த்தமுள்ள வார்த்தைகளைச் சொல்லு:
   பழமையான, உயரம், உள்வீதி.
3. (i) மரம் **வளர்கிறது**.
   (ii) மயில் **ஆடுகிறது**.
   (iii) ராமன் **படிக்கிறன்**.

மேல் வாக்கியங்களில் தடித்த எழுத்திலுள்ள வார்த்தைகளைக் கவனி. 'மரம்' என்ன **செய்கிறது?**' என்ற கேள்விக்கு '**வளர்கிறது**' என்று விடை கிடைக்கிறது. 'வளர்கிறது' என்ற வார்த்தை வினைச்சொல் என்ற வகையைச் சேர்ந்தது. இதைப்போலவே **ஆடுகிறது, படிக்கிறன்** என்ற வார்த்தைகளும் வினைச்சொற்களாகும்.

இப்பாடத்தின் முதல் பிரிவிலுள்ள வினைச்சொற்களை எழுது.

# 10. அப்பாஜியின் புத்திகூர்மை



சுமார் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் விஜய நகரம் என்னும் ஓர் ஊர் இருந்தது. அங்கே கிருஷ்ணதேவராயர் என்ற அரசர் ஆண்டு வந்தார். அவருக்கு அப்பாஜி என்ற ஒரு மந்திரி இருந்தார். அவர் மிகவும் நுண்ணிய அறிவு உள்ளவர்.

அக்காலத்தில் விஜயநகரத்தில் ஒரு பிரபு இருந்தார். அவரிடம் பதினேழு குதிரைகள் இருந்தன. அவருக்கு மூன்று பிள்ளைகள் உண்டு. சாகுந்தறுவாயில் அவர் தமது பிள்ளைகளை அழைத்து, தமது சொத்தை அவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தார். குதிரைகளை அவர்கள் பங்கிடுவது பற்றி அவர் ஓர் ஏற்பாடு செய்தார். அதன்படி மூத்தவன் மொத்தம் உள்ள குதிரைகளில் பாதிப்பங்கை அடைய வேண்டும்; இரண்டாமன் மூன்றில் ஒரு பங்கு அடைய

வேண்டும்; மூன்றுமவன் ஒன்பதில் ஒரு பங்கு அடையவேண்டும்.

தந்தை இறந்தபின் குமாரர்கள் தங்கள் தங்களுக்கு உரிய சொத்தை எடுத்துக்கொள்ளத் தொடங்கியபோது, குதிரைகளைப் பங்கிட்டு எடுத்துக் கொள்ள முடியவில்லை. இதைக் குறித்து அவர்கள் மந்திரி அப்பாஜியிடம் முறையிட்டுக்கொண்டார்கள். அவர் சிறிது யோசித்துவிட்டு, அவர்களுடைய குதிரைகளை எல்லாம் வரிசையாக ஓரிடத்தில் நிறுத்தி வைக்கும்படி சொன்னார். பிறகு தமது குதிரையையும் அவற்றோடு சேர்த்து நிறுத்திவைக்கச் சொன்னார். பிறகு அக்குமாரர்களைப் பார்த்து "உங்கள் தகப்பனார் கூறியபடி குதிரைகளைப் பங்கிட்டு எடுத்துக்கொள்ளுங்கள்" என்றார்.

இதைக் கேட்ட அக்குமாரர்கள் அப்பாஜியினுடைய குதிரையும் தங்களுக்குக் கிடைக்கும் என்று எண்ணிச் சந்தோஷித்தார்கள். பிறகு மூத்தவன் தனக்குரிய பாதிப் பங்காகிய ஒன்பது குதிரைகளை எடுத்துக்கொண்டான். இரண்டாமவன் தனக்குரிய மூன்றில் ஒரு பங்கு ஆகிய ஆறு குதிரைகளை எடுத்துக்கொண்டான். மூன்றுமவன் தனக்குரிய ஒன்பதில் ஒரு பங்கு ஆகிய இரண்டு குதிரைகளை எடுத்துக்கொண்டான். பிறகு மீதியிருந்த ஒரு குதிரையாகிய தன் குதிரையின்மீது அப்பாஜி ஏறிக் கொண்டு சென்றார்.

இதைப் பார்த்த அந்தப் பிள்ளைகள் மந்திரியினுடைய புத்திசாலித்தனத்தைக் கண்டு ஆச்சரியப் பட்டனர். அவர்கள் தங்களுக்கு முறைப்படி பங்கு கிடைத்ததைப்பற்றிச் சந்தோஷப்பட்டார்கள். தம்

தகப்பனுருடைய ஏற்பாட்டையும் மெச்சிக்கொண்டார்கள்.

| | |
|---|---|
| ஆண்டுகளுக்கு | எடுத்துக்கொண்டான் |
| குமாரர்கள் | சந்தோஷித்தார்கள் |
| சாகுந்தறுவாயில் | சொத்தை |
| நுண்ணிய | பங்கிட்டுக்கொள்ள |
| புத்திசாலித்தனம் | முறையிட்டுக்கொண்டார்கள் |
| மெச்சிக்கொண்டான் | யோசித்துவிட்டு |

## கேள்விகள்

1. அப்பாஜி என்பவர் யார்? அவர் எங்கே இருந்தார்?

2. அப்பாஜி தன் குதிரையையும் வரிசையில் நிறுத்தியபோது பிள்ளைகள் என்ன நினைத்தார்கள்?

3. அப்பாஜி குதிரைகளைப் பங்கிட்ட விதம் எப்படி?

## பயிற்சி

1. பின்வரும் வார்த்தைகளை வாக்கியங்களில் அமைத்துச் சொல்லு :—

முறையிடு, மெச்சு, யோசி, பங்கிடு.

2. இப்பாடத்தின் முதல் பிரிவிலுள்ள வினைச் சொற்களை எழுது.

3. பின்வரும் சொற்களில் எவை பெயர்ச் சொற்கள்? எவை வினைச் சொற்கள்?

அரசர், பிள்ளை, செத்தான், ஓடுகிறது, வரிசை, நின்றான்.

# 11. திருவிழாக்கள்



அநேகமாக எல்லா ஊர்களிலும் திருவிழாக்கள் உண்டு. திருவிழா என்பது ஒரு கொண்டாட்டம். பெரும்பாலும் திருவிழாக்கள் கோவில்கள் சம்பந்தமாகவே நடத்தப்படும். கிராமங்களில் திருவிழாக்கள் வெகு கட்டுப்பாடாக நடைபெறும். ஊரார் எல்லோரும் அதில் பங்கெடுத்துக் கொள்வார்கள். ஒரு கிராமக் கோவிலில் திருவிழா நடைபெற்றால், பக்கத்து ஊர்களிலுள்ளவர்களும் அதைப் பார்க்கச் செல்வார்கள். கிராமவாசிகள் தங்கள் உறவினர்களையும் திருவிழாவிற்கு வரவழைத்து அவர்களுக்கு விருந்து செய்வார்கள்.

தெருக்கள் வெகு அழகாக அலங்கரிக்கப்படும். வீடுகளெல்லாம் கலியாண வீடுகள்போல் மங்களமாக விளங்கும்.

சில பெரிய நகரங்களில் திருவிழாக்கள் வெகு விமரிசையாக நடைபெறும். தூரத்திலுள்ள வெளியூர்களிலிருந்து ஜனங்கள் திரளாக வருவார்கள். வெளியூர்களிலிருந்து அநேக வியாபாரிகள் கடைகளைக் கொண்டு வருவார்கள். வேடிக்கைகள், சங்கீதக் கச்சேரிகள், படக்காட்சி, கூத்து, பிரசங்கம் முதலியனவும் நடைபெறும். ஒரே இடத்தில் பல வகைப் பாத்திரங்கள், துணிமணிகள், கண்ணாடிச் சாமான்கள், மரச் சாமான்கள், நகைகள், நாகரிகப் பொருள்கள் முதலியவைகளைக் கடைகளில் அணி அணியாகப் பார்க்கலாம். வெவ்வேறு இடங்களில் வசிப்பவர்களையும் ஒரே இடத்தில் திரளாகக் காண்பது அழகாக இருக்கும். நாலா பக்கங்களின் நாகரிகங்களையும் திருவிழாக்களால் அறியக்கூடும்.

திருவிழாக்களால் ஏற்படும் பயன்கள் யாவை? மக்களுள் ஒற்றுமையும் நேசமும் பலப்படும். தொழில்கள் விளம்பரம் பெறும். ஆனால் திருவிழாக்களை நல்ல முறையில் நடத்த வேண்டும். கலகக்காரர்களும் திருடர்களும் திருவிழாக்களில் கலந்து கொள்ளாமல் பாதுகாக்க வேண்டும்.

இக்காலத்தில் சங்கங்கள், வாசகசாலைகள், பள்ளிக்கூடங்கள் முதலிய இடங்களிலும் முக்கியமான நாட்களில் விழாக்கள் கொண்டாடப்படும். பெரியார்களின் ஞாபகார்த்தமாகவும் விழாக்கள் நடைபெறுகின்றன. பெரியார்களின் திருவிழாக்களால், அவர்களுடைய சிறந்த தன்மைகள் நமது மனத்தில் பதியும். நாமும் சிறப்படைய வேண்டும் என்ற எண்ணமும் ஏற்படும்.

| | | |
|---|---|---|
| அநேகமாக | காட்சிகளை | காலாபக்கம் |
| திருவிழா | விளம்பரம் | ஞாபகார்த்தம் |
| பெரும்பாலும் | நாகரிகம் | கலகக்காரர்கள் |
| கொண்டாடப்படும் | திரளாக | பதியும் |
| கட்டுப்பாடாக | படக்காட்சி | சிறப்பு |
| விமரிசையாக | கூத்து | பெரியார் |
| வெளியூர் | பிரசங்கம் | |

## கேள்விகள்

1. *திருவிழா என்பது என்ன?*

2. *திருவிழாக்களை எந்த வகையில் கொண்டாட வேண்டும்?*

3. *இக்காலத்தில் எங்கெந்த இடங்களில் விழாக்கள் கொண்டாடப்படுகின்றன?*

## பயிற்சி

1. *கோடிட்ட இடங்களில் தகுந்த வார்த்தைகளை அமைத்து எழுது:*

   (i) *ஊரார் எல்லோரும் — பங்கெடுத்துக் கொள் வார்கள்.*

   (ii) *பெரியோர் ஞாபகார்த்தமாகவும் —— நடை பெறுகின்றன.*

2. *மரம் வளர்கிறது.*
   *மரங்கள் வளர்கின்றன.*

*இந்த இரண்டு வாக்கியங்களுக்கும் உள்ள வித்தியா சத்தைக் கவனி. 'மரம்' என்ற வார்த்தை ஒரு மரத்தைக் குறிக்கிறது. 'மரங்கள்' என்ற வார்த்தை ஒன்றுக்கு மேற்பட்ட (பல) மரங்களைக் குறிக்கிறது. 'மரம்' என்பது ஒருமைச் சொல்; மரங்கள் பன்மைச் சொல். 'வளர்கிறது' என்ற வினைச் சொல் ஒருமை. 'வளர்கின்றன' என்ற வினைச் சொல் பன்மை.*

3. *இந்தப் பாடத்தின் முதல் ஐந்து வரிகளிலுள்ள பெயர்ச் சொற்களை எழுதி ஒருமை பன்மைகளைக் குறிப்பிடு.*

# 12. அறிவில்லாதவர் நட்பு கூடாது



மலையையடுத்துள்ள ஒரு சிறு நாட்டை மதியிலி என்றோர் அரசன் ஆண்டு வந்தான். அவன் "யாரை நம்பக் கூடும், யாரை நம்பக் கூடாது" என்ற பகுத்தறிவு இல்லாதவன். அறிவு இல்லாதவர்களுடன் நட்புக் கொள்ள ஆரம்பித்தான்.

அவனைப் பாதுகாப்பதற்கு உண்மையும், யூகமுமுடைய மெய்க்காவலர்கள் இருந்தார்கள். அவர்களுக்குச் சம்பளம் கொடுப்பது அதிகச் செலவு என்று எண்ணினான். அச்செலவைக் குறைக்க யாது வழியெனச் சிந்தித்தான். அவர்களை வேலையிலிருந்து நிறுத்தி அவர்களுக்குப் பதிலாகச் சில குரங்குகளைப் பிடித்து வந்து, அவைகளையே தனக்கு

மெய்க்காவலாகப் பழக்கிவந்தான். குரங்குகளுக்குச் சம்பளம் கொடுக்க வேண்டியதில்லை அல்லவா! அக் குரங்குகள் எப்போதும் வாளுங் கையுமாக அரசன் அருகிலேயே சூழ்ந்திருக்கும். அரசனைப் பார்க்க விரும்புவோர் சிறிது தூரத்திலேயே எச்சரிக்கை யாக இருப்பர்.

இவ்வாறு இருக்கையில் ஒரு நாள் அரசனுக்குத் தூக்கம் வந்தது. வாளொடு கூடிய குரங்கொன் றைத் தன் அருகே இருக்கும்படி உத்தரவிட்டான். "நான் தூங்கிக்கொண்டிருக்கும் போது யாராவது வந்து என்னைத் தொட்டால், உடனே அவர்களை வெட்டி விடு" என்று அதற்குக் கட்டளையும் இட் டான். பிறகு அரசன் அயர்ந்து தூங்கிவிட்டான்.

அரசன் தூங்கிக்கொண்டிருக்கையில் ஓர் ஈ அவன் கழுத்தின் மேல் வந்து உட்கார்ந்தது. அதைக் கண்டதும் குரங்கு, தன் கையிலிருந்த வாளால் அந்த ஈயை ஒரே வெட்டாக வெட்டிற்று. ஈயுடன் அரசனுடைய கழுத்தும் துண்டாயிற்று. 'ஈயை வெட்டினுல் அரசனும் சாவானே' என்பது குரங்கிற்குத் தெரியுமா?

அறிவில்லாத குரங்கைத் தனக்கு மெய்க் காவ லாக அரசன் ஏற்படுத்தினன். முடிவில் அவனுடைய உயிருக்கே ஆபத்து நேர்ந்தது.

| | | |
|---|---|---|
| அடுத்துள்ள | நம்பக்கூடும் | நம்பக்கூடாது |
| பகுத்தறிவு | இவ்வாறு | எச்சரிக்கையாக |
| சூழ்ந்திருக்கும் | கட்டளை | வெட்டிற்று |
| அரண்மனை | வீண் செலவு | வெகுநாளாகவே |
| தொட்டால் | மெய்க் காவலர் | பாதுகாப்பதற்கு |
| வாளுங்கையுமாக | உத்தரவிட்டான் | முடிவில் |

### கேள்விகள்

1. மதியிலி எவ்வித யோசனை இல்லாதவன்?
2. யாரை அவன் வேலையிலிருந்து நீக்கினான். ஏன் அவன் அவ்வாறு செய்தான்?
3. அவனுடைய உயிருக்கு ஏன் ஆபத்து நேர்ந்தது?

### பயிற்சி

1. எதிர்ப் பதங்கள் எழுது:
   நட்பு, உண்மை, சாவான்.
2. உன் சொந்த வாக்கியங்களில் உபயோகி:
   கட்டளை, வீண் செலவு, பகுத்தறிவு.
3. கீழ்க்கண்ட வார்த்தைகளில் ஒருமை, பன்மை பிரித்துக் கூறு:
   மலை, காடுகள், புத்தகங்கள், அவை, ராமன் மாணவர், அது.
4. பின்வரும் வாக்கியங்களில் ஒருமைக்குப் பதில் பன்மை உபயோகி:
   (i) நாய் ஓடுகிறது.
   (ii) ஆசிரியர் கற்பித்தார்.
   (iii) மாணவன் படிப்பான்.

## 13. ஆலமரம்

பிள்ளைகளே! உங்களில அநேகர் ஆலமரத்தைப் பார்த்திருப்பீர்கள். நமது நாட்டில் காணப்படும் பலவகை மரங்களுள் ஆலமரம் மிகப் பெரியது. ஆலமரத்தின் கிளைகளிலிருந்து விழுதுகள் தொங்கும். விழுதுகள் நாளடைவில் பூமிக்குள் இறங்கி ஊன்றிவிடும். பிறகு அவையும் அடிமரம் போல் பருத்துவிடும். முற்றிலும் வளர்ந்த ஆலமரமானது பல தூண்களோடு கூடிய மண்டபம் போல் காட்சி

தரும். ஆகையால் ஆலமரத்தின் அடியில் பரந்த நிழல் இருக்கும்.

வழிப் போக்கர்கள் ஆலமரத்தின் அடியில் நிழலுக்காகத் தங்குவார்கள். நூற்றுக் கணக்கான மக்கள் அதன் அடியில் தங்கலாம்.

இவ்வளவு பெரிய ஆலமரம் எவ்வாறு வளர்கிறது? அதன் பழங்களைப் பார்த்திருக்கிறீர்களா? அது வேப்பங்கனியின் அளவு பருத்திருக்கும்; மேற்



புறம் சிவப்பு நிறமாக இருக்கும்; அதனுள் பல விதைகள் இருக்கும். அவ்விதைகள் உருவில் மிகச் சிறியவை.

கிளிகளும், காகங்களும் ஆலம் பழங்களை வெகு பிரியமாகத் தின்னும். அப் பழங்களைத் தின்றபின், அவை உமிழும் எச்சத்திலிருந்து சிறு விதைகள் பல இடங்களில் விழுந்து பூமியில் பதியும். அவ்விதைகளிலிருந்து தோன்றும் மரமே இவ்வளவு பெரிதாக

ஆகின்றது. மிகச் சிறு அளவையுடைய ஆலம் விதையின் வல்லமையைப் பார்த்தீர்களா!

இதனால் நாம் அறியும் உண்மை யாது? நாம் எவரையும் உருவத்தைக் கொண்டு மதிக்க முடியாது. உருவத்திற் சிறியவர்களாயிருப்பவர்களும் செய்கையில் பெரியவர்களாய் இருப்பதுண்டு.

| | | |
|---|---|---|
| விழுதுகள் | ஊன்றிவிடும் | காட்சிதரும் |
| பரந்த | உமிழும் | எச்சம் |
| மதிக்க | செய்கை | பதிந்து |
| பருத்துவிடும் | வழிப்போக்கர் | தங்குவார்கள் |
| வேப்பங்கனி | மேற்புறம் | |

கேள்விகள்

1. ஆலமரம் எதிலிருந்து முளைக்கிறது?
2. வளர்ந்த ஆலமரம் எவ்வாறு காட்சி தரும்?
3. ஆலமரம் வழிப்போக்கர்களுக்கு எவ்வாறு உதவுகிறது?

பயிற்சி

1. எதிர்ப்பதங்கள் எழுது :—

பரந்த, மேற்புறம், முடியாது.

2. கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை அமைத்து எழுது :—

(i) ஆலமரத்தின் கிளைகளிலிருந்து —— தொங்கும்.
(ii) ஆலமரத்தின் அடியில் —— நிழல் இருக்கும்.
(iii) ஆலம் விதைகள் உருவில் ——

3. கீழேயுள்ள வாக்கியங்களில் பன்மைக்குப் பதில் ஒருமை உபயோகி :

(i) விதைகள் உருவில் சிறியவை.
(ii) வழிப் போக்கர்கள் நிழலில் தங்குவார்கள்.
(iii) கிளிகளும், காகங்களும் ஆலம் பழங்களை வெகு பிரியமாகத் தின்னும்.

# 14. சுட்ட பழமும் சுடாத பழமும்



ஔவைப் பிராட்டியைப்பற்றி நீங்கள் அறிவீர்கள். ஔவையார் கல்வியிற் சிறந்த ஓர் அம்மையார். ஏழைகளிடத்தில் ஔவையாருக்குப் பிரியம் அதிகம். அவர் பொருளில் ஆசை இல்லாதவர். பசிக்குக் கூழ் கொடுத்தாலும் ஒரு பாட்டைப் பாடுவார். சிறுவர், சிறுமிகள் படிப்பதற்குத் தக்கபடி பல நூல்களை ஔவையார் அருளிச் செய்திருக்கிறார்; பெரியவர்கள் படிக்கக்கூடிய நூல்களையும் அவர் இயற்றியிருக்கிறார். ஔவையாரின் நூல்களை யாவரும் விரும்பிக் கற்பர். "ஔவையார் வாக்கு அமுத வாக்கு" என்பது பழமொழி.

ஔவையார் ஒருநாள் ஒரு சாலையின் வழியே சென்று கொண்டிருந்தார். அந்தச் சாலையின் இரு பக்கங்களிலும் மரங்கள் வரிசையாக வளர்ந்திருந்தன. அவற்றின் இடையே பல நாவல் மரங்களும்

இருந்தன. அப்போது ஆவணி மாதம். ஆகலால் அந்த நாவல் மரங்களில் பழங்களும், காய்களும் தளதளவென்று காணப்பட்டன. அப் பழங்களைக் கண்ட ஔவையார், அவற்றில் சிலவற்றைத் தின்ன வேண்டும் என்று விரும்பினார்.

ஔவையார் வயது முதிர்ந்தவர்; மரங்களின் மேலே கிளைகளில் உள்ள பழங்களை எவ்வாறு பறிக்க முடியும்! யாராவது இருக்கிறார்களா வென்று சுற்றிலும் பார்த்தார்; மேலே அண்ணாந்து நோக்கினார். மரக்கிளை ஒன்றின் மேல் ஓர் இடைப் பையனைக் கண்டார்; அவன் பழங்களைப் பறித்துப் பறித்துத் தின்று கொண்டிருந்தான்.

ஔவையார் அவனைப் பார்த்துத் தனக்குச் சில பழங்களைப் பறித்துப் போடும்படி கேட்டார். அதற்கு அவன், "பாட்டி, சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா?" என்று கேட்டான். ஔவையார் திகைத்தார். "பழங்கள் சுடுவது ஏது? இவன் கூறுவது வேடிக்கையாக இருக்கிறதே! இவன் எவ்வாறு பொருள் கொண்டு கூறினான் என்று தெரியவில்லையே!" என்று தமக்குள்ளே யோசித்தார். பிறகு அவனைப் பார்த்து, "பையா, சுட்ட பழங்கள் சில போடு" என்றார்.

உடனே அச்சிறுவன் கனிந்த பழங்கள் சிலவற்றைக் கீழே போட்டான். அவற்றில் மண் ஒட்டிக் கொண்டது. ஔவையார் அவற்றிலிருந்த மண்ணை ஊதி அகற்றினார். அதைப் பார்த்துக்கொண்டிருந்த சிறுவன் "பாட்டி, பழம் சுடப் போகிறது; நன்றாக ஊது" என்று கூறி நகைத்தான்.

சுட்ட பழம் என்றால் கனிந்த பழம் என்று ஔவையார் தெரிந்து கொண்டார். "புலமை

மிருந்த எனக்கு இச்சொல்லின் பொருள் விளங்க வில்லையே! புத்தகப் படிப்பை அறியாத இடைச் சிறுவன் 'சுட்ட பழம்' என்பதன் பொருளைத் தெரிவித்தான். ஆகையால் ஊரார் பலருடன் பழகப் பழக, அறிவு வளர்ச்சி அடையும்" என்று அவர் தமக்குள் சொல்லிக்கொண்டார்.

| | | |
|---|---|---|
| ஔவைப்பிராட்டி | கூழ் | ஓட்டிக்கொண்டது |
| அம்மையார் | நாவல் மரம் | புத்தகப்படிப்பு |
| அருளிச்செய்து | அண்ணுந்து | பழகப் பழக |
| இயற்றி | திகைத்தார் | அல்லும் பகலும் |
| அமுதவாக்கு | வேடிக்கை | பொருள் |

கேள்விகள்

1. இடைப்பையன் என்ன செய்து கொண்டிருந்தான்?

2. சிறுவன் ஔவையாரைப் பார்த்து என்ன கேட்டான்?

3. அறிவு எப்போது வளர்ச்சி அடையும்?

பயிற்சி

1. கீழ்க்கண்ட வார்த்தைகளை வாக்கியங்களில் உபயோகி:

இயற்றினர், அண்ணுந்து, திகைத்தார்.

2. எதிரான அர்த்தமுள்ள வார்த்தைகளைக் கூறு:—
ஏழை, இருக்கிறது, பார்த்து.

3. கீழேயுள்ள வாக்கியங்களில் ஒருமைச் சொல்லுக்குப் பன்மையும் பன்மைக்கு ஒருமையுமாக மாற்றி எழுது:

(i) மாணவர்கள் ஓடுகிருர்கள்.

(ii) புலி மானைத் தூக்குகிறது.

# 15. ஆறு



கல்லும் மலையும் குதித்து வந்தேன்—பெருங்
காடும் செடியும் கடந்து வந்தேன் ;
எல்லை விரிந்த சமவெளி எங்கும் நான்
இறங்கித் தவழ்ந்து தவழ்ந்து வந்தேன்.

கட்டும் அணையேறிச் சாடிவந்தேன்—அதன்
கண்ணறை தோறும் நுழைந்து வந்தேன் ;
திட்டுத் திடர்களும் சுற்றிவந்தேன்—மடைச்
சிப்புகள் மோதித் திறந்து வந்தேன்.

காயும் நிலத்தழல் ஆற்றிவந்தேன்—அதில்
கண்குளி ரப்பயிர் கண்டு வந்தேன் ;
ஆயும் மலர்ப்பொழில் செய்து வந்தேன்—அங்கென்
ஆசைதீர விளையாடி வந்தேன்.

ஏறாத மேடுகள் ஏறிவந்தேன்—பல
ஏரி குளங்கள் நிரப்பி வந்தேன்;
ஊறாத ஊற்றிலும் உட்புகுந்தேன்—மணல்
ஓடைகள் பொங்கிட ஓடிவந்தேன்.

அல்லும் பகலும் அலைந்து வந்தேன்—எங்கள்
ஆழி இறைவனைக் காணவந்தேன்;
நில்லும் எனக்கினி நேரமில்லை—இன்னும்
நீண்டவழி போகவேண்டும் அம்மா.

—தேசிகவிநாயகம் பிள்ளை

| | | |
|---|---|---|
| ஆழி | எல்லை | மடை |
| இறைவன் | விரிந்த | மோதி |
| ஆற்றி | தவழ்ந்து | அழல் |
| ஆயும் | சாடி | பொழில் |
| கடந்து | கண்ணறை | ஊற்று |

கேள்விகள்

1. ஆறு மலையில் எப்படி வந்தது? சமவெளியில் எப்படி வந்தது?

2. குளங்களிலும் ஏரிகளிலும் ஆறு எப்படிப் பாய்ந்து வந்தது?

3. ஆறு பாய்ந்ததால் சமவெளியில் ஏற்பட்ட இரண்டு மாறுதல்களைச் சொல்லு.

# 16. ஆகாய விமானம்



பிள்ளைகளே, ஆகாய விமானத்தை நீங்கள் பார்த்திருப்பீர்கள். மனிதர் ஆகாயத்தின் வழியாகப் பிரயாணம் செய்வதற்கு உபயோகப்படும் ஒருவகை வாகனம் அது. அது எப்படி அமைந்திருக்கிறது? பார்வைக்கு அது ஒரு பறவையைப்போல் இருக்கிறது அல்லவா? பறவைக்கு இருப்பது போலவே அதற்கும் இரண்டு இறக்கை போன்ற பாகங்கள் உள்ளன. உடலும் பறவையைப் போலவே அமைந்திருக்கிறது. பறவையின் பாதம்போல் அதற்கு இரண்டு சக்கரங்கள் அமைந்துள்ளன. ஆகாய விமானம் பூமியின் மேல் செல்லுவதற்கு இந்தச் சக்கரங்கள் உபயோகப்படும்.

ஆகாய விமானங்களில் பலவகை உண்டு. அவைகளைப் படத்தில் பாருங்கள். அவை இரட்டைச் சிறகு விமானம், ஒற்றைச் சிறகு விமானம், பிரயாணிகளை ஏற்றிச் செல்லும் விமானம், போர் புரிவதற்கு உரிய விமானம், குண்டுபோடும் விமானம், கடல் விமானம் முதலியன. இந்த விமானங்கள் ஆகாயத்தில் மணிக்குச் சுமார் 200 மைல் வீதம்

செல்லும். தூர தேசங்களுக்குத் தபாற்கடிதங்களைச் சீக்கிரத்தில் கொண்டு செல்வதற்கு ஆகாய விமானம்









மிகவும் ஏற்றது. மனிதர் தூரதேசப் பிரயாணம் செய்ய வேண்டுமானாலும், இதன் மூலம் சீக்கிரம் போய்ச் சேரலாம்.

ஆகாய விமானம் கண்டுபிடிக்கப்பட்டுச் சுமார் நாற்பது வருஷங்களே ஆகின்றன. ஆனால் மனிதர் நீண்டகாலமாகவே ஆகாயத்தில் பறக்க முயற்சி செய்து வந்திருக்கின்றனர். முதல் முதல் புகைக்

கூண்டு கண்டுபிடிக்கப்பட்டது. அது ஆகாயத்தில் காற்று வீசும் பக்கமாகவே செல்லும். மேலும் மனிதர் தம் இஷ்டப்படி குறித்த திசையில் குறித்த வேகத்தில் அதைச் செலுத்த முடியாது. பறக்கும் முயற்சிக்கு அது பயன்படவில்லை. அப்பால் நீண்டகாலம் அறிஞர் பலர் ஆராய்ச்சிகள் செய்து தற்போது உள்ள ஆகாய விமானங்களைக் கண்டு பிடித்தனர்.



| | | |
|---|---|---|
| ஆகாயவிமானம் | ஒற்றை | தூரதேசங்கள் |
| ஆராய்ச்சி | குறித்த திசை | நீண்டகாலமாய் |
| இரட்டை | குறித்த வேகம் | பிரயாணம் |
| இறக்கை | சுமார் | புகைக்கூண்டு |
| ஏற்றது | தற்போது | விமானம் |

## கேள்விகள்

1. ஆகாய விமானம் எதைப்போல் அமைந்துள்ளது?
2. ஆகாய விமானத்தின் வகைகளைக் கூறு.
3. ஆகாய விமானத்தின் முக்கிய உபயோகங்கள் என்ன?

## பயிற்சி

1. கீழ்க்கண்ட வார்த்தைகளை வாக்கியங்களில் உபயோகி:

ஆராய்ச்சி, ஏற்றது, பிரயாணம்.

2. பின்வரும் சொற்களைப் பெயர்ச் சொல், வினைச் சொல் என்று பிரித்து எழுது:

பெண், வீடு, பறக்கிறது, ஓடுகிறார்கள், மனிதர், வந்தது, சாப்பிடு, வேடன்.

3. கோடிட்ட இடங்களில் பெயர்ச் சொற்களை அமைத்துப் படி.

(i) ஆகாய — கண்டுபிடிக்கப்பட்டு, சுமார் சாற்பது — ஆகின்றன.

(ii) ஆகாய — ஒரு — போல் அமைந்துள்ளது.

# 17. பாரியின் கருணை

முன்னொரு காலத்தில் தமிழ் நாட்டில் பாரி என்றொரு அரசன் இருந்தான். அவன் ஆண்டு வந்த நாட்டிற்குப் **பரம்புநாடு** என்று பெயர். பரம்பு நாடு ஒரு மலை நாடு; காடுகளும் சோலைகளும் நிறைந்தது. அச் சோலைகளிலுள்ள செடிகளும் தருக்களும் பார்ப்பவர் கண்களைக் கவரும். பாரி மன்னன் அடிக்கடி அச் சோலைக்குச் செல்வான். அங்குள்ள இயற்கையின் அழகைக் கண்டு மகிழ்வான்.

வழக்கம் போல் ஒரு நாள் அவன் ஒரு சோலையைக் கண்ணுறச் சென்றான். அங்கு வளர்ந்திருந்த பூச் செடிகள் அவனுடைய கவனத்தை இழுத்தன. மலர்களின் மணம் அவனை மகிழச் செய்தது. அவற்றுள் ஒரு முல்லைக்கொடி இலைகள் தழைத்தும், மலர்கள் நிறைந்தும், பார்வைக்கு வெகு அழகாகக் காணப்பட்டது. அக்கொடி நாலா பக்கங்களிலும் பரவி ஓடுவதற்குப் பிடிமானம் போதாமல் வாடுவதையும் மன்னன் கண்டான்.

"இம் முல்லைக்கொடியும் ஓர் உயிர்தானே! இவ்வாறு இது படருவதற்கு இடமில்லாமல் வருந்துதல் கூடுமோ?" என்று சிந்தித்தான். தான் ஏறி வந்த தேரை அதற்கு ஆதரவாக நிறுத்தினான். பிறகு கால் நடையாகவே தன் அரண்மனைக்குச் சென்றான்.



பாரியின் கருணைதான் என்னே! தாவர இனமாகிய முல்லைக் கொடி வருந்துவதைக் கண்டு மன்னன் மனம் இரங்கினான். பறவை, விலங்கு முதலிய ஏனைய உயிர்களிடத்தில், எவ்வளவு கருணை உள்ளவனாக இருந்திருப்பான்! பகுத்தறிவு உடைய மனிதர்களை எவ்வளவு அருமையாகப் பாதுகாத்திருப்பான்!

பாரியின் பெருமையை யாவரும் புகழ்கிறார்கள். "கொடையிற் சிறந்த வள்ளல்" என்று அவன் போற்றப்படுகிறான்.

| | | |
|---|---|---|
| தரு | கண்ணுற | வாடுவது |
| கருணை | அருமையாக | படருவது |
| ஏனைய | பிடிமானம் | ஈகை |
| கோடை | வள்ளல் | பாதுகாத்து |

## கேள்விகள்

1. *பாரி எந்த நாட்டை ஆண்டு வந்தான்?*

2. *முல்லைக் கொடி எவ்வாறு வாடிற்று? அதற்கு மன்னன் என்ன உதவி செய்தான்?*

3. *பாரியை யாவரும் எப்படிப் புகழ்கிறார்கள்?*

## பயிற்சி

1. *எதிரான அர்த்தமுடைய வார்த்தைகளை எழுது:*
*பெருமை, மகிழ்வான், கூடும்.*

2. *பின் வரும் வாக்கியங்களின் பகுதிகள் மாறி எழுதப்பட்டுள்ளன; அவற்றைச் சரியானபடி சேர்த்து எழுது:—*

| | |
|---|---|
| (i) *முல்லைக் கொடி* | *சோலைகளுக்குச் செல்வான்.* |
| (ii) *பாரியின் பெருமையை* | *அழகாகக் காணப்பட்டது.* |
| (iii) *பாரி மன்னன்* | *யாவரும் புகழ்கிறார்கள்.* |

3. *கோடிட்ட இடங்களில் வினைச் சொற்களைச் சேர்த்துப் படி:—*

(i) *தமிழ் நாட்டில் பாரி என்ற அரசன் ஒருவன்——.*

(ii) *பூச் செடிகள் அவனுடைய கவனத்தை — —.*

(iii) *பாரி மன்னன் முல்லைக் கொடிக்கு மனம் — —*

# 18. காகிதம் சொல்லிய கதை



நான் ஒரு பரோபகாரி. உலகத்தில் என்னை அறியாதவர்கள் இல்லை. கோடீசுவரரும் என்னைத் தேடுகிறார்கள்; பிச்சைக்காரர்களும் என்னைத் தேடுகிறார்கள்; அரசாங்கத்திலும் நான் முன்னே நிற்கின்றேன். நீதி மன்றங்களில் என்னை முன்னே வைத்துக்கொண்டே வழக்குகள் தீர்க்கப்படுகின்றன. கலைகள் பலவும் என்னிடத்தில் அடங்கியிருக்கின்றன.

இவ்வளவு பெருமைகள் பொருந்திய நான் சில சமயம் குப்பை மேட்டிலும் கிடப்பேன். சிறுவர்கள் என்னைப் பட்டம் கட்டிப் பறக்க விடுவார்கள். கடைக்காரர்கள் என்னைக் கிழித்தும், ஒட்டியும், மடித்தும் சாமான்களைச் சுமக்கச் செய்வார்கள்; நான் பொறுமையுடன் எல்லாருக்கும் ஊழியம் செய்கிறேன்.

இவ்வளவு கருத்தாக நீங்கள் என்னுடைய கதையைக் கேட்கிறீர்களே! என்னுடைய பிறப்பைப்பற்றி நீங்கள் அறிவீர்களா? பிறந்த இடத்தைக்கொண்டு என்னை யாரும் இழிவாக நினைக்கக் கூடாது. இழிவான இடத்தில் பிறந்தவர்களும் அரிய செய்கைகளால் பெரியவர்கள் ஆவார்கள். காட்டில் விளையும் புற்களும், வைக்கோலும், மூங்கிலும், மரப் பட்டைகளுமே எனக்குப் பிறப்பிடம்.

மேற்கூறிய பொருள்களைத் தூள் செய்தும், ஊறவைத்தும், வேகவைத்தும், நல்ல கூழ்போல் செய்வார்கள். பிறகு அந்தக் கூழைப் பரவலாகப் பரப்பி உலர்த்தினால் நான் என்னுடைய உருவத்துடன் விளங்குவேன். உழைப்பிற்கும் சேர்க்கைக்கும் தக்கபடி நான் நேர்த்தியாக ஆவேன்.

பண்டைக் காலத்தில் இந்நாட்டிலுள்ள குடிசைத் தொழிலாளிகளால் நான் வளர்ந்து வந்தேன். இக்காலத்தில் பெரிய எந்திரங்களின் மூலமாக நான் பெருகி வருகிறேன். பத்திரிகைகளும், புத்தகங்களுமாக நான் நாளுக்கு நாள் பெருகுகிறேன். என்னால் தான் கோடிக்கணக்கான மக்கள் அறிவு பெறுகிறார்கள். மக்கள் தம் உறவினருக்கும், மற்றோருக்கும் செய்திகளை அறிவிக்க என்னைத் தூதாகத் தேடுகிறார்கள். பல அலங்கார வேலைகளுக்கும் உதவும்படி நான் பல வர்ணங்களிலும் விளங்குகிறேன். உண்மையில் நான் ஒரு பரோபகாரி அல்லவா?

| | | |
|---|---|---|
| பரோபகாரி | வழக்கு | மரப்பட்டை |
| கோடீசுவரர் | சேர்க்கை | ஊழியம் |
| நீதிமன்றம் | பத்திரிகை | வேகவைத்து |
| அரசாங்கத்தார் | அலங்காரவேலை | ஊறவைத்து |

### கேள்விகள்

1. காகிதம் செய்வதற்கு உபயோகப்படும் பொருள்கள் எவை?

2. காகிதம் எக்தெந்த வகைகளில் உபயோகப் படுகிறது?

3. முற்காலத்தில் காகிதம் யாரால் செய்யப்பட்டது? இக்காலத்தில் எவ்வாறு பெருகி வருகிறது?

### பயிற்சி

1. பின் வரும் வார்த்தைகளை உபயோகித்து வாக்கியங்கள் எழுது:
 பரோபகாரி, நீதிமன்றம், ஊழியம்.

2. பின் வரும் சொற்களுக்குப் பன்மை கூறு:
 மனிதன், செய்தி, அது, போகிறது, வருகிறான், சென்றது.

3. பின் வரும் சொற்களுக்கு ஒருமை கூறு:
 மாடுகள், அவை, நாங்கள், வளர்ந்தன, பெறுகிறார்கள், பழங்கள்.

## 19. கடிதம் எழுதுதல்

வேறு ஊர்களிலுள்ள நமது உறவினர்களுக்கோ, அல்லது சிநேகிதர்களுக்கோ நாம் ஏதாவது விஷயம் தெரிவிக்க வேண்டுமானால் என்ன செய்கிறோம்? கடிதம் எழுதித் தபாலில் போடுகிறோம் அல்லவா? கடிதம் எப்படி எழுதுவது என்பதை இப்போது கவனிப்போம்.

செய்திகள் கொஞ்சமாக இருந்தால் தபாலாபீசில் ஒரு கார்டு வாங்கி அதில் எழுதலாம். சமாசாரங்கள் அதிகமாகவும், இரகசியமாகவும் இருந்தால் கவர் உபயோகிக்க வேண்டும். கவர் என்பது

ஒரு சிறிய காகித உறை ஆகும். கவர், கார்டு இவற்றின் மேல் ஒரு பக்கத்தில் அரசாங்கத் தலைவரின் தலை முத்திரை அச்சிடப்பட்டிருக்கும். அந்த முத்திரையில் தபால் கட்டணமும் குறிப்பிட்டிருக்கும். அதற்கு ஸ்டாம்பு என்று பெயர். கார்டிற்குக் கட்டணம் முக்காலணா; கவருக்குக் கட்டணம் இரண்டு அணா.




கார்டில் ஸ்டாம்பு உள்ள பக்கத்தில் மேல் விலாசமும், மற்றொரு பக்கத்தில் செய்திகளும் எழுத வேண்டும். கவரை உபயோகிக்கும்போது, ஸ்டாம்பு உள்ள பக்கத்தில் மேல் விலாசம் எழுத வேண்டும்; ஒரு வெற்றுக் காகிதத்தில் செய்திகளை எழுதி, அதை மடித்து அவ்வுரைக்குள் இட்டு, உறையை ஒட்டிவிட வேண்டும்.

கடிதம் எழுதுவதற்குத் தபாலாபீசில் கொடுக்கப்படும் கார்டு அல்லது கவரைத் தவிர, வேறு அட்டைத் துண்டு அல்லது உறையையும் உபயோ

க்கலாம். ஆனால் அவற்றின் மேற்பக்கத்தில் தபால் ஸ்டாம்புகளைத் தனியே வாங்கி ஒட்ட வேண்டும். இந்தியத் தபால் ஸ்டாம்புகள் தபாலாபீசுகளில் விற்கப்படும். அவை காலணா முதற்கொண்டு பல வேறு விலையுள்ளவை. விலைகள் மாறுபடுவதற் கேற்பப் பல வேறு நிறமுடையவை.

இனி, கடிதம் எழுதும் முறையைக் கவனிப் போம். மாதிரிக் கடிதத்தில் உள்ளதுபோல், மேலே வலது கோடியில் இடமும் தேதியும் குறிக்க வேண்டும். இடது பக்கத்தில் இன்னாருக்கு இன்னார் எழுதியது என்ற விவரம் எழுதவேண்டும். பிறகு விஷயங்களை எழுத வேண்டும். கடைசியில், வலது பக்கத்தில் எழுதுவோரின் கையெழுத்து இட வேண்டும். பெரியவர்களுக்குக் கடிதம் எழுதும் போது, நமஸ்காரம் அல்லது வணக்கம் என்றும் சிறிய வர்களுக்கு எழுதும்போது, ஆசீர்வாதம் அல்லது நலம் உண்டாகுக என்றும் தொடங்க வேண்டும்.

மேல் விலாசத்தில், யாருக்கு எழுதுகிறோமோ அவருடைய பெயர், இருப்பிடம், ஊர், போஸ்டு ஆகிய விவரங்களைத் தெளிவாக எழுத வேண்டும். மேற்புறத்தில், இடது கோடியில் அனுப்புவோரின் விலாசமும் குறிக்கலாம்.

## மாதிரிக் கடிதம்

திருச்சிராப்பள்ளி,
10—6—48.

அன்புமிக்க மாமா அவர்களுக்குப் பொன்னம் பலம் வணக்கம். இவ்விடம் எல்லாரும் க்ஷேமம். அவ்விடத்திய க்ஷேமங்களுக்கு அடிக்கடிக் கடிதம் எழுத வேண்டுகிறேன்.

நான் இப்போது மூன்றுவது வகுப்பில் படிக்கிறேன். அப்பா புதிய புத்தகங்கள் வாங்கிக் கொடுத்தார். நான் அவற்றைக் கவனமாகப் படித்து வருகிறேன். தாங்கள் இங்கு வரும்போது எனக்கு ஒரு பட்டுச் சொக்காய் கொண்டு வந்து கொடுக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். என் வணக்கத்தை அத்தை அவர்களுக்கும் தெரிவிக்கக் கோருகிறேன்.

இங்ஙனம்,
பொன்னம்பலம்.

மேல் விலாசம்:
திரு. மாசிலாமணி அவர்கள்,
நெ. 18, மேலராஜ வீதி,
புதுக்கோட்டை,
புதுக்கோட்டை போஸ்டு,
திருச்சி ஜில்லா.

அனுப்புதல்:
பொன்னம்பலம்,
நெ. 25, ஆண்டார் வீதி,
தெப்பக்குளம் போஸ்டு,
திருச்சிராப்பள்ளி.

| | | |
|---|---|---|
| கார்டு | மேல்விலாசம் | தபாலாபீஸ் |
| கவர் | இரகசியம் | வெற்றுக் காகிதம் |
| உறை | கட்டணம் | சமாசாரங்கள் |
| ஸ்டாம்பு | முத்திரை | நமஸ்காரம் |
| போஸ்டு | ஆசீர்வாதம் | வணக்கம் |

கேள்விகள்

1. கார்டை உபயோகிப்பது எப்போது?

2. கவரை உபயோகிப்பது எப்போது?

3. மேல் விலாசத்தில் என்னென்ன விவரங்கள் எழுத வேண்டும்?

பயிற்சி

1. உன் சிறிய தந்தைக்கு உனது படிப்பைப் பற்றி ஒரு கடிதம் எழுது.

2. விடுமுறை நாட்களில் நீ என்ன படிக்கிறாய் என்பதைப் பற்றி உன் ஆசிரியருக்கு ஒரு கடிதம் எழுது.

## 20. உல்லாசப் பிரயாணம்

சென்ற ஞாயிற்றுக்கிழமை நாங்கள் முக்கொம்பு முனையைப் பார்க்கச் சென்றோம். ஆண்களும், பெண்களுமாக நாங்கள் ஐம்பது பிள்ளைகள் சேர்ந்தோம்; நான்கு ஆசிரியர்கள் எங்களை அழைத்துச் சென்றார்கள்.

சூரிய உதயத்தில் புகைவண்டி திருச்சிராப் பள்ளிக் கோட்டை ஸ்டேஷனை விட்டுப் புறப் பட்டது; சுமார் முக்கால்மணி நேரத்தில் எலமனூர் ஸ்டேஷனை அடைந்தோம். நான் சென்றது கோடைக்காலம். காவிரியில் இரண்டு கரையோரங் களிலும் மட்டும், முழங்காலளவு தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. நாங்கள் உற்சாகமாக நடந்து சென்று காவிரியாற்றைக் கடந்தோம். எதிர்க் கரை ஒரு பரந்த சோலை. மா, நாவல், கொய்யா முதலிய பழமரங்களும் அங்கு இருந்தன.

அச்சோலையில் சிறிது நேரம் நாங்கள் இளைப் பாறினோம்; பிறகு எங்கள் கட்டுச் சோற்று மூட்டைகளை அவிழ்த்தோம்; ஒருவரோடொருவர்

வேடிக்கையாகப் பேசிக்கொண்டே உணவு அருந்தி, காவிரி நீர் பருகினேம். அப்பால் எங்கள் ஆசிரியர்கள் அங்குள்ள காட்சிகளைக் காண்பித்தார்கள்.

மேற்கிலிருந்து வருகிற காவிரியாறு அவ்விடத்தில் இரண்டாகப் பிரிகிறது. அவ்வாறு பிரிகிற



முனையே முக்கொம்பு எனப்படுகிறது. முக்கொம்பில் ஒரு நல்ல படித்துறையும் கட்டப் பட்டிருக்கிறது. வடக்கில் பாய்வது கொள்ளிடம் என்றும், தெற்கில் பாய்வது காவிரியின் தொடர்ச்சி என்றும் எங்கள் ஆசிரியர்கள் கூறினர்கள். கொள்ளிடத்தைக் கடந்து செல்ல ஓர் உறுதியான பாலம் கட்டப்பட்டிருக்கிறது. அது ஒரு அணைக்கட்டுப் பாலம். மேற்கிலிருந்து வரும் வெள்ளத்தை வேண்டிய அளவு தேக்குவதற்கும், விடுவதற்கும் இரும்புக் கதவுகள் அப்பாலத்தின் கீழ்ப்புறத்தில் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றைத் தூக்கவும், இறக்கவும் உதவும் உருளை இணைப்புக்களையும் பார்த்தோம்.

ஒரு உத்தியோகஸ்தர் ஒரு கதவைத் தூக்கியும் இறக்கியும் காண்பித்தார்.

நாங்கள் எங்கள் ஆசிரியர்களைப் பார்த்து "இவ்வணைக்கட்டு எதற்காக?" என்று கேட்டோம். "காவிரியாறு மிகப் பழமையான நதி; அது நாளடைவில் மணலினால் மேடாகப் போயிற்று;



அதனால் வெள்ளம் வேறு திசையை நோக்கிக் கொள்ளிடமாகப் பிரிந்தது; கொள்ளிடம் வயல் மட்டத்தைவிடப் பள்ளம். ஆகையால் அதில் பாயும் நீர் பாசனத்திற்குப் பயன்படுவதில்லை. வெள்ள மெல்லாம் வீணிலே கடலை அடையும். அதனால் பாசனத்திற்கு வேண்டிய அளவு நீரைக் காவிரியாற்றில் திருப்பிவிடுவதற்கு இவ்வணை கட்டப்பட்டது. மிகுதியான நீர் கொள்ளிடத்தில் விடப்படும். இவ்

வணைக்கு மேலணை என்று பெயர்" என்று எங்கள் ஆசிரியர்கள் கூறினார்கள்.

இரண்டு ஆறுகளின் இரு கரைகளிலும் சோலை களும், படுகைகளும் நிறைந்து அழகாகக் காணப் பட்டன. ஆறுகளின் நடுக்கரை கிழக்கே செல்லச் செல்ல அகன்று விரிகிறது. அதில்தான் திருவரங் கம், திருவானைக்கா ஆகிய திருப்பதிகளும் பல கிராமங்களும் இருக்கின்றன.

"முக்கொம்பிலிருந்து கிழக்கே இருபது மைல் தூரத்தில் காவிரியின் குறுக்கே மற்றொரு அணை



கட்டப்பட்டிருக்கிறது. அதற்குக் கல்லணை என்று பெயர். அவ்வணையிலிருந்து காவிரியின் நீர் பல சிற்றாறுகளில் திருப்பப்படுகிறது. அவ்விடத்தில் உள்ளாறு என்னும் சிற்றாறு வெட்டப்பட்டிருக் கிறது. அச்சிற்றாறு காவிரியையும் கொள்ளிடத் தையும் சேர்க்கின்றது. நடுக்கரையில் உள்ள நிலப்

பரப்பு ஒரு தீவு போன்றது," என்று எங்கள் ஆசிரியர்கள் கூறினார்கள்.

இவ்வாறு பல காட்சிகளையும் கண்டு களிப்படைந்தோம். சிறிது நேரம் நடுக்கரைச் சோலைகளில் விளையாடினோம். அங்குள்ள பழமரங்களில் காகங்களும், கிளிகளும் காணப்பட்டன. அணிற்பிள்ளைகள் பழங்களைக் கொறித்துத் தின்று கொண்டு மரக்கிளைகளில் அங்குமிங்கும் ஓடின. குரங்குகள் கூட்டம் கூட்டமாக மரக் கிளைகளில் வசித்தன. அவைகள் வயிற்றுக் குட்டிகளோடு கிளைக்குக்கிளை தாவுவது எவ்வளவு விநோதமாயிருந்தது!

மாலையில் நான்கு மணிக்கு மறுபடியும் காவிரியைக் கடந்து தென்கரை வந்து, எலமனூரை அடைந்தோம். மாலை ரயிலில் எறி விளக்கு வைக்கும் நேரத்தில் கோட்டை ஸ்டேஷன் வந்தோம். உபாத்தியாயர்கள் எங்களை 'ஆஜர்' கூப்பிட்டார்கள். பிறகு எங்கள் வீடுகளுக்குச் சென்றோம்.

| | | |
|---|---|---|
| சூரிய உதயம் | முழங்காலளவு | கடந்தோம் |
| ஷ்டேஷன் | எதிர்க்கரை | அருந்தி |
| துறை | உத்தியோகஸ்தர் | பாசனத்திற்கு |
| தொடர்ச்சி | படுகை | தாவுவது |

## கேள்விகள்

1. முக்கொம்பு என்பது எந்த இடத்தின் பெயர்?
2. கொள்ளிடம் எப்படிக் காவிரியிலிருந்து பிரிந்தது?
3. 'உள்ளாறு' என்பது எங்கிருக்கிறது?

## பயிற்சி

1. எதிர்ப்பதங்கள் எழுது:—
   மேற்கு, பிரிகிறது, தூக்கி, பள்ளம்.

2. கோடிட்ட இடங்களில் பின்வரும் அடுக்குத்தொடரான வார்த்தைகளைச் சரியானபடி அமைத்து எழுது :—

(i) குரங்குகள் ——— வசித்தன.

(ii) காய்கள் ———— காய்த்தன.

(iii) எறும்புகள் ———— செல்கின்றன.

(iv) வாழைப் பழங்கள் ———————— தொங்குகின்றன.

(தார் தாராக, கொத்துக் கொத்தாக, கூட்டங் கூட்டமாக, சாரி சாரியாக)

## 21. மரியாதை அறிந்த சிறுவன்

ஒரு பெரிய உத்தியோகஸ்தர் தமக்கு ஒரு மரியாதையறிந்த சிறுவன் வேலைக்கு வேண்டுமென்று விளம்பரம் செய்தார். இரண்டு இளைஞர்கள் அவ் வேலைக்காக மனுச் செய்து கொண்டார்கள். தம்மை நேரில் வந்து காணும்படி அவ்வுத்தியோகஸ்தர் அவர்களுக்குப் பதில் எழுதிவிட்டார். குறிப்பிட்ட தேதியில் மனுதார்கள் இருவரும், அவ்வுத்தியோகஸ்தரின் காரியாலயத்திற்குச் சென்றூர்கள். இரண்டு இளைஞர்களும் அக்காரியாலய வாயிலில் ஒருவரையொருவர் சந்தித்தார்கள்.

அவர்களுள் ஒருவன் வெகு அவசரமாக உத்தியோகஸ்தரின் அறைக்குச் சென்றான். அவ்வறையின் கதவு தாளிடப்பட்டிருந்தது. அவசரச் சிறுவன் 'தடதட' வென்று கதவைத் தட்டினான்; 'ஐயா, ஐயா' வென்று உரக்க அழைத்தான். உத்தியோகஸ்தர் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தார். அவன் தம்மிடம் வேலை நாடிவந்த சிறுவன் என்று அவர் தெரிந்து கொண்டார். "சிறுவ,

உனக்கு ஏற்ற வேலை இங்கு இல்லை" என்று சொல்லி அவனை அனுப்பி விட்டார்.

மற்ற இளைஞன் பொறுமையாக வாயிலண்டையே காத்திருந்தான். தனக்கு வந்த பதிலில் குறிப்பிடப்பட்டிருந்த நேரம் வந்தது. பிறகு அவன் உத்தியோகஸ்தரின் அறையை அடைந்தான். மூட்டப்பட்டிருந்த கதவில் மெல்ல ஒரு விரலால் ஒரு முறை



தட்டினான், உடனே அவர் எழுந்து வந்து, "வருக" என்று அவனை அழைத்தார். சிறுவன் பணிவுடன் உள்ளே சென்று நின்றான். அவர் கேட்ட வினாக்களுக்கு அவன் மரியாதையாகவும், தெளிவாகவும் விடை அளித்தான். சிறுவனுடைய மரியாதையைக் கண்டு அவர் களிப்படைந்தார். அன்று முதல் அவனைத் தம்மிடம் வேலைக்கு வைத்துக்கொண்டார். சிறுவனும் அவர் இட்ட வேலைகளைச் செவ்வனே செய்து வந்தான். நாளடைவில் அவன் தன்

எஜமானருடைய உதவியால் ஒரு சிறு உத்தியோகஸ்தனுக உயர்வு அடைந்தான்.

"மரியாதை மதிப்பைத் தரும்" என்ற நீதி இக்கதையினுல் விளங்குகிறது அல்லவா? சிறு பிள்ளைகளாகிய நீங்கள் யார் யாரிடத்தில் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்று தெரிந்துகொள்ள வேண்டும். பெரியோரிடத்தில் பணிவு உடையவராக இருக்கவேண்டும்.

வகுப்பில் அமைதியாக நடந்துகொள்ள வேண்டியது பிள்ளைகளின் கடமை. ஒரு பிள்ளையை உபாத்தியாயர் ஏதாவது கேள்வி கேட்டால், மற்றவர் உடன் எழுந்து கூவக்கூடாது. பிள்ளைகள் தாம் ஆசிரியரிடத்தில் ஏதாவது கூற விரும்பினுல், தம்முடைய இடத்தில் பொறுமையாக எழுந்து நிற்க வேண்டும். உபாத்தியாயர் கேட்டபிறகே தாம் சொல்ல விரும்பியதைச் சொல்ல வேண்டும். "சொல்லெனச் சொல்லி, இருவென இருந்து, போவெனப் போதல்," இவை பிள்ளைகள் வகுப்பில் தெரிந்துகொள்ள வேண்டிய மரியாதை முறைகள்.

| | | |
|---|---|---|
| மரியாதை | மனுதார் | தடதடவென்று |
| உத்தியோகஸ்தர் | தாளிடப்பட்டு | தெளிவாக |
| காரியாலயம் | வாயிலில் | எஜமானர் |
| சந்தித்தார் | பணிவு | தேதி |

### கேள்விகள்

1. அவசரச் சிறுவன் என்ன செய்தான்?
2. மரியாதை அறிந்த சிறுவன் என்ன செய்தான்?
3. மரியாதையால் ஏற்படக்கூடிய பயன் யாது?

## பயிற்சி

1. முதல் வகுப்பில் நீங்கள் எழுத்துக்களைக் கற்றுக் கொண்டீர்கள். எழுத்துக்களின் வகைகளையும் தொகைகளையும் இப்பொழுது தெரிந்து கொள்வோம்.

2. அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ இந்தப் பன்னிரெண்டும் உயிர் எழுத்துக்கள்.

3. க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் இந்தப் பதினெட்டும் மெய்யெழுத்துக்கள்.

4. க என்பது க் என்ற மெய்யும், அ என்ற உயிரும் சேர்ந்த எழுத்து. இதேபோல், கு = க் + உ; தி = த் + இ. இம்மாதிரியே பதினெட்டு மெய்யெழுத்துக்களும் தனித் தனியே பன்னிரண்டு உயிருடன் சேர்ந்தால் 216 எழுத்துக்கள் ஆகும். இவை உயிர்மெய் யெழுத்துக்கள் எனப்படும்.

5. ஃ என்பது மூன்று புள்ளி வடிவமான ஆய்த எழுத்து.

6. தமிழ் எழுத்துக்கள் எத்தனை வகைப்படும்? என்னென்ன?

# 22. காந்தியின் இளமை



மகாத்மா காந்தியைப்பற்றி நாம் எல்லோரும் அறிவோம். உலகத்தார் எல்லோரும் அவரை ஓர் உத்தமர் என்று கொண்டாடுகிருர்கள். இந்திய நாடு சுயராஜ்யம் பெறுவதற்காக அவர் பல ஆண்டுகள் அல்லும் பகலும் உழைத்தார். அவருடைய தலைமையில் தேச பக்தர்கள் எண்ணிறந்தோர் ஒத்துழைத்தார்கள். அவருடைய ஆயுட் காலத்திலேயே 1947-ம் ஆண்டு, ஆகஸ்டு மாதம் 15-ஆம் தேதி, நம் நாடு சுதந்திரம் பெற்றது. நாட்டிற்கே உழைத்த உத்தமர் 1948-ம் வருஷம் ஜனவரி மாதம், 30-ஆம் நாள் ஓர் அறிவிலியால் சுட்டு வீழ்த்தப்பட்டு உயிர் துறந்தார். எல்லாத் தேசத்தாரும் அவரை அவருடைய ஆயுட்காலத்தில் போற்றினர்கள்; இறந்த பிறகும் அவருடைய பெருமையை எல்லோரும் பாராட்டுகிருர்

கள். இவ்வாறு அவர் நீங்காத புகழைப் பெற்றது எதனால்? இளமையிலிருந்தே அவர் கொண்டிருந்த நற் பண்புகள் பல; அப்பண்புகளாலேயே அவர் பெரியவரானபின் சிறந்து விளங்கினார். இளமையில் அவர்பால் விளங்கிய சீரியகுணங்களில் இரண்டொன்றைப் பற்றி இப்போது படிப்போம்.

இளமையில் அவர் நமது தேசத்தில் ராஜ்கோட் என்னும் இடத்தில் கல்வி கற்றார். பிறகு மேல் படிப்பிற்காக இங்கிலாந்து சென்றார். அப்போது, அவருடைய தாயார் அவரை நோக்கி "உன்னுடைய ஒழுக்க நெறிகளை நீ எப்போதும் கைவிடாதே. ஒரு போதும் புலால் உண்ணாதே" என்று உபதேசம் செய்தார். இங்கிலாந்தில் புலால் இல்லாமல் வாழ்வது மிகக் கடினம். நம் நாட்டிலுள்ள காய்கறி உணவுகள் அங்கே கிடைக்கமாட்டா. அவ்வாறு இருந்தும் அவர் தாய்சொல் துறக்கவில்லை. உறுதியுடன் தம் ஒழுக்க நெறிகளைக் கடைப்பிடித்தார்.

அவ்வுறுதியே அவரைப் பிற்காலத்தில் உலகம் போற்றும் உத்தமராகச் செய்தது. எவ்விதமான கஷ்டங்கள் நேர்ந்தாலும், அவர் தம்முடைய முயற்சியைக் கைவிடமாட்டார்.

உண்மையை மறைக்கும் தீயகுணம் அவரிடம் இளமையிலிருந்தே இல்லை. ஒருசமயம் பரீக்ஷாதிகாரி அவர் படித்த பாடசாலையைப் பார்வையிட்டார். அப்போது உபாத்தியாயர் கொடுத்த ஒரு கணக்கை மற்றெல்லாப் பிள்ளைகளும் சரியாகச் செய்தார்கள்; காந்தியார் மட்டும் பிழைபடச் செய்திருந்தார். உபாத்தியாயர் அவருடைய கற்பலகையைப் பார்த்தார்; ஒருவருக்கும் தெரியாமல் அக்கணக்கைத் திருத்தச் சொன்னார். ஆனால், காந்தியார் அவ்வாறு

திருத்தித் தம் பிழையை மறைக்க விரும்பவில்லை. தம் பிழையை உண்மையாகவே ஒப்புக்கொண்டார்.

காந்திமகான் தம் வாழ்நாளில் எல்லாக் காரியங்களிலும், எப்போதும் உண்மையாகவே ஒழுகி வந்தார். அவ்வுண்மையால் அவர் பல உயர்வுகளைப் பெற்றார். "தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டில்" என்பது பழமொழி. இளமையில் நல்ல குணம் படியாவிடில் பிற்காலத்தில் வாழ்வு கெடும். இளமையில் நற்குணங்கள் படிந்தால் அவை வளர்ச்சி அடைந்து பிற்கால வாழ்க்கையில் உயர்வு உண்டாகும்.

| | | |
|---|---|---|
| சுயராஜ்யம் | வீழ்த்தப்பட்டு | இரண்டொன்று |
| ஆயுட்காலம் | பாராட்டுகிறார்கள் | மேல்படிப்பு |
| அறிவிலி | நீங்காத புகழ் | ஒழுக்கநெறி |
| சீரிய | பரீக்ஷாதிகாரி | துறக்கவில்லை |

### கேள்விகள்

1. காந்தியாரின் தாயார் அவருக்கு என்ன புத்தி சொன்னார்?
2. அவர் தம் வாழ்க்கையில் எவ்வாறு ஒழுகிவந்தார்?
3. எவ்விதமான தீயகுணம் அவரிடம் இல்லை?

### பயிற்சி

1. எதிரான பொருளுடைய வார்த்தைகளைச் சொல்லு: அறிவிலி, இளமை, பிற்காலம்.
2. (i) உலகத்தார் மகாத்மா காந்தியைப் போற்றுகிறார்கள். ('மகாத்மா காந்தி' என்று ஆரம்பித்து இவ்வாக்கியத்தை எழுது.)

   (ii) பரீக்ஷாதிகாரி பாடசாலையைப் பார்வையிட்டார். ('பாடசாலை' என்று தொடங்கி இவ்வாக்கியத்தை எழுது.)

# 23. காட்சிச் சாலை

ஒருநாள் மணியன் தன் தகப்பனாரைப் பார்த்து "நாம் இன்றைக்குக் காட்சிச் சாலையைப் போய்ப் பார்த்துவிட்டு வருவோம்" என்றான். அவரும் அதற்கு ஒப்புக்கொள்ளவே, இருவரும் காட்சிச் சாலைக்குச் சென்றனர். அங்கு அவர்கள் பேசிக் கொண்டே காட்சிச் சாலையிலுள்ள பிராணிகளைப் பார்த்து வந்தனர்.

மணியன் :— அப்பா, அங்கே ஜனங்கள் கூட்டமாக நிற்கிறார்களே! அங்கே போய் முதலில் பார்ப்போம்.



தகப்பனார் :— சரி, அப்படியே செய்வோம்.

மணியன் :— இதோ இங்கே இரும்புக் கிராதிக்குள் இரண்டு சிங்கங்கள் இருக்கின்றன பாருங்கள். அதில் ஒன்றின் பிடரிமயிர் எவ்வளவு அழகாய் இருக்கிறது! பெண் சிங்கத்திற்குப் பிடரிமயிர் இல்லை என்று புத்தகத்தில் படித்திருக்கிறேன். பிடரிமயிர் இல்லாத அது பெண் சிங்கம்தானே?

தகப்பனார் :— ஆம்.

மணியன் :—அடுத்த கூட்டில் இருப்பது புலி போலக் காணப்படுகிறது. பார்த்துவிட்டு வரலாம் வாருங்கள்.

தகப்பனார் :— சரி, வா.

மணியன் :— இந்தப் புலி எங்கள் பாடப் புத்தகத்தில் உள்ள சித்திரத்தைப் போலவே இருக்கிறது. இதற்குப் பலம் அதிகமா, சிங்கத்திற்கு பலம் அதிகமா? சிங்கத்திற்கு தானே அதிகம்?



தகப்பனார் :— எதற்கு அதிகம் என்று சொல்ல முடியாது. சிங்கம் சிறியதாயிருந்தால் சண்டையில் புலி ஜயிக்கும். புலி சிறியதாயிருந்தால் சண்டையில் சிங்கம் ஜயிக்கும்.

மணியன் :— சரிதான். அங்கே கரடி இருக்கிறதாம். அதைப் பார்க்கலாம் வாருங்கள்.

தகப்பனார் :— சரி, போவோம் வா.



மணியன் :— இதோ பாருங்கள்; இங்கே கிணற்றுக்குள்ளே கரடி இருக்கிறது. இதை ஏன் இப்படி வைத்திருக்கிறார்கள்?

தகப்பனார் :— கொடிய மிருகங்களைப் பாதுகாக்கும் முறையில் இதுவும் ஒன்று. ஜனங்கள் மேலே இருந்தபடி பயமில்லாமல் இதைப் பார்க்கலாம் அல்லவா?

மணியன்:—கரடிகளில் வெள்ளைக் கரடி என்று ஒன்று உண்டாமே? அது இதைப் போலத்தானே இருக்கும்?

தகப்பனார் :— ஆம். அதுவும் இந்தக் காட்சி சாலையில் இருக்கிறது. அது வேறோரிடத்தில் இருக்கிறது. போய்ப் பார்க்கலாம் வா.

மணியன் :— சரி, வாருங்கள் அப்பா, போகலாம்.

தகப்பனார் :— இதோ பார் வெள்ளைக்கரடி. இது மிகவும் கொடூரமானது. இது குளிர் அதிகமாக உள்ள, பனிக்கட்டிப் பிரதேசங்களில் இருக்கும்.



மணியன் :— ஆம், நானும் பூகோளப் புத்தகத்தில் படித்திருக்கிறேன். எஸ்கிமோக்கள் வசிக்கும் பிரதேசத்தில் இது இருக்கிறது. அங்கே ஸீல், வால்ரஸ் என்னும் பிராணிகளும் உள்ளன. அவை இந்தக் காட்சிச் சாலையில் இருக்கின்றனவா, அப்பா?

தகப்பனார் :— இல்லை. இங்கே ஒரு காட்டுப் பன்றி இருக்கிறது. பார்ப்போம் வா.

மணியன் :— காட்டுப் பன்றி எப்படி இருக்கும்?



தகப்பனார் :— அது ஊர்களில் நாம் பார்க்கும் பன்றியைப் போலவே தான் இருக்கும். ஆனல் அது மிகவும் கொடியது. நம்மைக் கண்டவுடன் அது எவ்வளவு கோபத்தோடு உறுமிக்கொண்டு வருகிறது பார். காட்டில் இது மனிதரைக் கண்டால், உடனே

மேலே பாய்ந்துவிடும். சில சமயங்களில் இது புலியையும் கொன்றுவிடும்.

மணியன் :—அப்படியா, அவ்வளவு கொடியதா இது ? வாருங்கள் போகலாம்.

தகப்பனர் :—சரி.

மணியன் :—அப்பா, இதோ பாருங்கள். எத்தனை வகையான குரங்குகள்! இதோ இந்தக் குரங்





கிற்கு நாமம் போட்டிருக்கிறார்கள். எவ்வளவு அழகாக இருக்கிறது பாருங்கள்!

தகப்பனர் :—இதற்கு ஒருவரும் நாமம் போடவில்லை. இயற்கையிலேயே இதன் நெற்றியில் நாமம் ஏற்பட்டிருக்கிறது.



மணியன் :— அப்படியா, எவ்வளவு ஆச்சரியம்! இதோ குட்டை வால் குரங்கு; இதோ கறுப்புக் குரங்கு. இது தாவித்தாவி என்னென்ன

வேடிக்கையெல்லாம் செய்கிறது பாருங்கள்! இதோ ஒரு குரங்கு, தன் குட்டியை வயிற்றில் வைத்துக்கொண்டு தாவுகிறது. குட்டி கீழே விழாமல் எப்படி அப்பா இருக்கிறது?

தகப்பனர் :—அது கெட்டியாய்த் தன் கைகளாலும், கால்களாலும் தாயின் உடம்பைப் பிடித்துக் கொள்கிறது. சரி வா. அந்தப் பக்கம் பலவிதப் பறவைகள் இருக்கின்றன, பார்க்கலாம்.

மணியன் :— சரி, வாருங்கள்.

தகப்பனர் :—இதோ பார் மயில்களை. இதோ இருப்





பது வெள்ளை மயில். இதோ தோகை இல்லாமல் இருப்பது பெண் மயில்.

மணியன் :—இதோ ஒரு பெரிய பறவை இருக்கிறதே. இதன் பெயர் என்ன, அப்பா?

தகப்பனர் :—இது நாரை என்னும் பறவை. இதோ பார். எத்தனை வகையான கிளிகள்!

மணியன் :—ஆம், வெள்ளைக்கிளி, பச்சைக்கிளி, சிவப்புக்கிளி, பஞ்சவர்ணக் கிளி எல்லாம் இருக்கின்றன.

**தகப்பனார் :—** இதோ கம்பி வலையால் மூடப்பட்டுள்ள இந்த இடத்தில் எத்தனை வகையான குருவிகள் இருக்கின்றன பார்!





**மணியன் :—** மஞ்சள், ஊதா, கருப்பு, வெள்ளை, பல வகை நிறங்கள் கலந்தவை எல்லாம் இருக்கின்றன. ஆஹா எவ்வளவு அழகாய் இருக்கின்றன!

**தகப்பனார் :—** எல்லாம் பார்த்தாகிவிட்டது. வா, வீட்டிற்குப் போகலாம்.

| | | |
|---|---|---|
| இரும்புக்கிராதி | காட்சிச்சாலை | பாய்ந்துவிடும் |
| உறுமிக்கொண்டு | காட்டுப்பன்றி | பிடரிமயிர் |
| எஸ்கிமோக்கள் | கோரமானது | பின்வருமாறு |
| ஒப்புக்கொள்ளவே | நாரை | பூகோள பாடம் |

## கேள்விகள்

1. காட்சிச் சாலையில் இருந்த மிருகங்கள் யாவை? பறவைகள் யாவை?

2. காட்சிச் சாலையைப்பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுது.

3. காட்டுப்பன்றி எப்படிப்பட்டது? குரங்குகளில் பல வகைகள் எவை?

### பயிற்சி

1. பின் வரும் வாக்கியங்களில் வினு வாக்கியங்கள் எவை, சாதாரண வாக்கியங்கள் எவை என்று கூறு:

(i) ராமன் ஓடினுன்.
(ii) கேசவன் எங்கே ஓடினுன்?
(iii) வேலன் வந்தானு?
(iv) அவன் அழுதான்.
(v) இது யாருடைய புத்தகம்?
(vi) இது என் புத்தகம்.

2. இந்தப் பாடத்திலிருந்து நான்கு வினு வாக்கியங்களைச் சொல்லு.

## 24. நெசவுத் தொழில்

பஞ்சு, பட்டு முதலியவற்றைக் கொண்டு துணிகளைச் செய்தல் நெசவுத் தொழில் எனப்படும். இந்தத் தொழில் நமது நாட்டில் தொன்றுதொட்டு நடந்து வருகிறது. இப்போது பஞ்சிலிருந்து ஆடை நெய்வது எப்படி என்று கவனிப்போம்.

பருத்திக் காயிலிருந்து பஞ்சு கிடைக்கிறது. பருத்திக் கொல்லைகளில், பருத்திச் செடியில் காய்கள் உண்டாகும். காய் முற்றி வெடித்த பிறகு அதிலிருந்து பஞ்சு எடுப்பார்கள். பஞ்சை எல்லாம் சேகரித்த பிறகு, அதைச் சாக்கில் போட்டுப் பொதி ஆக்கித் துணி நெய்யும் இடத்திற்குக் கொண்டுபோவார்கள்.

நெசவுச் சாலையில் முதலில் பருத்தியிலுள்ள விதைகளைப் போக்குவார்கள். இதற்காகத் திரிமனை

என்ற ஒரு கருவி உண்டு. அதில் ஒரு பக்கத்தில் பஞ்சைக் கொடுத்துக் கொண்டே கைப்பிடியைச் சுற்றினல், வேறு பக்கத்தில் கொட்டை எடுத்த பஞ்சு வெளிப்படும்.



இப்படி எடுத்த பஞ்சில் குப்பை கூளங்கள் ஒட்டிக்கொண்டிருக்கும். இவற்றைப் போக்க 'வில்' என்ற ஒரு கருவி உண்டு. இவ்வாறு சுத்தம் செய்யப் பட்ட பஞ்சைப் பட்டை போடுவார்கள்.

பட்டை போடுதலாவது சிறு சிறு திரிகளாக ஆக்குதலாம். பிறகு திரிகளை ராட்டினம், தக்ளி இவற்றின் உதவியால் நூல் நூற்பார்கள். அந்த நூலைப் பரிவட்டம் என்னும் ஒரு கருவியால் சுற்று வார்கள். அப்பால் அந்த நூலை வெளியிடங்களில் பாவுகளாக விரித்துக்கட்டிச் சிக்கு எடுத்துத் துணி நெய்வார்கள். துணி நெய்யும் கருவி தறி எனப் படும். தறியில் நெசவு செய்வதைப் படத்தில் பாருங்

கள். மேற் கூறியவாறு துணி நெய்தல் ‘கைத்தறி நெசவு’ எனப்படும்.

தற்காலத்தில் பஞ்சிலிருந்து விதை எடுத்தல், பஞ்சிலுள்ள குப்பைக் கூளங்களைப் போக்குதல்,



பஞ்சை நூலாக நூற்றல், நூலை ஆடைகளாக நெய்தல் ஆகிய எல்லாக் காரியங்களும் எந்திரங்களின் மூலமாகவும் நடைபெறுகின்றன. இவ்வித நெசவு, ‘மில் நெசவு’ எனப்படும்.

மில் நெசவில் வேலை சீக்கிரம் ஆகும். பொருளும் அதிகமாய் உற்பத்தியாகும். வேலையாட்கள் அதிகமாய் வேண்டியதில்லை. பல ஆட்கள் பல நாள் செய்யும் வேலையை ஒரு எந்திரம் ஒரே நாளில் செய்து முடித்துவிடும். இந்த எந்திரங்களைப் படத்தில் பாருங்கள்.

இக்காலத்தில் எந்திர நெசவாலைகள் நம் நாட்டில் பெருகி வருகின்றன. இவையும் நாட்டிற்கு.

வேண்டியவையே என்றாலும் கை நெசவையும் கைவிடலாகாது. கைத்தறி நெசவு ஒரு குடிசைத்



தொழில்; அது ஏழைகளுக்குச் சுதந்திரமான தொழில். கைத்தறி ஆடைகள் மிக்க நேர்த்தியானவை.

| | | |
|---|---|---|
| தக்ளி | எந்திரங்கள் | தோன்றுதோட்டு |
| தறி | இராட்டினம் | நெசவுச்சாலை |
| திரி | உற்பத்தியாகும் | பட்டைபோடுதல் |
| நெசவு | கைத்தறி நெசவு | பரிவட்டம் |
| பஞ்சு | கைப்பிடி | பருத்திக்கொல்லை |
| பாவு | திரிமணை | போதி |

### கேள்விகள்

1. பஞ்சை நூலாக நூற்பது எப்படி? நூலை ஆடையாக நெய்வது எப்படி?

2. ஆடை நெய்வதற்கு உபயோகமாகும் கருவிகள் எவை ?

3. மில் நெசவினல் ஏற்படும் அனுகூலம் என்ன ?

## பயிற்சி

1. அடைப்புக் குறிகளுள் இருக்கும் சொல்லின் சரியான உருவத்தைக் கோடிட்ட இடங்களில் அமைத்துப்படி.

(i) மாணவன் ——. (ஓடு)

(ii) ஆசிரியர் புத்தகத்தைக் ——. (கற்பி)

(iii) காட்டில் மரங்கள் ——. (வளர்)

(iv) நாம் பருத்தியிலிருந்து ஆடை ——. (நெய்)

2. ராமன் ஓடி வந்தான். ராமன் உட்கார்ந்தான் :— இந்த இரண்டு வாக்கியங்களையும் சேர்த்து ராமன் ஓடி வந்து உட்கார்ந்தான் என்று எழுதலாம். இம்மாதிரியே பின்வரும் வாக்கியங்களைச் சேர்.

(i) மழை பெய்தது. மழை நின்றது.

(ii) முருகன் வந்தான். முருகன் உட்கார்ந்தான்.

# 25. நம் தாயகம்



பாரத நாடு நம் தாயகம். இந்நாட்டிற்கு இந்தியா என்பது மற்றொரு பெயர். இந்தியாவின் குடிகள் இந்தியர் எனப்படுவர். இந்தியா மிகப் பரந்த தேசம். இத்தேசம் பலவித வளங்களும் நிரம்பப் பெற்றது.

இமயமலை என்பது இந்தியாவிற்கு வடக்கு எல்லை. அது உலகத்திலுள்ள மலைகள் எல்லாவற்றிலும் பெரியது. இத்தேசத்தின் நடுமத்தியில் விந்திய மலை அமைந்திருக்கிறது. விந்திய மலைக்கு வடக்கிலுள்ள பாகம் வட இந்தியா எனப்படும். விந்திய மலைக்குத் தெற்கிலுள்ள பாகம் தென்னிந்தியா எனப்படும்.

தென்னிந்தியாவின் கிழக்கிலும், தெற்கிலும், மேற்கிலும் கடல்கள் சூழ்ந்திருக்கின்றன. குமரி முனை என்பது இந்தியாவின் தெற்கு எல்லை.

மேற்குக் கரையை யொட்டி மேற்குத் தொடர்ச்சி மலைகளும், கிழக்கில் கிழக்குத் தொடர்ச்சி மலைகளும் அமைந்துள்ளன.

இமய மலையிலிருந்து கங்கை, சிந்து, பிரம்ம புத்திரா என்ற பெரிய ஆறுகள் உற்பத்தியாகின்றன. அவை வட இந்தியாவிற்கு வளத்தைக் கொடுக்கின்றன. மேற்குத் தொடர்ச்சி மலைகளிலிருந்தும் பல ஆறுகள் உற்பத்தியாகின்றன. அவை தென்னிந்தியாவிற்கு வளத்தைக் கொடுக்கின்றன. கோதாவரி, கிருஷ்ணா, நர்மதை, தப்தி, காவிரி, வைகை, தாமிர பரணி என்பன தென்னிந்தியாவில் பாயும் ஆறுகள்.

இந்தியா ஒரு விவசாய நாடு. ஆகையால் இந் நாட்டில் உணவிற்குப் பஞ்சம் இல்லை. மற்றத் தொழில்களுக்கு வேண்டிய வசதிகளும் நம் நாட்டில் உண்டு. ஊக்கம் கொண்டு உழைத்தால் எந்தப் பொருளுக்கும் நாம் பிற நாட்டினரை நாட வேண்டியதில்லை.

இந்திய மக்கள் பல்வேறு சமயக் கொள்கைகளை அனுசரிக்கிறார்கள்; பல்வேறு மொழிகளைப் பேசுகிறார்கள். இந்து, இஸ்லாம், கிறிஸ்தவம், சீக்கியம், பௌத்தம், சமணம் முதலியன இந்தியர் அனுசரிக்கும் சமயங்கள். தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம், பார்சி, அரபி, உருது, குஜராத்தி, மராத்தி, சௌராஷ்டிரம், வங்காளி, இந்தி, இந்துஸ்தானி முதலியன இந் நாட்டில் வழங்கும் மொழிகள்.

இந்தியர் உண்மை, வீரம், விசுவாசம், ஈகை முதலிய பண்புகளை உடையவர்கள். கல்வி, வர்த்தகம், போர் முறை, கைத்தொழில்கள் முதலியவற்றில் இந்தியர் தேர்ச்சி உடையவர். பிறப்பால் நாம்

எல்லோரும் இந்தியர் என்ற ஒரே இனத்தைச் சேர்ந்தவராவோம். ஆகையால் நாம் ஒற்றுமையாகவும், சோம்பல் இல்லாமலும் உழைத்து வாழ வேண்டும். உலகத்தில் நம் நாட்டின் பெருமையை விளங்கச் செய்ய வேண்டும்.

| | | |
|---|---|---|
| பாரத நாடு | தாயகம் | குடிகள் |
| சமயம் | எல்லை | விவசாய நாடு |
| பஞ்சம் | நாடவேண்டிய | அனுசரி |

## கேள்விகள்

1. இந்தியாவின் வடக்கு எல்லை எது? தெற்கு எல்லை எது?

2. வட இந்தியாவில் பாயும் பெரிய ஆறுகள் யாவை? தென் இந்தியாவில் பாயும் ஆறுகள் யாவை?

3. நாம் எல்லோரும் எவ்வாறு வாழவேண்டும்?

## பயிற்சி

1. பின் வரும் சொற்களைச் சொந்த வாக்கியங்களில் உபயோகி:

சமயம். தாயகம், சூழ்ந்து.

2. கீழே அடைப்புக் குறிகளிலுள்ள வார்த்தைகளில் தகுந்த ஒன்றைக் கோடிட்ட இடத்தில் வைத்து வாக்கியத்தை எழுது.

(i) மலையில் நதிகள் — —.

(ii) இந்தியா வளங்கள் — —.

(iii) நாம் ஒற்றுமையாக வாழ — —.

(iv) ஆறுகள் நாட்டிற்கு வளம் — —.

(நிரம்பப்பெற்றது, தருகின்றன, வேண்டும், உற்பத்தியாகின்றன.)

# 26. பள்ளிக்கூட நட்பு



## காட்சி-1

மங்கலம் கிராமத்தில் சோமேசர் வீடு—ஒரு நாள் மாலை நேரம்.

[சோமேசரும், அவர் மனைவி கயற்கண்ணியும் பேசிக்கொள்கிறார்கள்.]

**சோ:** குழந்தை கமலம் எங்கே?

**க:** கமலம் நீலவேணி வீட்டில் விளையாடிக் கொண்டிருப்பாள்.

**சோ:** நீலவேணி யார்? பள்ளிக்கூடத்துப் பெண்ணா?

**க:** ஆம், நீலவேணியும் பள்ளிக்கூடத்துப் பெண் தான். தெற்குத் தெருவிலுள்ள குச்சு வீட்டுக் காரர் மகள் அவள். இதற்குத்தான் கமலாவைப்

பள்ளிக்கூடத்திற்குப் போகவேண்டாம் என்று சொல்லுகிறேன். அவள் என் பேச்சைக் கேட்கிறதில்லை; மணி அடிப்பதற்கு முன் பள்ளிக்கூடத்தில் போய் நிற்கிறாள்.

சோ: பள்ளிக்கூடத்திற்குப் போவது நல்ல பழக்கம். கமலா பள்ளிக்கூடத்தில் கருத்தாய் இருப்பது எனக்குச் சந்தோஷமே.

க: பள்ளிக்கூடத்தில் கருத்தாய் இருப்பது எனக்கும் சந்தோஷமே. நீலவேணியோடு சரிசமமாக விளையாடுவது எனக்குப் பிடிக்கவில்லை. அதனால்தான் கமலாவைப் பள்ளிக்கூடத்திலிருந்து நிறுத்திவிடலாமா என்று எண்ணுகிறேன்.

சோ: இனம் இனத்தோடு சேரும். பெரியவர்கள் பெரியவர்களுடன் உறவாடுவார்கள். பிள்ளைகள் பிள்ளைகளின் நட்பை விரும்புவார்கள். கமலம் மற்றப் பிள்ளைகளுடன் பழகுவது நல்லதல்லவா?

க: பிள்ளைகள் பிள்ளைகளை நேசிப்பது நல்ல பழக்கம் தான். நாம் இவ்வூரில் பெரிய பண்ணை. வேறு பண்ணை வீட்டுப் பெண்கள் கமலாவுக்குக் கிடைக்கவில்லையா? குச்சு வீட்டுக்காரர் பெண் தானா கிடைக்கவேண்டும்!

சோ: நீ நினைப்பது மதியீனம். கமலாவே உனக்குச் சமாதானம் கூறுவாள்.

காட்சி-2

சோமேசர் வீடு—காலை வேளை

[நீலவேணி கமலாவைக் கூப்பிட வருகிறாள் — கமலாவும் நீலாவும் ஆடிப் பாடுகிறார்கள்—சோமேசரும் கயற் கண்ணியும் கவனிக்கிறார்கள்.]

நீ: கமலா என்றன் தோழியே!
களிப்புடன் வா விளையாடவே!

க: நீல வேணி நேச முளாய்!
நேரே வருவாய் வீட்டினுளே!

(இருவரும் கைகோத்து ஆடுகிறார்கள்)

கைகள் கோத்து ஆடிடுவோம்
கூடிப் பாடிக் களித்திடுவோம்
பாலப் பருவ நேயம் தான்
ஆயுள் முழுதும் நின்றிடுமே
செல்வர் ஏழைப் பேத மிலாச்
சீரிய பண்பைப் பெற்றிடுவோம் (கைகள்)

(நீலா, கமலாவை அழைத்துக் கொண்டு தன் வீட்டுக்குச் சென்று விட்டாள்—சோமேசரும் கயற் கண்ணியும் பேசிக் கொள்கிறார்கள்.)

சோ: பார்த்தாயா குழந்தைகளை! அவர்களின் ஆட்டமும் பாட்டும் கவனித்தாயா?

க: நன்றாகக் கவனித்தேன். "செல்வர் ஏழைப் பேதமில்லா" என்றுகூடக் கூறினார்களே!

சோ: குழந்தைகளின் மனம் களங்கமற்றது. பழக்க வழக்கங்களின் குறைகளால்தான், அவர்கள் மனம் கெடக்கூடும். நேசிக்கும் இயல்பு இயற்கையில் ஏற்படக் கூடியது. இயற்கையை ஒட்டியே, நாமும் குழந்தைகளை நல்ல வழியில் திருப்ப வேண்டும். நட்புச் செய்வதற்கு

செல்வர்; ஏழை என்ற வேற்றுமையைக் கவனிக்கக் கூடாது. செல்வமும், வறுமையும் ஒரு வழி நில்லா. குணம் தான் சிநேகத்துக்கு முக்கியம். நீலவேணி மிகவும் நல்ல பெண். கமலாவும் அவளை நேசிக்கிறாள். அவர்கள் நட்பு "நன்றே வாழ்க" என்று ஆசி கூறுவோம்.

## காட்சி-3

மதுரையில் கமலா வீடு.

[கமலாவுக்கு சுரம்; மாமியார் கருணைநாயகி; கமலாவின் கணவன் பரமன்; லேடி டாக்டர் வேணி அம்மாள்.]

**கருணை:** பரமா, கமலாவுக்குச் சுரம் கடுமையாக இருக்கிறது. லேடி டாக்டர் வேணி அம்மாளை அழைத்து வா. அந்த அம்மை கைராசி உடையவர்.

**ப:** அம்மா, காரை அனுப்புகிறேன்; டாக்டர் அம்மாளை அழைத்துவரச் சொல்லுகிறேன். டிரைவரிடம் கடிதம் எழுதிக் கொடுக்கிறேன். டாக்டர் அம்மா விரைவில் வருவார்கள்.

[டாக்டர் அம்மா வந்து கமலாவின் நாடியைப் பார்த்து மருந்து கொடுக்கிறார். நினைவு தப்பியிருந்த கமலா சிறிது நேரத்தில் நினைவைப் பெறுகிறாள்.]

**ப:** டாக்டர் அம்மா, அன்புடன் இச் சிறு தொகையைப் பெற்றுக் கொள்க.

[இரண்டு பவுனை ஒரு தட்டில் வைத்துக் கொடுக்கிறார்.]

கமலா உங்கள் தங்கை. சுரத்திலிருந்து அவளைக் காப்பாற்றுவது உங்கள் பொறுப்பு.

**வே:** நண்பரே, உண்மையில் கமலா என் தங்கையே. அவளைச் சுகமுறச் செய்வது என்

கடமை. கமலா விஷயத்தில் பணம் வாங்குவது எனக்கு முறையல்ல. (பிறகு கமலாவைப் பார்த்து)



கமலா, நன்றாகக் கண்ணைத் திறந்து பார். என்னைத் தெரிகிறதா உனக்கு? நீ பணக்காரி; நான் சாதாரணமான லேடி டாக்டர்! (கமலா உற்றுக் கவனிக்கிறாள்.)

கமலா: அக்கா நீலவேணியா! சுர வேகத்தால் கண் இருண்டு வந்தது. குரலைக் கேட்டு உன்னைக் கவனித்தேன். நீயும் இந்த ஊரில் தான் இருக்கிறாயா? சிறுவயதில் நாம் பள்ளிக் கூடத்தில் பழகினோம். பிறகு நீ சென்னைக்குப் படிக்கச் சென்றுவிட்டாய். நான் மங்கலத்தி லேயே இருந்தேன்; இப்போது இவ்வூரில் வாழ்கிறேன். அக்கா, பணக்காரி என்ற செருக்கு எனக்கு எப்போதாவது உண்டா?

உன்னைப் பார்த்தது எனக்கு வெகு மகிழ்ச்சி. இனி எனக்கு சுரம் போய்விடும்.

வே : தங்காய் மூன்று நாளில் நீ முற்றிலும் குணம் அடைவாய். நான் இந்த ஊரிலேயே டாக்டராக இருக்கிறேன். அடிக்கடி உன்னை வந்து காண்கிறேன். நோய் எதுவும் இனி உன்னை அணுகாது. கவலைப்படாதே.

க : பள்ளிக்கூடத்தில் நாம் கொண்டிருந்த நட்பு இன்று பயன் அளித்தது. மங்கலத்தில் இருந்ததுபோல் மதுரையிலும் நாம் நேயமுடன் வாழ்வோம்.

பயிற்சி

சில மாணவர் சேர்ந்து இந்த நாடகத்தை நடித்துக் காட்டுங்கள்.

# 27. வாழ்க! வாழ்க!



வாழ்க வாழ்க உலகெலாம்
வாழ்க எங்கள் தேசமும்
வாழ்க எங்கள் தமிழகம்
வாழ்க எங்கள் மனையறம்

வாழ்க மேழிச் செல்வமே
வாழ்க நாட்டுக் கைத்தொழில்
வாழ்க எங்கள் வாணிபம்
வாழ்க நல்ல அரசியல்

அன்பு கொண்டு அனைவரும்
அச்சமின்றி வாழ்கவே
துன்பமேது மின்றி நம்
துக்கம் யாவும் நீங்கியே

இன்பமான யாவுமெய்தி
இந்த நாட்டில் யாவரும்
தெம்பினோடு தெளிவுபெற்றுத்
தேவர் போற்ற வாழ்குவோம்.

— நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை

# 28. ஆத்திசூடி

1. ஞயம்பட உரை.
2. இணக்கம் அறிந்து இணங்கு.
3. குணமது கைவிடேல்.
4. கேள்வி முயல்.
5. சான்றோர் இனத்திரு.
6. செய்வினை திருந்தச் செய்.
7. சொற் சோர்வுபடேல்.
8. தக்கோன் எனத் திரி.
9. தூக்கி வினை செய்.
10. தேசத்தோடு ஒத்து வாழ்.
11. நன்மை கடைப்பிடி.
12. நாடு ஒப்பன செய்.
13. பூமி திருத்தி உண்.
14. மீதூண் விரும்பேல்.
15. உத்தமனாய் இரு.

—ஔவையார்

| | | |
|---|---|---|
| ஞயம் | தூக்கி | விரும்பேல் |
| கேள்வி | ஒப்பன | இணக்கம் |
| சான்றோர் | திருத்தி | கடைப்பிடி |
| தக்கோன் | மீதூண் | சொற்சோர்வு |

அரும்பதவுரை : ஞயம்-நயம். இணக்கம்-நட்பு. கேள்வி-கேள்வி யறிவு. சான்றோர்-நற்குணப் பெரியோர். தக்கோன்-தகுதியுடையவன். தூக்கி-ஆராய்ந்து. வினை-காரியம். நாடு-நாட்டிலுள்ளவர்; மக்கள். ஒப்பன-சரி என்று ஒப்புக் கொள்ளும் காரியங்கள். திருத்தி-உழுது பண்படுத்தி. மீதூண்-அளவு மீறிய உணவு.

# 29. கொன்றைவேந்தன்

1. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.
2. ஆலயம் தொழுவது சாலவும் நன்று.
3. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்.
4. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.
5. எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்.
6. கேள்ளோர் ஆயினும் தாழ உரை.
7. குற்றம் பார்க்கின் சுற்றம் இல்லை.
8. கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி.
9. சீரைத் தேடின் ஏரைத் தேடு.
10. சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்.
11. தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை.
12. திரை கடல் ஓடியும் திரவியம் தேடு.
13. தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது.
14. நல்லிணக்கம் அல்லது அல்லற் படுத்தும்.
15. நுண்ணிய கருமமும் எண்ணித் துணி.
16. பாலோடாயினும் காலம் அறிந்து உண்.
17. பொல்லாங்கு என்பதை எல்லாம் தவிர்.
18. மருந்தே ஆயினும் விருந்தோடு உண்.
19. மாரி அல்லது காரியம் இல்லை.
20. மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்.

—ஔவையார்

| | | |
|---|---|---|
| சாலவும் | ஈயார் | கைப்பொருள் |
| தாழ | சுற்றம் | மந்திரம் |
| மெய்ப்பொருள் | தேம்பி | நல்லிணக்கம் |
| திரைகடல் | சுவை | துணி |
| அல்லல் | நுண்ணிய | தவிர் |
| பொல்லாங்கு | மாரி | முன்னறி |
| மூத்தோர் | தேட்டு | |

அரும்பதவுரை : முன்னறி-*முதலில் அறியப்படும்*. சாலவும்-*மிகவும்*. ஈயார்- (*பிறர்க்குக்*) *கொடுக்காதவர்*. தேட்டை-*தேடி வைத்த செல்வத்தை*. சுற்றம்-*உறவினர்*. மெய்ப்பொருள்-*உண்மையான செல்வம்*. சீரை-*சிறப்பை*. ஏரை-*கலப்பையை, உழு தொழிலை*. தேம்பி-வருந்தி, மந்திரம்-*சிறந்த வார்த்தை*. திரைகடல் - *அலைகள் வீசும் கடல்*. திரவியம்-*செல்வம்*. தொழுதூண்-*பிறரிடம் சேவகம் செய்து சம்பாதித்த உணவு*. உழுதூண்-*உழவு தொழில் செய்து தேடிய உணவு*. நல்லிணக்கம் - *நல்லோருடன் நட்பாயிருத்தல்*. அல்லல் - *துன்பம்*. நுண்ணிய-*அற்பமான*. எண்ணித்துணி - *ஆலோசித்துத் தீர் மானஞ் செய்*. பொல்லாங்கு-*தீச்செயல்*. தவிர்-*செய்யாமல் விடு*.

# சுதந்திர
# தமிழ் வாசகம்

## நான்காம் புத்தகம்

ஆக்கியோர் :

R. நாகராஜ ராவ்,
ஆசிரியர், E. R. ஹைஸ்கூல், திருச்சிராப்பள்ளி.

V. நரசிம்ம அய்யர், B. O. L.,
தமிழாசிரியர், ஸேவா ஸதனம் ஹைஸ்கூல், சென்னை

P.B. 343. TEL "BOOK"
ஸதர்ன் பப்ளிஷர்ஸ்
தெப்பக்குளம், திருச்சி.

 [விலை 0-8-0

# முகவுரை

சுதந்திர தமிழ் வாசகம்' என்னும் பெயருடன் மலரும் இப் புத்தகத்தில் உள்ள பாடங்கள் காலத்திற் கேற்பப் பழையன கழிந்து, புதியன புகுத்தி எழுதப் பெற்றுள்ளன. வகுப்பிற்கேற்பப் படிப்படியான முறையில் வாசிப்பதற்கு வேண்டிய பயிற்சிகளைக் கொடுப்பது என்ற நோக்கத்தையும் அடிப்படையாகக் கொண்டு, விஷயங்களைத் தேர்வதிலும் கவனம் செலுத்தப் பெற்றுள்ளது. உலக வியலில் பொருந்தாதனவற்றை அறவே நீக்கி, சமூக ஒற்றுமையும், பரந்த நோக்கமும், தேசபக்தியும், ஊக்கமும், அளிக்கற்பாலனவாகிய விஷயங்களையே பாடமுறையில் அமைத்துள்ளோம். வகுப்புக்களைக் கையாண்ட அனுபவத்தைக் கொண்டு வெளியிடப் பெற்றுள்ள இப்புத்தகங்கள் மாணவர்களுக்கு வேண்டிய மொழிப் பயிற்சியையும் நல்லறிவையும் பயக்குமென நம்புகிறோம்.

ஆக்கியோர்

## பொருளடக்கம்

பட்டன. பிறகு அது குண கடல், குமரி, குடகம், வேங்கடம் என்னும் நான்கு எல்லைக்குள் அடங்கியது. பிற்காலத்தில் தெலுங்கு நாடு, கன்னடதேசம், மலையாளம் என்ற வேறு பிரிவுகளும் தமிழகத்தினின்றும் பிரிந்தன. இப்போது காவிரி, தென்பெண்ணை, பாலாறு, வைகை, பொருநை என்ற நதிகள் பாயும் சமவெளிப் பிரதேசமே தமிழ் வழங்கும் நாடாக விளங்குகிறது. இப்பிரதேசம் பல ஜில்லாக்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை இராமநாதபுரம், மதுரை, திருநெல்வேலி, திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், ஆற்காடு, சேலம், கோயம்புத்தூர், செங்கற்பட்டு என்பனவாம்.

முற்காலத்தில் நம் தமிழகம் மூன்று பெரும் பிரிவுகளைக் கொண்டிருந்தது. அவைகள் சேரநாடு, சோழ நாடு, பாண்டிய நாடு என்னும் பெயர்களால் வழங்கப் பெற்றன. சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் முறையே அந்நாடுகளை ஆண்டு வந்தனர். அவை தவிர குறுநில மன்னர் ஆண்ட வேறு சில பகுதிகளும் உண்டு. சேர, சோழ, பாண்டியர் முடியுடை மூவேந்தர் எனச் சிறப்பித்துச் சொல்லப் பட்டனர்.

அவர்கள் தத்தம் நாடுகளைப் பல மண்டலங்களாக வகுத்து, அவற்றைத் தனித்தனி உத்தியோகஸ்தர்களைக் கொண்டு செவ்வனே ஆண்டுவந்தார்கள். நீதி தவறாத நேர்மை உடையவர் தமிழரசர். அவர்கள் மன்னுயிர்களைத் தம்முயிர் போல் நேசிப்பவர்கள்; கலைகளின் ஆராய்ச்சி அவர்களுக்கு ஓர் விளையாட்டு; வாய்மையே அவர்களுக்கு வலி; புலவர்

களுடன் உரையாடி அறிவை வளர்ப்பது அவர்களின் பொழுது போக்கு.

வர்த்தகமும் கைத்தொழிலும் தமிழ் நாட்டில் மேனிலை அடைந்திருந்தன. பட்டணங்களும், துறைமுகங்களும், எண்ணிறந்த கிராமங்களும் உடையதாய், நாகரிகத்திலும் உயர்வுற்றிருந்தது நம் தமிழகம். தமிழர் போர் முறையில் தேர்ச்சியும் ஆண்மையும் உடையவர்களாய், பல நூற்றாண்டுகளாக சுதந்திர மக்களாக வாழ்ந்திருந்தனர்.

இக்காலத்திலும் நம் தமிழ் ஜில்லாக்களில் வளத்திற்குக் குறைவில்லை. படிப்பிலும் அறிவிலும் தமிழர்கள் முன்னணியிலே இருக்கின்றார்கள். கைத்தொழில்களை வளர்க்க வேண்டிய இயற்கை வசதிகளும் தமிழ் நாட்டில் நிரம்ப உண்டு. சிற்ப வேலை, உலோகவேலை, தச்சு, வேளாண்மை, மண் வேலை, பிற குடிசைத் தொழில்கள் இவைகளில் பரம்பரையாகவே பழக்கமுடைய குடிமக்கள் தமிழ் நாட்டில் எங்கும் உண்டு.

தமிழ் மக்களாகிய நாம் நமது பழம் பெருமைகளை நழுவ விடாமல், படிப்பிலும் தொழில்களிலும் மேன்மேலும் ஊக்கங்கொண்டு உழைக்க வேண்டும். எல்லோரும் ஒற்றுமையாக உயர்ந்த வாழ்வு வாழ வேண்டும்.

| | | |
|---|---|---|
| **நிலப்பரப்பு** | **குறுநிலமன்னர்** | **உழைக்கவேண்டும்** |
| **தாயகம்** | **சால** | **உயர்ந்தவாழ்வு** |
| **மண்டலம்** | **நழுவவிடாமல்** | **வாய்மை** |
| **மன்னுயிர்** | **ஊக்கங்கொண்டு** | **பொழுதுபோக்கு** |

| | | |
|---|---|---|
| பிரதேசம் | முறையோ | போர்முறை |
| மேனிலை | துறைமுகம் | பின்வாங்காமல் |
| சமவெளி | பரம்பரையாக | முன்னணி |

## கேள்விகள்

1. எந்தெந்த ஜில்லாக்கள் இப்பொழுது தமிழ்நாடு ஆகும்?

2. எந்த வகையில் தமிழர்கள் முன்னணியில் நிற்கிறார்கள்?

3. தமிழ் நாட்டை ஆண்ட முடியுடை வேந்தர்கள் யாவர்?

## பயிற்சி

1. பின்வரும் சொற்களை உன் சொந்த வாக்கியங்களில் உபயோகி :

பிரதேசம், பரம்பரை, மண்டலம், வாய்மை.

2. பின் வருவனவற்றில் எவற்றின் பொருள் முடிந்துள்ளது? எவற்றின் பொருளை முடிப்பதற்கு இன்னும் சொற்கள் வேண்டும்?

(i) தமிழ் நாடு நான்கு எல்லைக்குள்

(ii) தமிழ் நாடு நான்கு எல்லைக்குள் அடங்கியது.

(iii) தினந்தோறும் மரத்திற்கு நீர் ஊற்றினோம்.

(iv) தினந்தோறும் மரத்திற்கு

3. மேற் காட்டியவற்றில் (i), (iv) ஆகிய இரண்டும் பொருள் முடிவு பெறவில்லை. (ii), (iii) ஆகிய இரண்டும் பொருள் முடிவு பெற்றுள்ளன. இவை எல்லாம் சொல் தொடர்கள் என்று கூறப்படும். பொருள் முடிந்த சொல் தொடர்களை வாக்கியங்கள் என்றும் சொல்வதுண்டு. பொருள் முடியாத சொல் தொடர்களை எச்சச் சொல் தொடர் என்பர்.

# 2. பஞ்சாயத்து

திருமகள்புரம் என்பது எங்கள் ஊர். எங்கள் ஊர் ஒரு பெரிய கிராமம்; அங்குச் சுமார் ஆயிரம் வீடுகள் உண்டு. நகரத்தில் கவனிக்கப்படும் எல்லாப் பொது நலன்களும் எங்கள் கிராமத்தில் கவனிக்கப்படுகின்றன.



கிராமமே யாயினும், தெருக்கள் எல்லாம் ஒழுங்காக அமைக்கப்பட்டும், வீடுகள் எல்லாம் வரிசையாகக் கட்டப்பட்டும் இருக்கின்றன. சாலைகள் சிறியவையேயாயினும், மேடு பள்ளமும் நொடிகளும் ஏற்படாமல் அப்போதைக்கப்போது பழுது பார்க்கப்படுகின்றன. இரவில் எல்லாத் தெருக்களிலும் பொது விளக்குகள் எரியும். எவ்வளவு மழை கொட்டினாலும், தண்ணீர் தெருக்களில் தேங்காமல்

ஓடுமாறு, வாரிகள் தோண்டப்பட்டு ஊருக்கு வெளியே விடப்பட்டிருக்கின்றன.

கிணற்று நீரையே யாவரும் குடி தண்ணீராக உபயோகிக்கிறோம். கிணறுகள் எல்லாம் சுற்றுத் தளமும், கைப்பிடிச் சுவரும், இராட்டினமும் உடையவை. மாடுகள் குளிப்பாட்டுவதற்குத் தனிக் குட்டை; மனிதர்கள் குளிப்பதற்குத் தனியே நீர்த் துறை. ஊரின் வடக்கில் ஒரு வாய்க்கால் ஓடுகிறது; அது ஒரு சிற்றாறுபோல் படிக்கட்டுகளை யுடையதாயும், இரு மருங்கும் நல்ல கரைகளை யுடையதாயும் விளங்கும்.

தினந்தோறும் தெருக்களைக் கூட்டுவதற்குத் தோட்டிகள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். ஒரு சிறு ஆஸ்பத்திரியும் எங்கள் ஊரில் அமைக்கப்பட்டிருக்கிறது. நோய் கண்டவர்களுக்கு அங்கு இலவசமாக மருந்தளிக்கப்படும். சுகாதார அதிகாரிகள் அடிக்கடி எங்கள் ஊரைப் பார்வையிடுவார்கள்; அம்மை குத்தாத குழந்தைகளுக்கு அம்மை குத்துவார்கள்.

ஒரு சந்தைப்பேட்டை, சிறிய கடைத் தெரு, சாவடி, வாசகசாலை, ஒரு நெல் குத்தும் எந்திரம் இவைகளும் எங்கள் கிராமத்தில் உண்டு. கொல்லர், தச்சர், குயவர், கன்னார் வீடுகளும் வகைக்கு ஒன்றிரண்டு இருக்கின்றன.

ஆண் பிள்ளைகளும், பெண் பிள்ளைகளும் கல்வி கற்பதற்காக ஓர் ஆரம்பப் பாடசாலையும் நடைபெறுகிறது. அதில் ஒவ்வொரு வகுப்பிற்கும் தனித்தனி ஆசிரியர் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். அநேகமாக எங்கள் கிராமத்தில் பள்ளிக்கூடம் போகாத பிள்ளையே கிடையாது.

இவ்வளவு பொதுநலன்களையும் மேற்பார்த்துச் செய்விப்பவர்கள் யார் தெரியுமா? ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பஞ்சாயத்து சபையார்களே இவ்வளவும் செய்விப்பவர்கள். என் தகப்பனர் ராமசாமி அச்சபையின் தலைவர்; திருநாவுக்கரசு என்பவர் உபதலைவர்; மொத்தம் பதினறு அங்கத்தினர்களைக் கொண்டது அச்சபை. மூன்று வருஷங்களுக்கு ஒரு தடவை பஞ்சாயத்து அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். அவ்வங்கத்தினர்கள் தம்முள் ஒருவரைத் தலைவராகவும், மற்றொருவரை உபதலைவராகவும் தேர்ந்தெடுப்பார்கள். அச்சபையார் எல்லாரும் சுய நலம் பெரிதாகக் கருதாமல், ஊரின் பொது நலங்களில் கண்ணும் கருத்துமாய் இருப்பவர்கள்.

பொதுநலக் காரியங்களைச் செய்வதற்குப் பொது மக்களிடமிருந்தும், ஜில்லா போர்டாரிடமிருந்தும் அவர்களுக்கு வருவாய் வருகிறது. வீட்டு வரி, தொழில் வரி, சந்தைப்பேட்டையில் சந்தைக்கடை வரி இவைகள் ஓரளவு வசூலிக்கப்படுகின்றன. ஜில்லா போர்டிலிருந்தும் குறிப்பிட்ட விதாசாரப் படி உதவி அளிக்கப்படுகிறது. பஞ்சாயத்துக் காரியாலயம் ஒரு வீட்டில் அமைக்கப்பட்டிருக்கிறது. கடிதப் போக்குவரவு, கணக்குப் பதிவு இவைகளைக் கவனிப்பதற்கு ஒரு குமாஸ்தாவும், மற்றும் சிறு வேலைகளைச் செய்ய ஒரு சேவகனும் அக்காரியாலயத்திற்கென நியமிக்கப் பெற்றிருக்கிறார்கள்.

நானும் வயது வந்தவுடன், பஞ்சாயத்து சபைக்கு அங்கத்தினனாக இருக்க விரும்புகிறேன். இம்மாதிரி பொதுத் தொண்டுகளில் நிறம்பட வேலை

செய்தால், நாளடைவில் அரசாங்க சபைக்கும் சென்று நாட்டிற்குத் தொண்டு செய்வதற்குத் தகுதி ஏற்படும் அல்லவா ?

| | | |
|---|---|---|
| பஞ்சாயத்து சபை | தேங்காமல் | நோடி |
| அங்கத்தினர் | சுற்றுத்தளம் | பழுதுபார் |
| கைப்பிடிச்சுவர் | இராட்டினம் | நியமிக்கப்பட்டு |
| பார்வையிடுவோர் | படிக்கட்டு | இலவசமாக |
| தேர்தல் | இருமருங்கு | வாசகசாலை |
| தலைவர் | வருவாய் | தனித்தனி |
| உபதலைவர் | வீதாசாரம் | காரியாலயம் |
| குமாஸ்தா | சுயநலம் | குற்றேவல் |

## கேள்விகள்

1. பஞ்சாயத்து சபையில் பழக்கம் பெறுவதால் என்ன தகுதி ஏற்படும் ?

2. பஞ்சாயத்து சபையாருக்கு எவ்வெவ் வகைகளில் வருவாய் கிடைக்கிறது ?

3. அவர்கள் கவனிக்கும் பொதுநலக் காரியங்கள் என்னென்ன ?

## பயிற்சி

1. பொருள் கூறு :
சுயநலம், இலவசம், வருவாய்.

2. எதிரான அர்த்தமுள்ள வேறு சொற்களை எழுது :
சுயநலம், வருவாய், எரியும்.

3. பின்வரும் வாக்கியங்களை இரண்டிரண்டாகப் பிரித்து எழுது :

(i) கிராமமே ஆயினும், தெருக்கள் எல்லாம் ஒழுங்காக அமைக்கப்பட்டும், வீடுகள் எல்லாம் வரிசையாகக் கட்டப்பட்டும் இருக்கின்றன.

(ii) தினந்தோறும் தெருக்களைக் கூட்டுவதற்குத் தோட்டிகள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

(iii) பொதுநலக் காரியங்களைச் செய்வதற்குப் பொதுமக்களிடமிருந்தும், ஜில்லா போர்டாரிடமிருந்தும் அவர்களுக்கு வருவாய் வருகிறது.

# 3. இராஜா ராம்மோகன் ராய்

உலகம் புகழும் பெரியார்களுள் இராஜா ராம் மோகன் ராய் ஒருவர். இராம்மோகன் என்பது இவருக்குப் பெற்றோர்களால் இடப்பட்ட பெயர். 'ராய்' என்பது இவருடைய குடும்பத்தாருக்கு நவாபு களால் அளிக்கப்பட்ட பட்டப்பெயர். இவருடைய காலத்தில் டில்லியில் மொகலாய வம்சத்தைச் சேர்ந்த ஒரு கிழ அரசர் இருந்தார். அவருடைய நன்மைக்காக இராம் மோகனர் உழைத்தார். அத ஞல் அவர் இராம் மோகனருக்கு 'ராஜா' என்ற பட்டப் பெயரை வழங்கினர். எனவே, 'இராஜா ராம்மோகன் ராய்' என்ற முழுப் பெயர் இவருக்கு வழங்கி வருகிறது.

இராம் மோகனர் வங்காளத்தில் சுமார் நூறு வருஷங்களுக்கு முன் தோன்றினர். இவர் அந்த ணர் வகுப்பைச் சேர்ந்தவர். இவருடைய முன்னோர் வங்காள நவாபிடம் உத்தியோகம் செய்தவர்கள். ஆகையால் இவருடைய பெற்றோர் மிகுந்த செல்வ முடையவர்கள்.

இளமையிலிருந்தே இவர் புத்திக்கூர்மை உடை யவர். வங்காளி, பாரசீகம், சம்ஸ்கிருதம் ஆகிய மொழிகளையே இவர் இளமையில் கற்றார்; சிறிது வயதான பிறகு ஆங்கில பாஷையைக் கற்றுத்

தேர்ச்சி அடைந்தார். சில வருஷங்கள் இவர் சிறப்புடன் உத்தியோகம் செய்துவந்தார். செல்வக் குடும்பத்தில் பிறந்தவராகையால் உத்தியோகம் செய்ய வேண்டிய அவசியம் இவருக்கு இல்லை. தவிரவும் சமூகத்தில் புதிய சீர்திருத்தங்களைத் தேடு



வதிலேயே இவர் நாட்டமுடையவராக இருந்தார். ஆகையால் தாம் செய்து வந்த உத்தியோகத்தி லிருந்து தாமே விலகிக் கொண்டார்.

சமூக விஷயத்தில் இராம் மோகனர் செய்த சீர்திருத்தங்கள் மிகவும் முக்கியமானவை. இந்து சமூகத்தில் உடன்கட்டை ஏறும் ஒரு கொடிய வழக்கம் இருந்தது. அதாவது கணவன் இறந்து போனல், அவனுடைய மனைவியையும் உயிரோடு அப்பிணத்துடன் வைத்துக் கொளுத்தி வந்தார்கள். அக்காலத்தில் இந்தியாவில் இராஜப் பிரதிநிதியாக

விளங்கியவர் பெண்டிங் பிரபு என்பவர். உடன் கட்டையின் கொடுமையைப்பற்றி இராம் மோகனர் அவரிடம் எடுத்துரைத்து விளக்கினர்; மிகவும் பாடு பட்டு அக்கொடிய வழக்கத்தை அறவே ஒழியச் செய்தார்.

மத நூல்கள் பலவும் இராம் மோகனர் கற்ருர். தம்முடைய ஆராய்ச்சியால் 'பிரம்ம சமாஜம்' என்ற புதிய சபையை ஏற்படுத்தினர். பிரம்மம் என்ற பரம்பொருளுக்கு உருவம் இல்லையாகையால் விக்கிரகங்கள், படங்கள் முதலியன வைத்துக்கொண்டு வணங்குவது சரியன்று என்பதும், உருவம் இல்லாமலே பிரம்மத்தைத் தியானிக்கலாம் என்பதும் அச் சபையின் முக்கியக் கொள்கை. வங்காளிகள் அநேகர் அச்சபையில் சேர்ந்தார்கள். இரவீந்திர நாததாகூரின் தகப்பனராகிய தேவேந்திரநாத தாகூரும் பிரம்ம சமாஜத்தில் சேர்ந்தார்.

இராம் மோகனர் தம் வாழ்நாளின் இறுதியில், மொகலாய அரசருடைய காரியமாக இங்கிலாந்துக்குச் சென்ருர். இந்தியாவின் அரசாங்க நிலைமையைப்பற்றியும், மத விஷயங்களைப்பற்றியும் இங்கிலாந்தில் அரசாங்கத்தாருடன் பேசினர். முதுமைப் பருவத்தால் அவர் அங்கேயே இறந்து போனர். இந்திய சரித்திரத்தில் இராஜா ராம் மோகன் ராய் அழியாத புகழ் உடையவர்.

| | | |
|---|---|---|
| பட்டப்பெயர் | விலகிக்கொண்டார் | நாட்டம் |
| சமூகம் | உடன்கட்டை | பிரம்ம சமாஜம் |
| சீர்திருத்தம் | ஆராய்ச்சி. | முதுமைப்பருவம் |
| கொள்கை | தியானிக்கலாம் | இராஜப்பிரதிநிதி |

## கேள்விகள்

1. இராஜா ராம் மோகன்ராய் நாட்டிற்காகச் செய்த முக்கிய நன்மைகள் எது ?

2. உடன்கட்டை ஏறுதல் என்றால் என்ன ?

3. ராஜா என்ற பட்டம் அவருக்கு யாரால் அளிக்கப் பட்டது ? எதற்காக அளிக்கப்பட்டது ?

## பயிற்சி

1. கோடிட்ட இடங்களில் தகுந்த வார்த்தைகளை அமைத்துப் பூர்த்தி செய் :

(ராய் என்பது இவருடைய குடும்பத்தாருக்கு) ——— அளிக்கப்பட்ட பட்டம்.

(ii) ராம்மோஹனர் வங்காளத்தில் சுமார் ——— வருஷங்களுக்கு முன் தோன்றினார். இவர் ——— வகுப்பைச் சேர்ந்தவர்.

2. எதிர்ப் பதங்கள் கூறு :

முதுமை, புகழும், நன்மை.

3. கீழேயுள்ளவற்றில் சொற்களைச் சரியாக வரிசைப் படுத்தி வாக்கியங்களாக்கு :

(i) இறந்து போனார் அவர் அங்கேயே முதுமைப் பருவத்தால்.

(ii) உடையவர் இவர் புத்திக்கூர்மை இளமையி லிருந்தே.

(iii) சென்றான் சரவணன் பள்ளிக்குத் தினந் தோறும்.

# 4. சுதந்திரம் யாது?

அச்சம் விட்டது சுதந்திரம்
அன்பு விடாதது சுதந்திரம்
இச்சைப் படிசெயல் சுதந்திரம்
இடர்செய் யாதது சுதந்திரம்
பிச்சை கொள்ள விரும்பாது
பிறருக் கீய வருந்தாது
கொச்சை மொழிகளைச் சொல்லாது
கோணல் வழிகளிற் செல்லாது. (1)

மடமை விட்டது சுதந்திரம்
மானம் விடாதது சுதந்திரம்
கடமை கற்றது சுதந்திரம்
கபடம் அற்றது சுதந்திரம்
கொடுமை கண்டு பொறுக்காது
கொடியர் தமையும் வெறுக்காது
அடிமை செய்து சுகிக்காது
யாரையும் அடிமை வகிக்காது. (2)

—நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை

| | | |
|---|---|---|
| அச்சம் | கோச்சை | மடமை |
| இச்சை | ஈய | மானம் |
| இடர் | கோணம் | கபடம் |
| கோடியர் | சுகிக்சாது | வகிக்காது |

## கேள்விகள்

1. எவற்றை விட்டது சுதந்திரம்?

2. எவற்றை விடாதது சுதந்திரம்?

3. சுதந்திரம் எந்த மொழிகளைச் சொல்லும்? எந்த வழிகளில் செல்லும்?

# 5. ஜவுளி வியாபாரி

ஒரு சமயத்தில் ஜவுளி வியாபாரி ஒருவன், தன்னிடமிருந்த ஜவுளி மூட்டையுடன் ஒரு பாலை வனத்தைக் கடக்க நேர்ந்தது. அவன் வாடகைக்கு ஒரு ஒட்டகத்தைப் பேசிக்கொண்டான். அவன் தன் மூட்டையுடன் ஒட்டகத்தின் மேல் ஏறிக்கொண்டான். ஒட்டகம் ஓட்டி ஒட்டகத்தை ஓட்டிச்சென்றான். சிறிதுதூரம் சென்றதும் அவ்வியாபாரி களைத்துப்போய் ஓரிடத்தில் தங்கினான். சிறிது நேரத்தில் அவன் அயர்ந்து தூங்கி விட்டான்.

அப்போது ஒட்டகமோட்டி, வியாபாரிக்காகக் காத்திருக்க வேண்டும் அல்லவா? அவன் அவ்வாறு செய்யவில்லை. ஜவுளி மூட்டையுடன் அவன் தன் ஒட்டகத்தைச் செலுத்திக்கொண்டு பாலைவனத்தைக் கடந்தான். அம்மூட்டையில் உயர்ந்த ஆடைகள் இருந்தன. அவற்றை விற்றுப் பெருந் தொகை அடைந்தான். அத்தொகையைக் கொண்டு வேறு வர்த்தகம் செய்து பிரபுவானான். ஒட்டகமோட்டும் பணியை விட்டுவிட்டான்.

அயர்வும் தூக்கமும் பிரிந்தபின் வர்த்தகன் ஒட்டகம் ஓட்டியை காணாமையால் வருந்தினான். வெகு கஷ்டத்துடன் பாலைவனத்தைக் கடந்தான். சில வருஷங்கள் கழித்து வர்த்தகனாக விளங்கிய ஒட்டகம் ஓட்டியைக் கண்டுபிடித்துத் தன்னுடைய ஜவுளி மூட்டையைக் கொடுக்கும்படி அவனைக் கேட்டான்.

அதற்கவன் ஒன்றுமறியாதவன் போல் பேசினான். தான் ஒட்டகம் ஓட்டியாக இருந்ததே இல்லை

யென்றும் அவ் வர்த்தகனைப் பற்றியும் ஜவுளி மூட்டையைப் பற்றியும் தனக்கு ஒன்றும் தெரியாது என்றும் கூறிவிட்டான்.

அச்சொற்களைக் கேட்ட வர்த்தகன், திகிலும், கவலையும் கொண்டு அவ்வூர் நீதிபதியிடம் சென்று



முறையிட்டான். நீதிபதி புதிய வர்த்தகனைக் கூப்பிட்டு அவனுடைய வாக்குமூலத்தைக் கேட்டார். அவன் முன் போலவே முழுப் பூசனிக்காயைச் சோற்றில் மறைப்பது போல் பேசினன்.

"பொய்யுடை யொருவன் சொல்வன்மையினல் மெய்போலும்மே, மெய்போலும்மே" என்றபடி நீதிபதியால் உண்மையை அறியக் கூடவில்லை. ஜவுளி வியாபாரிக்குச் சாக்ஷியும் இல்லை. ஆகையால் அவர்கள் இருவரையும் சற்று நேரம் கட்டடத்தின் புறக்கடையில் இருக்கும்படி கூறினர். தாம்

நீதி மன்றத்தின் மாடியில் இருந்துகொண்டு ஜன்னலின் வழியாக அவர்கள் என்ன செய்கிறார்கள் என்று கவனித்தார். ஜவுளியைப் பறிகொடுத்தவன் கவலையுடன் ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தான். புதிய வர்த்தகன் தான் தப்பிவிட்டதாக எண்ணினமையால் மகிழ்ச்சியாக உலாவிக்கொண்டிருந்தான்.



அவற்றைக் கவனித்த நீதிபதி, 'ஏ, ஒட்டக மோட்டியே!' என்று கூப்பிட்டார். ஜவுளி வியாபாரி அச் சொற்களை காதில் வாங்கவே இல்லை. புதிய வியாபாரி தன்னையறியாமலே திரும்பிப் பார்த்தான். நீதிபதி உண்மையை அறிந்துகொண்டார். அவனுடைய புதிய முதலிலிருந்து, ஜவுளிக்குரிய மதிப்புத் தொகையை அவ்வியாபாரிக்குக் கொடுக்கும்படி செய்தார். நீதிபதி அறிவு நுட்பம் உடையவரன்றோ!



இக்கதையினால் நாம் அறிவது என்ன? மனச்சாக்ஷி எப்போதும் பொய்மைக்கு இடம் தராது. பொய்யும் இறுதியில் வெளியாகிவிடும்.

| | | |
|---|---|---|
| சமயம் | ஒட்டகம் ஓட்டி | முறையிட்டான் |
| ஜவுளி | பாலைவனம் | வாக்குமூலம் |
| பிரபு | கடந்தான் | சொல்வன்மை |
| அயர்வு | திகில் | சாக்ஷி |
| அறிவு நுட்பம் | கவலை | நீதிமன்றம் |

கேள்விகள்

1. ஒட்டகம் ஓட்டி செய்த மோசம் என்ன?
2. நீதிபதிக்கு உண்மை எப்படித் தெரிந்தது?
3. இக்கதையால் என்ன நீதி விளங்குகிறது?

பயிற்சி

1. கோடிட்ட இடங்களில் பின்வரும் வார்த்தைகளில் தகுந்தவற்றை அமைத்துப் பூர்த்தி செய்:

[அடைந்தான், தங்கினான், கவனித்தார், நேர்ந்தது]

(i) ஜவுளி வியாபாரி ஒருவன் ஒரு பாலைவனத்தைக் கடக்க ——.

(ii) வியாபாரி களைத்துப் போய் ஓரிடத்தில் ——.

(iii) அவற்றை விற்றுப் பெருந்தொகை ——.

(iv) அவர்கள் என்ன செய்கிறார்கள் என்று ——.

2. பின்வரும் சொற்கள் பெயர்ச்சொற்கள் என்பது உங்களுக்குத் தெரியும். இவற்றில் பொருள்களின் பெயர்கள் சில: இடங்களின் பெயர்கள் சில. வேறு வகைகளும் இருக்கின்றன. அவற்றைப் பின்காட்டியபடி வகைப்படுத்தி எழுது:

| பெயர்ச் சொல்லின் வகை | பெயர்ச் சொற்கள் |
|---|---|
| (i) பொருட் பெயர் | மரம் |
| (ii) இடப் பெயர் | வயல் |
| (iii) காலப் பெயர் | மாலை |
| (iv) உறுப்பு (சினை)ப் பெயர் | நகம் |
| (v) குணப் பெயர் | தீமை |
| (vi) தொழிற் பெயர் | ஓட்டம் |

வீடு, மன்னன், ஆட்டம், நன்மை,
விரல், வண்டி, நாடு, நடுப்பகல்,
வாரம், புசித்தல், கை, புத்தகம்.

## 6. கயிறு திரித்தல்

குடிசைத் தொழில்களுள் கயிறு திரித்தலும் ஒன்று. இத்தொழிலுக்கு எந்திரங்கள் எதுவும் வேண்டுவதில்லை; முதற்றொகையும் நிரம்ப வேண்டுவதில்லை. ஆண்களும் பெண்களும் தம் வீட்டிலிருந்தவாறே இத்தொழிலைச் செய்யலாம். இத்தொழிலுக்கு வேண்டிய மூலப்பொருள் பல வகையான நார்களே.

முன்னாட்களில் கிராம வாசிகளுள் அநேகமாக ஒவ்வொருவரும் தத்தம் வீட்டுத் தேவைக்கு வேண்டிய தும்புக் கயிறு, தாம்புக் கயிறு, கட்டிற் கயிறு முதலியவைகளைத் தாமே திரிப்பதற்கு அறிந்திருந்தார்கள். இக்காலத்தில், ஒரு சிறு கயிறு வேண்டுமானாலும் காசு கொடுத்து வாங்குகிறார்கள். மாட்டிற்குத் தும்புக் கயிறு வேண்டுமானால், கடையைத் தேடுகிறார்கள். எவ்வாறாயினும் அத்தொழில் மட்டும் இன்றைக்கும் ஒரு

சிலரால் செய்யப்படுகிறது. ஏழைகள் இச் சிறு தொழிலைச் செய்து இன்றும் ஜீவிக்கிறார்கள். என்றாலும் முன்னாட்களை விட இப்போது அத் தொழில் ஓரளவு குறைந்திருக்கிறது.



இவ்விதமான சிறு தொழில்களை எவரும் அலக்ஷியம் செய்துவிடக்கூடாது. தத்தம் வீட்டிற்கு வேண்டிய சிறு வேலைகளை, ஓய்வு உள்ளவர்கள் தாமே செய்வது சிக்கனமாகும்.

தென்னை, பனை, தாழை, ஈந்து, கற்றாழை, புளிச்சை இவைகளின் நார் வகைகளே கயிறு திரித்தலுக்கு வேண்டிய மூலப் பொருள். ஒரு சிறு பலகையும் குச்சியுமே கயிறு திரிப்போருக்கு வேண்டிய கருவிகள். நார்களைப் பதமாகச் செய்து கொண்டு சிறிது சிறிதாக அவைகளைத் திரித்து, முறுக்கேற்றுவதைப் பார்க்க வெகு உற்சாகமாக

இருக்கும். மிக அற்பப் பொருளாகிய நார்வகை களிலிருந்தே, மணிக்கயிறு முதல் வடக்கயிறு ஈருகப் பல்வேறு அளவுகளில் கயிறுகள் திரிக்கப் படுகின்றன. மிக மென்மையான நார்வகைகள், எவ்வளவு உறுதியான கயிறுகள் ஆகின்றன! படகுகளை இழுத்துக் கட்டுவதற்கும், தேர் இழுப்ப தற்கும், முரட்டு மிருகங்களை அடக்குவதற்கும், சாரங்கள் இணைப்பதற்கும், கட்டுமரங்களைக் கட்டுவ தற்கும், எண்ணிறந்த சிறு வேலைகளுக்கும் அவை கள் பயன்படுகின்றன.

வடநாடுகளில் சணல் என்னும் ஒரு வகைச் செடியிலிருந்து எடுக்கப்படும் நாரினல் சாக்குப் பைகளும், இரட்டுகளும் செய்யப்பட்டு ஏராளமாக ஏற்றுமதியாகின்றன. நார் வகைகளை நேர்த்தியான நூல்களாகச் செய்து, பட்டுப்போல் நேர்த்தியான ஆடைகள் நெய்கிறார்கள். அவை நார்மடிகள் எனப்படும்.

ஆகையால் அற்பம் என்று நாம் எந்தப் பொருளையும் இகழக்கூடாது. அற்பமாகிய பொருள் களும், மனிதனுடைய உழைப்பைப் பெற்றால் பல வழிகளில் உபயோகப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| கயிறு திரித்தல் | தும்பு | முரட்டு மிருகம் |
| ஏராளமாக | தூளி | ஜீவிக்கிறார்கள் |
| நார்மடி | அற்பம் | அலக்ஷியம் |
| இணைப்பதற்கு | உழைப்பு | மூலப்பொருள் |
| தாம்பு | சாரம் | |

## கேள்விகள்

1. கயிறு திரிப்பதற்கு உபயோகப்படும் மூலப் பொருள்கள் யாவை?

2. கயிறுகள் எந்தெந்த வகைகளில் பயன்படுகின்றன?

3. நார் மடிகள் என்பன யாவை?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி:

ஏராளமாக, அற்பம், உழைப்பு.

2. பின்வரும் வாக்கியங்களைச் சேர்த்து ஒரே வாக்கியமாய் எழுது:

(i) குடிசைத் தொழில்களுள் கயிறு திரித்தலும் ஒன்று. இதற்கு எந்திரங்கள் வேண்டுவதில்லை.

(ii) நார்களைப் பதமாகச் செய்வார்கள். அவைகளைத் திரித்து முறுக்கேற்றுவார்கள்.

(iii) நார் வகைகள் மேன்மையானவை. அவை எவ்வளவு உறுதியான கயிறுகள் ஆகின்றன!

3. பின்வரும் வாக்கியத்தில் காற்புள்ளி [,] எங்கெல்லாம் உபயோகப்பட்டுள்ளன என்று கவனி:

தென்னை, பனை, தாழை, ஈந்து, கற்றாழை இவைகளின் நார்களே கயிறு திரித்தலுக்கு வேண்டிய மூலப் பொருள்கள்.

சமநிலையிலுள்ள சொற்களும் (சொல் தொடர்களும்) பல அடுக்கி வரும்பொழுது அவற்றைப் பிரித்துக் காட்ட காற்புள்ளி உபயோகப்படுகிறது. வாக்கிய முடிவில் முற்றுப்புள்ளி [.] உபயோகப்படுவது உங்களுக்குத் தெரியும்.

4. பின்வரும் வாக்கியங்களில் காற்புள்ளியும் முற்றுப் புள்ளியும் சரியாக அமைத்து எழுது:

படகுகளை இழுத்துக் கட்டுவதற்கும் தேர் இழுப்பதற்கும் முரட்டு மிருகங்களை அடக்குவதற்கும் அவை பயன்படுகின்றன. நார் வகைகளை ஆடையாக நெய்கிறார்கள்.

# 7. மலைகள்

பூமியின் மேற்புறம் எங்கும் ஒரே மட்டமாக அமைந்திருக்கவில்லை. சில பிரதேசங்கள் உயர்ந்த மேடாகவும், சில இடங்கள் மிகத் தாழ்ந்த பள்ள மாகவும், சில இடங்கள் நடுத்தரமாகவும் அமைந் திருக்கின்றன. அவற்றுள் மிகத்தாழ்ந்த பள்ளங் களே பரந்த கடல்கள். நடுத்தரமான பிரதேசங்கள் சம நிலங்கள் எனப்படும். மிக மேடான இடங்கள் மலைகள் எனப்படும்.

மலைகள் நாட்டிற்குப் பல வளங்களை அளிப் பவை. அவைகள் அளக்கலாகா அளவும், பொரு ளும், தோற்றமும் உடையவை. மலைகளை உடைய நாடு மற்றெல்லா வளங்களையும் பெறும். உயர்ந்த மலைகள் மேகங்களைத் தடுத்து நாட்டிற்குள் மழை பொழியும்படி செய்யும். மலைகளிலிருந்து ஆறுகள் தோன்றும். அவை நாடெங்கும் பரவி ஓடிப் பாய்ச் சலுக்கு உதவும். மலைக் காடுகளில் சந்தனம், தேக்கு முதலிய பெரிய மரங்கள் வளர்கின்றன. மலையடி வாரங்களில் காப்பி, தேயிலை, பலவிதக் காய்கறிகள், பழவகைகள் முதலியன பயிராகின்றன. சில மலை களில் யானைகள் கூட்டம் கூட்டமாக வசிக்கும். அவைகள் நாட்டிற்குச் செல்வமாகும். சிறிய மலை கள் குன்றுகள் எனப்படும். அவ்விடங்களில் மான் முதலிய சிறிய மிருகங்கள் வாழும். அவைகளாலும் மனிதருக்கு நலன்கள் உண்டு. மலைக்குக் குறிஞ்சி என்றும், மலை நாட்டிற்குக் குறிஞ்சி நிலம் என்றும் பெயர். மலை நாட்டில் வசிப்பவர்கள் குறவர்கள் எனப்படுவர். குறவர்கள் மலைபடு பொருள்களைக்

கொண்டு வந்து மற்ற நிலங்களில் இருப்பவர்களுக்கு விற்பார்கள். மற்ற நிலங்களில் கிடைக்கும் பொருள்களைத் தாம் வாங்கிச் செல்வர். ஆகவே குறவர்களுக்கு வாணிபம் முக்கியத் தொழிலாகும்.

மலைகளை நாட்டிற்கு ஒரு பாதுகாப்பாகவும் கூறலாம். இந்தியாவின் வடக்கில் இமயமலைத்



தொடர்கள் பரவியிருக்கின்றன. வெளிநாட்டிலிருந்து வரும் பகைவர்கள் அவற்றைக் கடந்து வர முடியாது. தென்னிந்தியாவிலுள்ள மேற்குத் தொடர்ச்சி மலைகளும் நாட்டிற்கு ஓர் அரண்போல் விளங்குகின்றன.

மலைகளில் வெப்பம் குறைவாகவும் குளிர் மிகுதியாகவும் இருக்கும். மிகவும் உயர்ந்த மலைகளில் மனிதர் வசிப்பதற்கு முடியாது; அங்குப் பொறுக்க முடியாத குளிர் இருக்கும். சில சிகரங்களில் பனிக்

கட்டி சூழ்ந்திருக்கும். சில மலைகள் கோடை காலங் களில் வாசஸ்தலங்களாக விளங்கும்; அங்கு வெப்ப மும் தண்மையும் ஓரளவாகக் காணப்படும். தென் னிந்தியாவில் உள்ள கொடைக்கானல், சேர்வ ராயன் மலை, நீலகிரி ஆகிய இடங்கள் கோடையில் தங்குவதற்கு ஏற்ற இடங்களாம்.

தமிழ் நாட்டில் உள்ள பல சிறிய குன்றுகள் வழிபாட்டு இடங்களாகவும் விளங்குகின்றன. அவ் விடங்களில் உள்ள கோவில்கள் மிகப் பழங்காலத்தி லிருந்தே சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| மேற்புறம் | நடுத்தரமாக | கோடை |
| மேகங்கள் | அளக்கலாகா | வெப்பம் |
| தேக்கு | மலையடிவாரம் | தண்மை |
| சந்தனம் | வாசஸ்தலம் | அரண் |
| குறிஞ்சி | பனிக்கட்டி | வழிபாடு |
| குறவர் | ஓரளவாக | பழங்காலம் |

## கேள்விகள்

1. எவற்றிற்கு மலைகள் என்று பெயர்? எத்தகைய இடங்கள் கடல் எனப்படும்?

2. மலைகள் எவ்வெவ் வகைகளில் நாட்டிற்கு வளங் களைக் கொடுக்கும்?

8. குறவர்கள் என்பவர்கள் யாவர்?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி:
நடுத்தரம், மலையடிவாரம், வெப்பம்.

2. பின்வரும் பெயர்ச் சொற்களுக்கு ஒருமை, பன்மை கூறு :

மலைகள், சிகரம், இடங்கள், குன்று.

3. பின் வரும் வாக்கியங்களிலுள்ள தவறுகளைத் திருத்தி எழுது :

(i) மலைகள் இருக்கிறது.

(ii) சிகரங்களில் பனி மூடியிருக்கின்றன.

(iii) மலைவாசிகள் குறவன் எனப்படுவான்.

# 8. பெரியோர்

காந்தி மகான் உலகம் புகழும் உத்தமர். உலகத்திலுள்ள எல்லா மக்களையும் அவர் தம்மைப் போலவே நேசித்தார். சாத்துவிக நிலையையே மேற்கொண்டு ஒழுகினர். அஹிம்சா தருமத்தைக்



கடைப் பிடித்தார். தம்முடைய சுயநலத்தைச் சிந்திக்காமலே, நாட்டிற்காகப் பாடுபட்டார். வாட் போர் செய்யாமலும், ரத்தம் சிந்தாமலும் இந்தியாவிற்கு விடுதலை உண்டாகச் செய்தார்.

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே, வட இந்தியாவில் புத்தர் பெருமான் தோன்றினர். தமக்குரிய மன்னர் பதவியை அவர் வெறுத்துத் துறந்தார். ஆடுகள், கோழிகள் முதலாக, எல்லா உயிர்களிடத்திலும் கருணை கொண்டார். மக்களின் துன்பங்களைப் போக்குவதே தருமமாகக் கொண்



டார். மக்களின் துன்பங்களைப் போக்கும் மார்க்கத்தைக் காணத் தாம் அல்லும் பகலுமாய் ஆண்டுகள் பல சிந்தனை செய்தார். தாம் அறிந்த உண்மைகளை யாவர்க்கும் ஓதினர். மக்களுடைய மனத்தில் வேற்றுமையின்மை, அன்பு, கருணை ஆகிய நல்ல பண்புகளைப் பதியச் செய்தார்.

சிவாஜி என்பவர் மன்னராய் விளங்கிய ஒரு பெரியார். இந்தியாவில் மகாராஷ்டிர அரசாங்கத்தை நாட்டியவர் சிவாஜி மன்னர். அவருடைய உழைப்பின் பெருமையால், மகாராஷ்டிரர்கள் படைகளிலும், ஆட்சியிலும் சிறப்பாக விளங்குகிறார்கள். சமூகத்தையும் தாய் நாட்டையும் அல்லல் தீரச் செய்தவர் சிவாஜி. பகையை வெல்வதிலும், எடுத்த



காரியத்தைச் சாதிப்பதிலும், ஆட்சி முறையிலும் சிறந்து விளங்கியவர் அவர்.

பாமரராய்த் திரிந்த மக்களுக்குக் கடவுளின் உண்மை விளக்கிய பெரியார்களுள் முகம்மது நபி ஒருவர். இடையிலே ஏற்பட்ட இன்னல்களைக் கண்டு அஞ்சாமலும், தளர்ச்சி அடையாமலும் தாம் கண்ட உண்மைகளைப் பரவச் செய்தார். அப் பெரியாருடைய அருளால், இஸ்லாம் சமயம் உலகத்தில் பரந்து விளங்கலாயிற்று.



தமக்குத் துன்பம் விளைத்தவர்களையும் நேசித்து, அருள் காட்டியவர் ஏசுநாதர். மக்களின்

அஞ்ஞானத்தைப் போக்கி ஞானத்தை உபதேசித்த தேவ தூதர் அவர். எல்லோருக்கும் நல்லறிவை அளிக்க வேண்டும் என்றும், அவர்களுடைய பிழைகளைப் பொறுத்தருள வேண்டும் என்றும் அவர் கடவுளைத் தியானம் செய்தார்.

இப்பொழுது இந்தியாவின் மும்மணிகளாய் விளங்கும் பெரியார்களைப் பற்றி நீங்கள் எல்லோரும் அறிவீர்கள். அவர்கள் பண்டித ஜவஹர்லால் நேரு, வல்லபாய் படேல், சக்கரவர்த்தி ராஜகோபாலாசாரியார் ஆகிய மூவர்.





தம் சுய நலங்களைப் பொருட் படுத்தவில்லை இவர்கள். இந்தியாவின் நன்மைக்காகத் தாம் சிறைவாசம் அநுபவித்தார்கள். தம் வாழ்க்கையையே நாட்டிற்கெனத் தியாகம் செய்தார்கள் அவர்களுடைய தவம் சித்தி பெற்றது; இந்தியாவின் சுதந்திரத்தை உருவாக்கினார்கள். பஞ்ச நோய் அகலவும், 'ஏழையென்பவர் இந்தியாவில் இல்லையே' என்று பெயர் ஏற்படவும் நம் நாட்டைக் காப்பாற்றும் ஆற்றல் இவர்களிடம் உண்டு. நாட்டிற்குக்

கேடு வராமல், எவ்விதப் பகையையும் வென்று அழிக்கும் வன்மையும் உடையவர்கள் இவர்கள்.



இம் முப்பெரு மக்களும நீடூழி வாழ்ந்து இந்தியத்தாய் பெற்ற சுதந்திரத்தை நிலைக்கச் செய்வார்களாக.

| | | |
|---|---|---|
| சாத்துவிகநிலை | மும்மணி | விடுதலை பெற |
| அல்லல் தீர | தியாகம் | அல்லும் பகலும் |
| பெருமான் | பஞ்சநோய் | இந்தியத் தாய் |
| மார்க்கம் | வாட்போர் | வேற்றுமையின்மை |
| உபதேசம் | சிந்தாமல் | அஹிம்சா தருமம் |
| சமூகத்திலும் | பாமரராய் | பரவச் செய்தார் |
| ஆட்சி முறை | இன்னல்கள் | சிறைவாசம் |
| தந்திரசாலி | தேவதூதர் | சித்திபெற்றது |

## கேள்விகள்

1. ஏசுநாதர் மக்களுக்குச் செய்த நன்மை யாது?

2. புத்தர் கைக்கொண்ட தருமம் யாது ?

3. இப்போது நம் நாட்டில் மும்மணிகளாய் விளங்கும் பெரியோர்கள் யாவர்? அவர்கள் எவ்வித ஆற்றல் உடையவர்கள் ?

## பயிற்சி

1. எதிரான அர்த்தமுள்ள வார்த்தைகளை எழுது :

அஹிம்சை, முன்னே, பெருமை, உண்மை, நேசித்து.

2. ராமன், முருகன், குபேரன், மனிதன்—இந்தச் சொற்கள் மக்கள் அல்லது தேவர்களின் பெயர்.

இவை உயர்திணைப் பெயர் சொற்கள் எனப்படும்

மரம், கல், அது, அவை, பறவை, குரங்குகள்—இவை மக்களும் தேவரும் அல்லாத பிறபொருள்களைக் குறிக்கின்றன. இவை அஃறிணைப் பெயர்ச் சொற்கள்.

3. பின்வரும் சொற்களுக்குத் திணை சொல்லு:

பெரியோர்கள், சிகரம், புத்தர், மாமரம், உலகம்.

# 9. நல்ல தீர்ப்பு

ஓர் ஊரில் ஒரு குடியானவன் இருந்தான். அவன் தன்னுடைய நிலத்தை மற்றொரு குடியானவனுக்கு விற்றான். நிலத்தை வாங்கினவன் செய்நேர்த்தி செய்வதற்காக அந்நிலத்தில் மண்ணை வெட்டினான். அப்போது அம்மண்ணினுள்ளிருந்து அவனுக்கு ஒரு புதையல் கிடைத்தது. அப்புதையலில் நிரம்பப் பொற்காசுகள் இருந்தன. அவன் அப்படியே அப்புதையலை எடுத்துச் சென்று நிலம் விற்றவனை எடுத்துக் கொள்ளும்படி வேண்டினான்.

அதற்கவன், "நான் நிலத்தை உனக்கு விற்று விட்டதால் இனி அதற்கும் எனக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. அதில் புதையல் கிடைத்தது உன்னுடைய அதிர்ஷ்டம் ஆகும். ஆகையால் நீயே அதை வைத்துக்கொண்டு சுகமாக இரு" என்றான்.

நிலத்தை வாங்கினவன், "நிலத்தை நான் விலைக்கு வாங்கினேனே யொழிய அதற்குள் புதைந்திருந்த பொருளை நான் வாங்கவில்லை. ஆகையால் புதையல் உனக்கே உரியது. நான் அதை ஏற்றுக் கொள்ள மனம் ஒப்பவில்லை" என்றான்.

இப்படியே இருவரும் புதையலைப் பெற்றுக் கொள்ள மறுத்து மறுத்துப் பேசினார்கள். முடிவில் அவர்கள் நீதிபதியிடம் போய்த் தங்கள் வழக்கைக் கூறினார்கள்.

நீதிபதியும் தனித்தனியே அவர்களுடைய வாக்கு மூலங்களைக் கேட்டார். அவர்கள் முன் உரைத்தபடியே உறுதியாகக் கூறினார்கள்.

அது கண்ட நீதிபதி அவ்விருவரையும் நோக்கி "உங்கள் இருவருக்கும் குழந்தைகள் இருக்கின்றனவா?" என்று கேட்டார். நிலத்தை விற்றவன் தனக்கொரு மகன் இருப்பதாகக் கூறினன். நிலத்தை வாங்கினவன் தனக்கு ஒரு மகள் உண்



டென்று உரைத்தான். அது கேட்ட நீதிபதி வழக்காளிகளை நோக்கி, "நீங்கள் அவ்விருவருக்கும் மணம் செய்வித்து, புதையற்பொருளை அவர்களிடம் ஒப்படைத்து விடுங்கள்" என்று தீர்ப்புக் கூறினர். அவர்களும் அவ்வாறே செய்தார்கள்.

| | | |
|---|---|---|
| புதையல் | பொற்காசு | நீதிபதி |
| தீர்ப்பு | மறுத்துப்பேசு | தனித்தனியே |
| வழக்காளி | ஒப்படைத்து | வாக்குமூலம் |

## கேள்விகள்

1. யாருக்குப் புதையல் கிடைத்தது? அவன் அதை என்ன செய்தான்?

2. நிலம் விற்றவன் கூறியது என்ன?

3. நீதிபதி எவ்வாறு தீர்ப்புச் செய்தார்?

## பயிற்சி

1. பின்வரும் வார்த்தைகளைச் சொந்த வாக்கியங்களில் உபயோகி :

புதையல், வாக்குமூலம், மறுத்துப்பேசு.

2. நீதிபதி அவ்விருவரையும் நோக்கி, "உங்கள் இருவருக்கும் குழந்தைகள் உண்டா?" என்று கேட்டார்.

இந்த வாக்கியத்தில் மேற்கோள் குறிகள் ("......") உபயோகிக்கப் பட்டிருக்கின்றன. ஒருவர் கூறியதைச் சிறிதும் மாற்றாமல் அப்படியே எடுத்துரைக்கும் பொழுது அந்த வார்த்தைகளைப் பிரித்துக் காட்ட மேற்கோள் குறிகள் உபயோகப்படும்.

3. இப்பாடத்தில் எவ்விடங்களில் மேற்கோள் குறிகள் உபயோகப்பட்டுள்ளன என்று கூறு.

4. உயர்திணைப் பெயர்ச் சொற்கள் மூன்று பால்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன :

(i) அவன், ராகவன், அரசன், தேவன்,—இவை ஆண்பால் சொற்கள்.

(ii) அவள், சீதை, அரசி, தேவி,—இவை பெண்பால் சொற்கள்.

(iii) அவர், அவர்கள், மக்கள்,—இவை பலர்பால் சொற்கள்.

ஆண்பால், பெண்பால் ஆகிய இரண்டும் ஒருமை எண், பலர்பால் பன்மை எண் என்பதைக் கவனியுங்கள்.



# 10. நாமக்கல் கவிஞர்

கவிகள் இயற்றுவோர் கவிஞர் எனப்படுவர். தமிழ் நாட்டில் தற்காலத்தில் விளங்கும் புகழ்பெற்ற கவிஞருள் நாமக்கல் கவிஞர் ஒருவர். அவருடைய இயற்பெயர் இராமலிங்கம் பிள்ளை. நாமக்கல்லில் வசித்து வருவதாலும், கவி இயற்றுவதில் வல்லவர் ஆதலாலும் அச்சிறப்புப் பெயர் வழங்கப்பெற்றது.

தமிழ்ப் புலமையும், ஓவியப் பயிற்சியும் வாய்ந்தவர் அவர். தம் கருத்துக்களை எளிய செந்தமிழ் நடையில் சந்தமும் இசையும் பொருந்தப் பாக்களாக யாத்துக் கூறுவதில் இராமலிங்கம் பிள்ளை மிகப் பயிற்சி பெற்றவர். ஆரம்ப முதற்கொண்டே

அவர் தம் வாழ்நாளைத் தேசீயத் துறையில் ஈடு படுத்தி உழைக்கும் ஒரு பெரிய தியாகி ஆவார்.

நாட்டின் பொதுநன்மையை நாடுவதிலேயே அவர் உவப்பும் ஓர்ப்பும் உடையவர்; அஞ்சாச் சொல்வளம் எஞ்சாது உடையவர். அவரை நேரிற் கண்டவர்கள் அவர்பால் தோன்றும் முகனமர்ந்த நோக்கும், அகனமர்ந்த இன்சொல்லும் கண்டு சாலவும் திருப்தி அடைவர். மனம் வேறு, சொல் வேறு, செய்கை வேறு என்றில்லாமல், மூவகையா லும் செம்மையுடையவர் அவர்.

'உலகிற்கு உதவுதலே பிறப்பின் பயன்' என்ற உண்மையை உணர்ந்தவர் அவர். புலவர்கள் உலகிற்கு உதவக்கூடிய பொருள் யாது? செல்வப் பொருள் புலவர்பால் பெரும்பாலும் இராது. அறி வுரைகளே அவர்களிடம் நிரம்பித் ததும்பும் பொருளாகும். அவைகளை மக்களுக்கு ஓதுவதே புலவர்கள் செய்யக் கூடிய அறம். மக்களுக்கு உணர்ச்சியை எழுப்புபவர்களும், அறநெறியைப் புகட்டுபவர்களும் புலவர்களே.

அம்முறையில் இராமலிங்கம் பிள்ளையும் தம் தொண்டை ஆற்றுபவர் ஆவர். இளைஞர் முதல் யாவரும் கற்கத் தகுந்தவாறு தமிழ்ப்பாடல் பல அவரால் செய்யப்பட்டுள்ளன; செய்யப்படுகின்றன. பாரதியாரின் பாடல்களைப் போன்றே, நாமக்கல் கவிஞரின் பாடல்களும் சொற்சுவை பொருட் சுவைகள் பொருந்தியவை.

அவரால் இயற்றப்பெற்ற பாடல்களைப் படித்து, அவற்றின் உட்பொருளை அறிந்து ஒழுகுவது நம்

முடைய கடமையாகும். அவருடைய பாடல்களில் ஒன்று இப்புத்தகத்தில் சேர்க்கப்பட்டுள்ளது. அவர் இயற்றிய எல்லாப் பாடல்களையும் கற்க முயற்சி செய்யுங்கள்.

| | | |
|---|---|---|
| கவிஞர் | பொருட்சுவை | வாய்ந்தவர் |
| தியாகி | சொற்சுவை | முகனமர்ந்த |
| உவப்பு | இசை | அகனமர்ந்த |
| ஓர்ப்பு | சந்தம் | உட்பொருள் |
| சொல்வளம் | தேசீயத்துறை | புகட்டுபவர் |
| எஞ்சாது | ஈகை | நோக்கு |

## கேள்விகள்

1. புலவர்கள் உலகிற்குச் செய்யக்கூடிய அறம் யாது?

2. கவிஞர் என்றால் யார்?

3. நாமக்கல் கவிஞரின் பண்புகளில் சிலவற்றைக் கூறு.

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி:
கவிஞர், சொல்வளம், ஈடுபடு.

2. கோடிட்ட இடங்களில் தகுந்த வார்த்தைகளை அமைத்துப் பூர்த்தி செய்:

(i) கவிகள் இயற்றுவோர் ——— எனப்படுவர்.

(ii) ——— புலவர்பால் பெரும்பாலும் இராது.

(iii) நாமக்கல் கவிஞரின் பாடல்கள் ——— ——— பொருந்தியவை.

3. அஃறிணைப் பெயர்ச் சொற்கள் இரண்டு பால்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

(i) அது, மரம், மாடு—இவை ஒன்றன் பால் பெயர்ச் சொற்கள்.

(ii) அவை, மரங்கள், மாடுகள்—இவை பலவின் பால் பெயர்ச் சொற்கள்.

இவற்றில், ஒன்றன் பால் ஒருமை எண். பலவின் பால் பன்மை எண்.

அஃறிணைப் பெயர்களில் ஆண், பெண் என்ற பிரிவு சில பிராணிகளுக்கு இருந்தாலும், இலக்கணத்தில் அப் பிரிவு கருதப்படுவதில்லை.

4. பின்வரும் சொற்களுக்குப் பால் கூறு :

கோபாலன், அது, பசு, ஆசிரியர், இந்திரன், தேவி, மகன், மகள், அரசி, மானிடர், மலைகள்—



# 11. கடிகாரம்

'காலமே கருந்தனம்' என்று நீங்கள் கேட்டிருப்பீர்கள். கழிந்த காலம் மீண்டும் திரும்பாது. ஆகையால் காலத்தை வீணாக்காமல், குறித்த காலத்தில் குறித்த வேலைகளைச் செய்வதே சிறப்பாகும். அவ்வாறு செய்வதற்குக் கால அளவைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

காலம் சூரியனால் அறியப்படுகிறது. சூரியோதயத்திலிருந்து அஸ்தமனம் வரையில் உள்ள காலத்தைப் பகல் என்கிறோம். சூரியன் அஸ்தமித்ததிலிருந்து மறுநாள் உதயமாகும் வரையில்

உள்ள காலத்தை இரவு என்கிறோம். ஒரு பகலும் ஓர் இரவும் சேர்ந்தது நாள் எனப்படும். வாரம், மாதம், வருஷம் ஆகியவற்றிற்கு எத்தனை நாட்கள் என்பது உங்களுக்குத் தெரியும்.

ஒரு நாளை நம் முன்னோர்கள் அறுபது சிறு பொழுதுகளாகப் பிரித்திருக்கிறார்கள். அவற்றிற்கு நாழிகை என்று பெயர். ஒரு நாழிகை அறுபது விநாடிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

நம் முன்னோர் கணக்கிட்டபடி, ஒரு நாள் என்பது சூரியோதயத்தில் ஆரம்பமாகக் கொள்ளப்படும். ஒரு நாளில் எவ்வளவு நாழிகைகள் கழிந்தன என்பதைப் பகலில் சூரிய கதியைக் கொண்டும், இரவில் நக்ஷத்திரங்களின் போக்கைக் கொண்டும் கணக்கிட்டார்கள். அவ்வாறு கணக்கிட்டறியக் கூடியவர்கள் ஓர் ஊரில் ஒரு சிலரே இருக்கக் கூடும்.

மாரிகாலத்தில் ஓயாமல் மழை பெய்யும் பொழுது மாலை நேரத்தில் பூக்கக்கூடிய பூவைக் கொண்டு நாழிகையை அறிந்து வந்தார்கள். என்றாலும் இவையெல்லாம் சிரமமான முறைகளே. மக்கள் தம் யூகத்தால் நாழிகையின் கணக்கை அறிவதற்குப் பற்பல கருவிகள் கண்டுபிடித்தார்கள். கடைசியாகக் கடிகாரம் என்னும் சிறந்த கருவி கண்டுபிடிக்கப்பட்டது. கடிகை என்பது நாழிகை. கடிகையை அறிவிக்கும் கருவி கடிகா யந்திரம்.

கடிகாரத்தின்படி ஒரு நாள் இருபத்து நான்கு மணிகளாகப் பிரிக்கப்படும். ஒரு மணி அறுபது நிமிஷங்களாகவும், ஒரு நிமிஷம் அறுபது 'செகண்டுகளாகவும்' பிரிக்கப்படும். ஒரு மணி

என்பது இரண்டரை நாழிகை கொண்டது. கடிகா யந்திரம் மேனுட்டாரால் கண்டுபிடிக்கப்பட்டது. அவர்களின் வழக்கப்படி, ஒரு நாளின் ஆரம்பம் நள்ளிரவிலிருந்து கணக்கிடப்படும். இந்தக் கணக்குப்படியே கடிகாரத்திலும் மணிக்கணக்கு குறிக்கப்பட்டிருக்கிறது.

கடிகாரத்தின் உட்புறத்தில் பல சிறு சக்கரங்களும், 'ஸ்பிரிங்' என்று சொல்லப்படும் சுருள் வில்லும் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் இயங்கும் போது ஏற்படும் கால அளவை மேற்புறத்திலுள்ள முட்கள் அறிவிக்கும். அவ்வியந்திரம் ஒரு பத்திரமான கூட்டில் வைக்கப்பட்டிருக்கிறது. மேற்புறத்திலுள்ள கூட்டில் பன்னிரண்டு எண்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஒரு எண்ணுக்கும் மற்றொரு எண்ணுக்கும் இடையில் உள்ள இடம் ஐந்து பிரிவுகளாகக் குறிக்கப்படும். ஒரு கடிகாரத்தில் முக்கியமாக இரண்டு முட்கள் உண்டு. அவற்றில் ஒன்று பெரியது; மற்றொன்று சிறியது. பெரியமுள் அறுபது நிமிஷத்தில் ஒரு சுற்றுச் சுற்றும். சிறிய முள் ஒரு சுற்றுச் சுற்றுவதற்குப் பன்னிரண்டு மணி ஆகும். சிறிய முள் எந்த எண்ணில் நிற்கிறதோ அவ்வளவு மணி என்றும், பெரிய முள் எந்த எண்ணில் நிற்கிறதோ அவ்வளவு ஐந்து நிமிஷங்கள் கழிந்தன என்றும் கணக்கிடப்படும். சில கடிகாரங்களில் செகண்டுகளைக் காட்டும் முள் ஒன்றும் தனியே இருப்பதுண்டு. மணியைக் காட்டும் முள் ஒரு நாளில் இரண்டு சுற்றுகள் சுற்றும். முதல் சுற்று ஆரம்பம் நள்ளிரவு. அது முதல் மத்தியானம் பன்னிரண்டு மணிவரையில் முற்பகல் என்றும்; மத்தியானம்

பன்னிரண்டு மணிக்கு மேற்பட்டு இரவு பன்னிரண்டு மணிவரையில் பிற்பகல் என்றும் வழங்கப்படும். இவை ஆங்கிலத்தில் முறையே, ஏ. எம்., பி. எம். என்று கூறப்படும்.

கடிகாரத்தில் பல வகைகள் உண்டு. அவை, கையில் கட்டிக்கொள்ளக் கூடியவை, சுவரில் மாட்டக் கூடியவை, மேஜைமீது வைக்கக் கூடியவை என்பன. நவநவமாகவும் நாகரிகமாகவும் அழகாகவும் கடிகாரங்கள் வெளி வருகின்றன. ஏழைகள் முதல், பணக்காரர்கள் வரையில் உபயோகிக்கும்படி பற்பல விலைகளிலும் அவை கிடைக்கின்றன.

இக்காலத்தில் பெரும்பான்மையோருடைய வீடுகளில் கடிகாரம் காணப்படும். பள்ளிக்கூடங்கள், தொழிற்சாலைகள், கச்சேரிகள், புகை வண்டி நிலையங்கள் முதலிய இடங்களில் கடிகாரம் எப்பொழுதும் இருக்கும். சில நகரங்களில் முக்கியமான இடங்களில் பெரிய தூபிகள் கட்டி, அவற்றின் உச்சியில் கடிகாரம் வைக்கப்பட்டிருக்கும். அத்தூபிக்கு மணிக்கூண்டு என்று பெயர் வழங்கும்.

கடிகாரத்தில் உனக்கு மணி பார்க்கத் தெரியுமா? தெரியாவிட்டால் ஒரு போலிக் கடிகாரத்தை வைத்துக்கொண்டு, அதிலுள்ள முட்களைச் சுழலச் செய்து மணியைக் கணக்கிட அறிந்துகொள்.

| | | |
|---|---|---|
| கருந்தனம் | உதயம் | இயங்கும்போது |
| சூரியகதி | அஸ்தமனம் | எந்திரம் |
| சிறுபொழுது | நள்ளிரவு | நாழிகை |
| மணி | மத்தியானம் | விநாடிகை |
| செகண்டு | முற்பகல். | நவநவமாக |
| தூபி | பிற்பகல் | நிலையம் |

## கேள்விகள்

1. கடிகாரத்திலுள்ள முக்கியமான முட்கள் எவை ?
2. மணியையும் நிமிஷத்தையும் கணக்கிடுவது எப்படி ?
3. ஒரு மணி என்பது எவ்வளவு நாழிகை ?

## பயிற்சி

1. பொருள் கூறு :
   கருந்தனம், அஸ்தமனம், கடிகை, நவநவமாக.
2. (i) ஒரு———ஓர்———சேர்ந்தது ஒருநாள்.
   (ii) ஒரு மணி நேரம் என்பது———நாழிகை கொண்டது.
   (iii) ஏழு நாட்கள் கொண்டது ஒரு———.

மேலே கோடிட்ட இடங்களில் தகுந்த வார்த்தைகளை எழுதிப் பூர்த்தி செய்.

3. (i) கேதாரி ஓடினன்.
   (ii) சிறுமி ஆடுகிருள்.
   (iii) அண்ணன் கடிதம் எழுதுகிருன்.

இந்த வாக்கியங்களிலுள்ள வினைச்சொற்களைக் கவனி. ஓடினன் என்பது கேதாரி செய்த தொழிலைக் குறிக்கிறது. ஆடுகிருள், எழுதுகிருன் என்ற வினைச் சொற்களும் முறையே சிறுமியும் அண்ணனும் செய்யும தொழில்களைக் காட்டுகின்றன.

கேதாரி ஓடினன் என்ற வாக்கியத்தில் ஓடினன் என்பது பயனிலை என்று சொல்லப்படும். ஆடுகிருள், எழுதுகிருன் என்பவையும் பயனிலைகளே.

முதல் வாக்கியத்தில் கேதாரியைப்பற்றி ஒரு விஷயம் சொல்லப் பட்டிருக்கிறது. கேதாரி என்ற சொல் இவ் வாக்கியத்தின் எழுவாய் என்று சொல்லப்படும்.

4. (ii), (iii)-ம் வாக்கியங்களின் எழுவாய் பயனிலைகளைக் கூறு.



## 12. கடிகாரம்

(பாட்டு)

சேவற் கோழியுண்டு காகமுண்டு—வானம்
  செக்கச் சிவந்து தெரிவதுண்டு
மேவு பொன்னே! அதிகாலை தெரிந்திட
  வேறும் கடிகாரம் வேண்டுமோடி? (1)

செங்கதிர் பொங்கி வருவதுண்டு—நல்ல
  செந்தாமரைகள் மலர்வதுண்டு
மங்கையே! காலைப்பொழுதை யுணர்ந்திட
  மற்றும் கடிகாரம் வேண்டுமோடி? (2)

தன்னிழல் தன்னடி யாவதுண்டு—சுடர்
தானுந் தலைநேர் எழுவதுண்டு
இன்னமுதே! பகல் உச்சியி தென்றிட
ஏதும் கடிகாரம் வேண்டுமோடி? (3)

விண்மணி ஆழியில் வீழ்வதுண்டு—வாசம்
வீசு மந்தாரை மலர்வதுண்டு
கண்மணியே! மாலைக் காலம் குறித்திடக்
கையில் கடிகாரம் வேண்டுமோடி? (4)

அம்புலி நட்சத்திரங்களுண்டு—கணக்(கு)
ஆக்கி யறிய வழிகளுண்டு;
இன்பமே! நேரம் இரவில் அறிந்திட
இன்னும் கடிகாரம் வேண்டுமோடி? (5)

—தேசிக விநாயகம் பிள்ளை

| | | |
|---|---|---|
| சேக்கச்சிவந்து | சுடர் | அம்புலி |
| மேவு | விண்மணி | வாசம் |
| சேங்கதிர் | ஆழி | |

### கேள்விகள்

1. காலைப் பொழுதில் என்னென்ன நிகழும்?
2. நடுப்பகல் பொழுதை எப்படி அறியலாம்?
3. மாலைக் காலத்தில் ஏற்படும் நிகழ்ச்சிகளை எழுது.
4. இந்தப் பாடல்களில் சூரியனைக் குறிக்கும் சொற்கள் யாவை?

# 13. தவளை

நீரில் வாழும் பிராணிகளுள் தவளை ஒன்று. அது நிலத்திலும் வசிக்கும். குளம், கிணறு, வாய்க்கால் ஆகிய எல்லா நீர்த்துறைகளிலும் தவளைகள் காணப்படும். முழு வளர்ச்சி அடைந்த தவளைகளை எல்லோரும் பார்த்திருப்பார்கள். ஆனால் அதன் பிறப்பு வரலாற்றைப் பொதுவாக எல்லோரும் கவனித்திருக்க மாட்டார்கள். அதைப்பற்றி இப் பாடத்தில் படிப்போம்.

தவளை முட்டையிடும் தன்மை யுடையது. ஒரு தவளையானது நூற்றுக்கணக்கான முட்டைகள் இடும். அம்முட்டைகள், வழுவழுப்பான ஒருவகைப் பொருளோடு தண்ணீரில் மிதக்கும். சூரிய வெப்பம் அவற்றின்மேல் படுவதால் அவை வெடிக்கும். அவற்றிலிருந்து தவளைக் குஞ்சுகள் தோன்றும். முட்டையிலிருந்து வெளிவந்த குஞ்சுகள் தலையும் நீண்ட வாலும் மட்டும் உடையனவாய், பார்வைக்கு விநோதமாய்த் தோன்றும். அவற்றிற்குத் தலைப் பிரட்டை என்றும் பெயர் உண்டு. அவ்விநோதமான தலை-வால் பிராணியே படிப்படியாக வளர்ச்சி யடைந்து தவளையின் முழு உருவம் அடைவதைப் படத்தில் பாருங்கள்.

அவை :—

(1) தலை, வால், செவுள்களோடு மீன் போன்ற உருவம்.

(2) பின் கால்கள் இரண்டு உண்டாகி ஒரு பாதி மீன் வடிவமும், ஒரு பாதி தவளை வடிவமும் உடைய உருவம்.




(3) முன் கால்கள் உண்டாகி உடல் பருத்து வாலுடன் கூடிய தவளை உருவம்.

(4) வால் குறைந்து மறைந்தும் செவுள்கள் மறைந்தும் கிட்டத்தட்ட முழுத் தவளை உருவம்.

(5) முதுகு வளைந்து, நிமிர்ந்த தலையுடன் கூடிய முற்றிலும் வளர்ச்சி பெற்ற தவளை.

தவளை குஞ்சாக இருக்கும்பொழுது, நீர்ப்பூண்டு களையே பற்றிக்கொண்டிருக்கும்; அவற்றிலுள்ள சத்தையே தனக்கு உணவாகவும் கொள்ளும். முழுத் தவளையான பிறகு புழுப் பூச்சிகளைப் பிடித்துத் தின்னும். அதற்கேற்றவாறு அதன் நாக்கு

நுனியில் பசையுடையதாகவும், இரு பிளவு உடையதாகவும், உள்ளே மடிக்கக் கூடியதாகவும் அமைந்திருக்கிறது. தவளை இரையைக் கண்டதும், தன் நாக்கை நீட்டி அதைப் பற்றும்; நாக்கு பசையுடையதாய் இருப்பதால் புழுப் பூச்சிகள் அந்நாக்கில் ஒட்டிக்கொள்ளும். ஆகையால் எளிதில் அது தன் நாக்கை உள்ளே மடக்கி இழுத்து, இரையை விழுங்கிவிடும்.

தவளையின் பின் கால்களின் இடையில் தோல் இணைந்திருக்கும்; அதனால்தான் அது நீரில் நன்றாக நீந்துகிறது. முன்னங்கால்கள் இரண்டும் குறுகியவை; பின்னங்கால்கள் நீண்டவை. ஆகையால் அது தரையில் செல்லும்போது தத்தித் தத்திச் செல்லும்.

வயல்களில் உள்ள புழுப் பூச்சிகளைத் தவளை தின்று வாழ்வது, குடியானவர்களுக்கு ஓர் உதவியேயாகும்.

தவளையின் பிறப்பு வரலாறு எவ்வளவு விசித்திரமானது! இதைப்போலவே பட்டுப்பூச்சி, வண்ணாத்திப் பூச்சி சிலந்தி முதலிய பிராணிகளின் பிறப்பு வளர்ச்சிகளைப் பற்றியும் நீங்கள் நேரில் கவனித்து அறியுங்கள்.

| | | |
|---|---|---|
| நீர்த்துறை | செவுள்கள் | சூரியவெப்பம் |
| முழுவளர்ச்சி | நிமிர்ந்த | மடிக்கக்கூடிய |
| வரலாறு | இரை | இணைந்திருக்கும் |
| விநோதமான | பசை | நூற்றுக்கணக்கான |
| படிப்படியாக | நீந்துகிறது | விசித்திரமான |
| பின்னங்கால் | முன்னங்கால் | |

## கேள்விகள்

1. தவளைகள் எங்கெங்கே காணப்படும்?

2. தவளையின் உணவு யாது?

3. தவளையின் வளர்ச்சியில் ஏற்படும் பல பருவங்களையும் வரிசையாகக் கூறு.

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி :
விநோதமான, படிப்படியாக, செவுள் :

2. பின் வரும் வாக்கியப் பகுதிகள் தவறாகப் பொருந்தியுள்ளன. அவற்றைச் சரியாகப் பொருத்தி எழுது.

| | |
|---|---|
| (i) தவளையின் உணவு | செவுளினால் சுவாசிக்கும். |
| (ii) தலைப்பிரட்டையின் உணவு | நுரையீரலால் சுவாசிக்கும் |
| (iii) தவளை | நீர்ப்பூண்டுகள் |
| (iv) தலைப்பிரட்டை | புழுப்பூச்சிகள். |

3. (i) அஹமத் **புத்தகத்தை** நன்றாகப் படித்தான்.
(ii) சாலமன் **பலகையை** அறுக்கிறான்.
(iii) ஆறுமுகன் **அச்சுதனை** அடித்தான்.

இந்த வாக்கியங்களில் தடித்த எழுத்திலுள்ள சொற்களைக் கவனி. முதல் வாக்கியத்தில் 'எதைப் படித்தான்?' என்ற கேள்விக்கு 'புத்தகத்தை' என்பது விடை. புத்தகத்தை என்பது **செயப்படுபொருள்** என்று சொல்லப்படும். இம்மாதிரியே இரண்டாம் வாக்கியத்தில் பலகையை என்பது செயப்படுபொருள். மூன்றாம் வாக்கியத்தில் 'யாரை அடித்தான்?' என்ற கேள்விக்கு விடையாகக் கிடைக்கும் 'அச்சுதனை' என்பது செயப்படுபொருளாகும்.

4. எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் கூறு :
(i) அது இரையை விழுங்கிவிடும்.
(ii) தவளை தத்தித் தத்திச் செல்லும்.

# 14. யார்க்கும் ஒவ்வொன்றெளிது

கல்வி யுடைமை ஒருவர்க்குச் சிறப்பைத் தரும்; கல்விச் செருக்கு ஒருவர்க்குத் தோல்வியும் அழிவும் விளைவிக்கும். எல்லாம் வல்லவர் என்றோ, தாமே பெரியவர் என்றோ எவரும் பெருமைப்பட முடியாது. "முற்றும் உணர்ந்தவர் இல்லை; முழுவதூஉம் கற்றனம் என்று களியற்க." "கற்றது கைம்மண்ணளவு, கல்லாதது உலகளவு."



உண்மையை ஆராயுங்கால், இவ்வுலகத்தில் "எல்லாம் அறிந்தவரும் இல்லை. ஒன்றும் அறியாதவரும் இல்லை" என்ற உண்மையே புலனாகும்.





வான்குருவி கூடுகட்டுகிறது; கரையான் புற்று உண்டாக்குகிறது; குளவி கூடு அமைக்கிறது.

மக்களால் அவற்றை ஆக்க முடியுமா? சிற்றெறும்பு கள் பெரிய கட்டடங்களையும் துளைத்துவிடுகின்றன; தேனீக்கள் எவ்வளவு நேர்த்தியான கூட்டைக் கட்டுகின்றன? எலியினங்கள் சுரங்கம் போன்ற வளைகளைத் தோண்டுகின்றன. அவற்றின் ஆற்றல் வியக்கத்தக்கது அல்லவா! அது போலவே, மக்களுள்ளும் இலக்கிய இலக்கணம், வாக்கு நயம் இவைகளில் தேர்ந்திருப்பார் ஒருவர். விஞ்ஞானம், கணிதம், இசை என வெவ்வேறு கலைகளில் தனித் தனித் தேர்ச்சி அமைந்திருப்பார்கள் மற்றும் பலர். வியாபாரத் துறையில் ஒருவர் வெகு சமர்த்தராக விளங்கலாம்; போர் முறையில் கைதேர்ந்தவராக ஒருவர் திகழலாம்; கைத்தொழில் வன்மை பெற்றிருப்பார்கள் வேறு பலர்.

கலைகள் பல; ஒவ்வொரு கலையில் ஒவ்வொருவர் தேர்ச்சி பெறலாம். தாம் கற்றுள்ள ஒரு கலையி லேயே, தாமே வல்லவர் என்று செருக்குப் படைக்க முடியாது. வல்லவருக்கு மேல் வல்லவர் இருப்பர். ஒரு சிறு அச்சாணி பெரிய சக்கரத்தை அடக்குகிற தல்லவா! அதுபோல் செருக்குடையவர் ஒரு சிறு தகுதியுடையவரால் வெல்லப்படுவதும் உண்டு.

உடலின் உறுப்புக்களைக் கவனியுங்கள். ஒவ் வோர் உறுப்பும் ஒவ்வொரு பணியைச் செய்கின் றது. எல்லா உறுப்புக்களின் இயக்கமும் பொருந் துவதால்தான், உடல் இயங்குகின்றது. அதுபோல நாட்டின் நலனிற்கு ஒவ்வொரு கலையும் ஒவ்வோர் அம்சம். அவ்வக் கலைகளில் பயிற்சியுடையவர்களும் தத்தம் பணிகளைச் செவ்வையாகச் செய்து நாட்டிற்கு நலம் புரிய வேண்டும்.

தொழில்களில் ஒன்று உயர்ந்தது, ஒன்று தாழ்ந்தது என்பது இல்லை. தாம் கற்ற கலையில் செம்மையுடைமையும், செருக்கின்மையுமே ஒருவருக்கு உயர்வை அளிக்கும்.

உலகத்தை எடுத்துக் கொள்வோம். சில நாட்டினர் வேளாண்மையில் சிறந்து விளங்குவார்கள்; சில நாட்டினர் எந்திர உற்பத்தியில் வன்மை பெற்றிருப்பார்கள். தீக்குச்சிகள் முதற்கொண்டு பற்பல பொருள்கள் நம் வாழ்க்கைக்கு வேண்டியிருக்கின்றன. ஒவ்வொரு பொருள் வகையைச் செய்வதில், ஒவ்வொரு நாட்டினர் பழக்கமும் வசதியும் பெற்றிருப்பர். அவரவர் தத்தம் ஆற்றல் சொல்லிப் புகழ்ந்து கொண்டும், மற்றவர்களை இகழ்ந்து கொண்டும் இருந்தால் வாழ்க்கை நடைபெறுமா?

தீக்குச்சிகளைத் தயாரிப்பவர்கள் அதைமட்டும் வைத்துக்கொண்டு என்ன செய்வது? எந்திரங்கள் உற்பத்தி செய்பவர்கள் அவைகளை விழுங்குவதா? பீங்கான் வேலை செய்வோர் அப் பொருள்களையே வைத்துக் கொண்டு உண்பார்களா? விவசாயி தான் உற்பத்தி செய்த உணவுப் பொருள்களை மட்டும் வைத்துக்கொண்டு என்ன செய்வான்? ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு தொழில் எளிது. ஆகவே, உலகத்திலுள்ள எல்லா நாட்டினரும், தத்தம் தொழில் வன்மையால் உதவவேண்டும்; எல்லா நாட்டினரும் ஒருவரோடொருவர் ஒத்த உணர்ச்சியும், ஒற்றுமையும் கொண்டு வாழ வேண்டும்.

| | | |
|---|---|---|
| செருக்கு | புலனுகும் | அம்சம் |
| கற்றனம் | துளைத்து | திகழலாம் |
| எலியினம் | சிற்றெறும்பு | அச்சாணி |
| வளை | இலக்கணம் | வல்லவர் |
| ஆக்க | இலக்கியம் | செம்மை |
| இசை | வாக்குநயம் | ஒத்தஉணர்ச்சி |
| விஞ்ஞானம் | பணி | |

### கேள்விகள்

1. *பிராணிகளில் ஒவ்வொன்று ஒவ்வொரு வகையில் வன்மையுடையது என்பதைச் சில உதாரணங்களால் விளக்கு.*

2. *செருக்கு உடையவர்கள் எவ்வாறு ஆவர்?*

3. *பல நாட்டினரும் ஒருவரோடொருவர் எவ்வாறு வாழ வேண்டும்?*

### பயிற்சி

1. *சொந்த வாக்கியங்களில் உபயோகி:*
*செருக்கு, பணி, செம்மை.*

2. *கோடிட்ட இடங்களில் சரியான வார்த்தைகளை அமைத்து எழுது.*

(i) ——கைம்மண்ணளவு, ——உலகளவு.

(ii) ——ஒருவர்க்குச் சிறப்பைத் தரும்;—— ஒருவர்க்குத் தோல்வியும் அழிவும் தரும்.

3. *பின்வரும் வாக்கியங்களில் உள்ள தவறுகளைத் திருத்து:*

(i) அவன் புத்தகம் படிக்கிறுர்.

(ii) மாணவர்கள் விளையாடுகிறுள்.

(iii) மரங்கள் வளர்கிறது.

# 15. நல்ல அயலான்

ஏசுநாதர் அவதரித்து மக்களுக்குச் சன்மார்க்கத்தையும் தெய்வ பக்தியின் அவசியத்தையும் போதித்து வந்தார். மக்கள் கூட்டங் கூட்டமாக அவரது பேச்சைக் கேட்க வந்துவிடுவார்கள். சன்மார்க்கத்தின் அரிய கருத்துக்களை எளிய இனிய கதைகளைச் சொல்லி சாதாரண மக்களின் மனத்தில் அவர் பதியவைப்பார்.

ஒரு சமயம் கூட்டத்திலிருந்த ஒருவர் ஏசுநாதரை நோக்கி, "மரணமடைந்த பிறகு நற்கதி பெற, நான் இப்பொழுது யாது செய்யவேண்டும்?" என்று கேட்டார்.

ஏசு நாதர், "எந்தக் காரியம் செய்தாலும் கடவுளைத் துதிப்பதை மறக்காதே. உன்னைக் கருதுவதைப் போலவே அயலாரையும் கருது," என்று பதிலளித்தார்.

கேள்வி கேட்டவர் மறுபடியும், "அயலார் யார்?" என்று கேட்டார். ஏசுநாதர் இதற்குப் பதிலாக ஒரு கதை சொன்னார்.

ஒரு சமயம் ஒரு மனிதன் தன் ஊரிலிருந்து புறப்பட்டு மற்றோர் ஊருக்குச் சென்றுகொண்டிருந்தான். மலையும் காடுமான பாதையில் அவன் தனியே சென்றான். அவனிடம் நிறையப் பணம் இருந்தது. வழியிலிருந்த மலைக் காடுகளில் திருடர் பலர் வாழ்ந்தனர். அவர்கள் இந்தப் பிரயாணியைக் கண்டனர். பிரயாணியின் தோற்றத்திலிருந்து,

அவனிடம் பணம் இருக்கிறதென்று அறிந்த திருடர்கள் கூட்டமாக வந்து அவனைத் தாக்கினர். பிரயாணி தன்னைக் காத்துக்கொள்ளச் சிறிது நேரம் திருடர்களுடன் சண்டை செய்தான். ஆனால் பலரை ஒருவனே எவ்வளவு நேரம் எதிர்த்து நிற்க



முடியும்? கடைசியில் திருடர்கள் அவனைப் பலமாகக் காயப்படுத்தி வீழ்த்தி விட்டனர். அவனிடமிருந்த பணப் பையை எடுத்துக் கொண்டு காட்டுக்குள் ஓடி விட்டனர்.

சிறிது நேரம் கழித்து அவ்வழியே ஒரு கோவில் பூசாரி சென்றார்; காயமுற்றுக் கிடந்த மனிதனைக் கண்டதும் அவர் அவனுக்கு உதவி செய்யச் சொல்லாமல், தூரத்தில் விலகிச் சென்றுவிட்டார். சற்று நேரத்திற்கெல்லாம் மற்றொரு பிரயாணி அவ்வழியே சென்றான். அவனும் காயமுற்றுக் கிடந்தவனைக்

கண்டான். "நமக்கேன் இந்தத் தொந்தரவு! இவனுக்கு உதவி செய்யப் போனால் நமக்கு ஆபத்து ஏற்படும்" என்று எண்ணியவன் போல, அவனும் விரைவாக அவ்விடத்தை விட்டு அகன்றான்.

மூன்றாவதாக அவ்வழியே ஒருவன் வந்தான். காயமுற்றுக் கிடந்த பிரயாணியைக் கண்டதும் இவன் சட்டென்று தன் குதிரையை விட்டு இறங்கி அருகில் சென்று பார்த்தான். தன்னிடமிருந்த



எண்ணெயில் சிறிது எடுத்துக் காயத்தின் மீது தடவி, காயத்தைக் கட்டினான். பிறகு அவனையும் தன் குதிரை மீது ஏற்றிக்கொண்டு பக்கத்து ஊருக்குச் சென்றான். அங்கே ஒரு சத்திரத்தில் தங்கி, காயமுற்றவனுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்தான். சத்திரத் தலைவனிடம் வேண்டிய பணம் கொடுத்து, காயமுற்றவனை நன்கு கவனித்துக்

கொள்ளும்படி செய்து விட்டுத் தன்னூருக்குச் சென்றான்.

இந்தக் கதையைச் சொல்லி முடித்தபின், ஏசுநாதர், "இம்மூவரில், திருடர்களிடம் அடிப்பட்டவனுக்கு அயலான் யார்?" என்று கேட்டார்.

கேள்வி கேட்டவர், "அவனுக்கு உதவிய மூன்றும் மனிதனே" என்று பதிலளித்தார்.

ஏசுநாதர், "அவனைப்போலவே நீயும் பிறருக்கு உதவி செய்," என்றார்.

| | | |
|---|---|---|
| அவதரித்து | அயலான் | சட்டென்று |
| சன்மார்க்கம் | தோற்றம் | சத்திரம் |
| அவசியம் | தாக்கினர் | தொந்தரவு |
| போதித்து | எதிர்த்து நில் | விலகி |
| பதியவை | காயமுற்று | நற்கதி |

## கேள்விகள்

1. பிரயாணிக்கு வழியில் என்ன நேர்ந்தது?

2. அடிபட்ட பிரயாணிக்கு உதவி செய்தவன் யார்? என்ன உதவி செய்தான்?

3. ஏசுநாதர் செய்த உபதேசம் என்ன?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி.

சன்மார்க்கம், பதியவை, எதிர்த்து நில்.

2. பின்வரும் வாக்கியங்களைச் சேர்த்து ஒரே வாக்கியமாக எழுது:

(i) ஏசுநாதர் மக்களுக்குச் சன்மார்க்கத்தைப் போதித்தார். அவர் தெய்வ பக்தியின் அவசியத்தையும் போதித்தார்.

(ii) ஒரு மனிதன் ஒரு சமயம் தன் ஊரை விட்டுப் புறப்பட்டான். அவன் மற்றோர் ஊருக்குச் சென்றான்.

3. ஒரு வாக்கியத்தில் எழுவாய்க்குத் தகுந்த பயனிலை இருக்கவேண்டும். எழுவாயின் பால் எண்களும் பயனிலையின் பால் எண்களும் ஒத்திருப்பது அவசியம்.

**உதாரணம்:** (i) மரம் வளர்கிறது. (ii) மரங்கள் வளர்கின்றன. இவ்வாறில்லாமல் 'மரங்கள் வளர்கிறது' என்று எழுதுவது தவறு. ஆண்பாலுக்குப் பெண்பாலும், பெண்பாலுக்கு ஆண்பாலும் எழுதுவது தவறு.

4. பின்வரும் வாக்கியங்களிலுள்ள தவறுகளைத் திருத்தி எழுது:

(i) அவர்கள் ஓடினான்.

(ii) மாடுகள் மேய்கிறது.

(iii) எங்கள் வீட்டு நாய் குரைக்கின்றன.

(iv) சிறுமியர் பள்ளிக்கூடம் சென்றனர்.

(v) நம் நாட்டில் பல ஆறுகள் ஓடுகிறது.

# 16. கல்வி கற்கும் முறை

புத்தகத்தைப் படிக்க வேண்டிய முறைகளைப் பற்றி முன் வகுப்பில் படித்தீர்கள். பொதுவாகக் கல்வி கற்கும் முறைகளைப் பற்றி இந்தப் பாடத்தில் படிப்பீர்கள். முறையறிந்து கற்பதால் அறிவு தெளிவுபெறும். முறைதப்பிப் படித்தால் படிப்பில் ஐயமும் திரிபும் ஏற்படும். முறையாகக் கற்கின்றவனுக்குக் கல்வியானது, கரும்பை நுனியிலிருந்து தின்பதுபோல் சுவைக்கும். முறையின்றிக் கற்பவர்கள் கல்வியை, அடியிலிருந்து தின்னப்படும் கரும்பைப்போல் உணர்வார்கள்.

பள்ளியிற் சேர்ந்து படிப்பதே பிள்ளைகளுக்கு நல்ல பயிற்சியை அளிக்கும். சில பணக்காரர்கள் தம் பிள்ளைகளுக்கு வீட்டிலேயே ஓர் தனி உபாத்தியாயரைக் கொண்டு கல்வி கற்பிப்பது உண்டு. அம்முறையால் கல்வியறிவு செவ்வனே அமையாது. பல பிள்ளைகள் சேர்ந்து படித்தால்தான், அவர்களுக்குக் கல்வியில் உற்சாகம் உண்டாகும்; படிப்பில் சலிப்பு ஏற்படாது; முயற்சி ஏற்படும்; தாம் தாம் முதன்மையாய் வரவேண்டுமென்ற போட்டியும் ஏற்படும்; உறவும் ஒற்றுமையும் ஏற்படும்.

பொழுதோடு செல்லுதல், இருவென இருத்தல், சொல்லெனச் சொல்லுதல், போவெனப் போதல் இவைகள் வகுப்பில் பிள்ளைகள் கைக் கொள்ள வேண்டிய நற்பழக்கங்களாம்.

பொழுதொடு செல்லுதலாவது, சரியான நேரத்தில் பள்ளிக்கூடத்தை அடைவது. நேரங்

கடந்து வகுப்பிற்குச் செல்லுவதால், பாடங்களும் கெடும்; அது ஒரு தீய வழக்கமும் ஆகும். 'அமர்க' என்று உபாத்தியாயர் கூறிய பிறகு, பிள்ளைகள் தத்தம் இடங்களில் அமர்வது ஒழுங்கு முறையாகும்.

உபாத்தியாயர் கேள்விகள் கேட்டால், பிள்ளைகள் அக்கேள்விகளுக்கு உரிய விடைகளை முதலில்



சிந்திக்க வேண்டும். அவர் எந்தப் பிள்ளையைக் குறிப்பிடுகிறாரோ, அப்பிள்ளை மட்டும் எழுந்து நின்று விடை பகருவது முறையாகும்.

ஒரே சமயத்தில் பல பிள்ளைகள் மூலைக்கு மூலை எழுந்து பேசுவார்களானால், விஷயமும் விளங்காது; வகுப்பின் அமைதியும் கெடும். கடைசி மணி ஒலித்ததும், அல்லது பாடங்கள் முடிந்ததும், பிள்ளைகள் தாமாகத் தம் இஷ்டம் போல் எழுந்

திருந்து ஓடக்கூடாது. 'செல்க' என்று ஆசிரியர் கூறிய பிறகு, அமைதியாக அவர்கள் தத்தம் இடங்களை விட்டு எழுந்திருக்க வேண்டும்; அரவமின்றியும் ஒருவர்பின்னொருவராகவும் வகுப்பை விட்டு அகல வேண்டும்.

பிள்ளைகள் தம் கவனத்தை வேறு வகைகளில் சிதறவிடாமல், ஆசிரியர் கூறும் விஷயங்களைக் கருத்தாகக் கவனிக்க வேண்டும். வகுப்பில் கவனிக்கிற பிள்ளைகளுக்குப் பாடங்கள் மனத்தில் நன்கு பதியும். வகுப்பில் கேட்ட பாடங்களை வீட்டில் சென்ற பிறகு சிந்திக்க வேண்டும். விளக்கு வைத்தவுடன், ஒரு மணி நேரமாவது ஆசிரியர்கள் கொடுத்த பாடங்களைப் படிக்க வேண்டும். அதிகாலையில் எழுந்திருந்து, பாடங்களைப் படித்தல் ஒவ்வொரு நாளும் தவருது செய்ய வேண்டியதொன்றும். ஆசிரியர் அன்றன்று கொடுத்த வீட்டு வேலைகளை, அப்போதைக்கப்போது செய்து விடவேண்டும். பல நாட்களின் பாடங்களை, ஒரு நாளில் சேர்த்துப் படிப்பது இயலாது. பல நாட்களின் உணவை, நீங்கள் ஒரே சமயத்தில் உட்கொள்ள முடியுமா?

படித்த பாடங்களை மறவாமல் இருத்தல், பிள்ளைகள் ஒருவருக்கொருவர் வினவல் ஒருவருக்கொருவர் விடையளித்தல், ஐயங்களைப் பற்றி ஆசிரியர்பால் கேட்டு விளக்கம் பெறுதல் இவைகளும் கற்கும் பிள்ளைகள் மேற்கொள்ள வேண்டிய முறைகளாகும்.

| | | |
|---|---|---|
| முறை | செவ்வனே | மூலைக்குமூலை |
| தெளிவு | சலிப்பு | அமைதி |
| ஐயம் | பொழுதோடு | இஷ்டம்போல் |
| திரிபு | பகருவது | அரவம் |
| அமர்க | விளக்கம் | அகலவேண்டும் |
| தேர்ச்சி | அன்றன்று | விஷயம் |
| இயலாமை | நேரங்கடந்து | சிதறவிடாமல் |

## கேள்விகள்

1. *பிள்ளைகள் சேர்ந்து படிப்பதால் உண்டாகும் நன்மைகள் யாவை?*

2. *எந்தப் பிள்ளைகளுக்குப் பாடம் மனத்தில் நன்கு பதியும்?*

3. *வகுப்பறையில் பிள்ளைகள் கவனிக்க வேண்டிய முறைகள் யாவை?*

## பயிற்சி

1. *பொருள் கூறு:*
   *ஐயம், திரிபு, அரவம்.*
2. *எதிர்ப்பதங்கள் எழுது:*
   *தெளிவு, அமைதி, உற்சாகம்.*

3. *பெயர்ச் சொற்கள்* **தன்மை, முன்னிலை, படர்க்கை,** *என்ற மூன்று இடங்களைச் சார்ந்திருக்கும்.*

**நான்** *செய்கிறேன்.*
**நாம்** *செய்கிறோம்.*   } *தன்மை இடம்*
**நாங்கள்** *செய்கிறோம்.*

**நீ** *செய்கிறாய்.*
**நீங்கள்** *செய்கிறீர்கள்.*   } *முன்னிலை இடம்*
**நீர்** *செய்கிறீர்.*

| | |
|---|---|
| அவன் செய்கிறன். | படர்க்கை இடம். |
| அவள் செய்கிறள். | |
| அவர் செய்கிறர். | |
| அது செய்கிறது. | |
| அவை செய்கின்றன. | |
| மரம் வளர்கிறது. | |
| மாடு மேய்கிறது. | |

எழுவாயின் இடத்திற்குத் தகுந்தபடி பயனிலை அமைந்திருக்கும்.

## 17. விவசாயத்தின் நுட்பம்

பொன்னன் :—முருகா! என்ன உற்சாகமில்லாமல் இருக்கிறய்? பருவ காலத்தில் சுருசுருப்பில்லாமல் இருக்கிறயே!

முருகன் :—பொன்னு! உன்னிடத்தில் நான் உண்மையைச் சொல்லுகிறேன். விவசாயத்தில் எனக்கு சலிப்பு ஏற்பட்டு விட்டது. 'எங்கே போகலாம்; என்ன தொழில் செய்யலாம்' என்று கவலைப் படுகிறேன்.

பொன் :—நண்ப, நீ கூறுவது விந்தையாயிருக்கிறது! விவசாயம் உலகிற்கு உயிர் நிலை. அதை விடலாமா? நாமெல்லாம் பரம்பரையாக இத்தொழில் செய்யவில்லையா? சலிப்பு எதற்காக? 'உழுதவனுக்குப் பஞ்சமில்லை' என்ற கௌரவம் பொருந்தியது இத்தொழில்.

முரு :—உங்களுக்கெல்லாம் விவசாயம் கைகூடி வருகிறது போலும்! எனக்கும் விவசாயத்துக்கும்

ராசி இல்லை. தொட்டதெல்லாம் எனக்கு நஷ்டமாகிறது. விளைந்தாலோ தானியம் சரியாகக் காண்பதில்லை; சில சமயம் விளையாமலே காய்கிறது; சில சமயம் பூச்சி விழுந்து பயிருக்கு அழிவு ஏற்படுகிறது. என்ன விவசாயம்!

பொன் :—விவசாயம் கூடி வருவதும், கூடி வராததும் முறையே நம்முடைய கவனத்தாலும்,



கவனக் குறைவாலும் தான். ஏர் பிடித்ததனால் மட்டும் சீர் ஏற்பட்டு விடாது. விவசாயத்தின் நுட்பங்களை அறிந்து, பருவத்திற்கேற்றபடி பயிர் செய்ய வேண்டும்.

முரு :—விவசாயத்தில் நுட்பம் உண்டோ? அப்படியானால் எனக்கும் அவற்றைச் சொல்.

பொன் :—மழை, காற்று இவற்றின் தன்மையைத் தெரிந்துகொண்டு, பருவத்திற் கேற்றவாறு

பயிர் வகையை உற்பத்தி செய்யவேண்டும். ஆறு மாசப் பயிரை எப்போது நடுவது, நாலு மாசப் பயிரை எப்போது நடுவது, மூன்று மாசப் பயிரை எப்போது நடுவது என்று கவனித்துச் செய்ய வேண்டும். 'அகல உழுவதை ஆழ உழு' என்பர். ஆகையால் எவ்வளவு உழவுகள் வேண்டுமோ, அவ் வளவு உழவும் சோம்பலில்லாமல் உழவேண்டும். பருவமறிந்து, களை பிடுங்குதல், எருவிடுதல், அள வறிந்து நீர் பாய்ச்சுதல் இவைகளையும் விவசாயி கவனித்துச் செய்யவேண்டும். பயிர்களுக்கு நோய்



பிடிக்கும்போல் தெரிந்தால், அதற்கேற்ற எரு மருந் தைச் சமயத்தில் இடவேண்டும். இம்முறைகளே விவசாயத்தின் நுட்பம் எனப்படும். இவ்விவரங் களைக் கவனித்து விவசாயம் செய்பவன் உழைப்பின் பலனை அடைவான். முறை தெரியாமல் தொழிலைச் செய்துவிட்டு, 'ராசி இல்லை' என்று சலிப்படைவது

கூடாது. தொழிலினால் பயன் உண்டாவது நம்முடைய மதியைப் பொறுத்தது.

முரு:— விவசாயத்தின் நுட்பங்களை எப்படித் தெரிந்து கொள்வது?

போன்:— விவசாயக் குறிப்புகளை விவசாய இலாகாவினர் அடிக்கடி வெளியிடுகிறார்கள். அவைகளைப் படித்துத் தெரிந்துகொள்ளலாம். விவசாயக் காரியாலயங்கள் தாலூகா தோறும் இருக்கின்றன, அங்குள்ள உத்தியோகஸ்தர்களிடமிருந்து நாம் எல்லா விவரங்களையும் தெரிந்து கொள்ளலாம். எல்லா உதவியும் அவர்களிடமிருந்து பெறலாம். சிக்கனமான முறையில் நல்ல உற்பத்தியைப் பெறும் வழிகள் யாவும் அவர்கள் போதிப்பார்கள். அவ்வதிகாரிகளும் அடிக்கடி கிராமங்களைப் பார்வையிடக்கூடும். அப்போதும் அவர்கள் பயிர்களை நேரில் பார்த்து, வேண்டிய யோசனைகளை விவசாயிகளுக்குக் கூறுவார்கள்.

முரு:— நண்ப, நீ எனக்கு நல்ல போதனை செய்தாய். சர்க்கார் நமக்கு அளித்துள்ள வசதியை நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இனி நான், விவசாயத்தின் நுட்பம் அறிந்து பயிர் செய்ய முயற்சிக்கிறேன்.

| | | |
|---|---|---|
| பருவகாலம் | பரம்பரையாக | ராசியில்லை |
| விந்தை | கௌரவம் | கூடிவருவது |
| சீர் | நுட்பம் | விவசாய இலாகா |
| சலிப்பு | எருமருந்து | காரியாலயம் |
| யோசனை | சிக்கனமான | பார்வையிட |
| போதனை | சர்க்கார் | தாலூகா |

## கேள்விகள்

1. சுருசுருப்பில்லாமல் இருந்தவன் யார்? ஏன்?

2. விவசாயம் செய்வோர் கவனிக்கவேண்டிய விஷயங்கள் யாவை?

3. விவசாய அதிகாரிகள் விவசாயிகளுக்குப் புரியும் உதவிகள் யாவை?

## பயிற்சி

1. பொருள் கூறு:
   விந்தை, பருவகாலம், பரம்பரை.

2. சொந்த வாக்கியங்களில் உபயோகி:
   சலிப்பு, யோசனை, நுட்பம்.

3. பின் வரும் வாக்கியங்களிலுள்ள தவறுகளைத் திருத்தி எழுது:

   (i) நாங்கள் வந்தார்கள்.
   (ii) அவர்கள் போனீர்கள்.
   (iii) நீங்கள் புசித்தார்கள்.
   (iv) பிராணிகள் பிழைத்திருக்கின்றனர்.

# 18. மூங்கில்

மூங்கில் புல் இனத்தைச் சேர்ந்தது. இவ்வுண்மையைக் கேட்கும்போது நீங்கள் வியப்படைவீர்கள். மூங்கிலை மரம் என்றே கூறுவார்கள் தாவர நூல் அறியாதவர்கள். மரத்திற்கும், புல்லிற்கும் உள்ள முக்கியமான வித்தியாசம் காழின் அமைப்பு. காழ் என்றால் வயிரம். "அகக் காழனவே மரமெனப்படுவ" "புறக் காழனவே புல்லெனப் படுவ" என்பது அவற்றின் இலக்கணம். மூங்கிலுக்கு வயிரம், அதாவது உறுதியான பாகம் அதன் மேற் புறமேயாகும். அதன் உட்புறம், மேற் புறத்தைக் காட்டிலும் மிருதுவானது.

மூங்கிற் காடுகள் மலைப் பிரதேசங்களில் மிகுதியாக வளரும். படுகைகளிலும் அது பயிராக்கப்படும். முழு வளர்ச்சியடைந்த மூங்கில்கள் அறுபது அடி நீளம் வளரும். மூங்கில் இலைகள் அலரியின் வடிவத்தை ஒத்து, மிக மெல்லியதாகவும் வட்டமாகவும் இருக்கும். "மூங்கில் இலைமேலே தூங்கும் பனி நீரே" என்று ஒரு நாட்டுப் பாடலில் கூறப்பட்டுள்ளது. ஒரு முறை பூத்துக் காய்த்தால், அதன் பிறகு அம் மூங்கில் தழைக்காது. மூங்கில் பூக்கள் கொத்துக் கொத்தாகத் தொங்கும்; அவை வெண்மை கலந்த பசுமை நிறமாக இருக்கும். அவற்றிலிருந்து தோன்றும் காய்களை மூங்கில் அரிசி என்பர்.

மூங்கிலைப் பயிர் செய்வோர் அதன் விதைகளைத் தரையில் ஊன்றுவார்கள். சில மாதங்களில், அவ் விதைகளிலிருந்து இலைகள் தோன்றும். மூங்கில்

நன்றாக வளர்ந்து, வெட்டும் பக்குவம் அடைவதற்குப் பத்து ஆண்டுகள் செல்லும்.

மூங்கிலின்மேற்புறத்தில் பல கணுக்கள் உண்டு. சாதாரண மூங்கில் உட்புறத்தில் நெடுகவும் துவாரம் உடையதாய், நீண்ட குழாயை ஒத்திருக்கும்.



சாதாரண மூங்கில் பெரும்பாலும் வீட்டின் கூறைகளுக்குச் சாரங்களாகவும் வரிச்சல்களாகவும் உபயோகிக்கப்படும். மூங்கிலை இலேசான பட்டைகளாகச் சீவிக் கூடைகள், முறங்கள் முதலியன கட்டுவார்கள். குழல் என்னும் இசைக் கருவி மூங்கிலால் செய்யப்படும்.

மூங்கிலில், கல் மூங்கில் என்பது ஒரு வகை. அது உள்ளே துவாரம் இல்லாமலும், அதிக உறுதியாகவும் இருக்கும். கல் மூங்கில்கள் வாரைகளாக உபயோகிக்கப்படும். மூங்கில் முள் படல்

கள் வேலிக்குப் பயன்படுகின்றன. சிறிய மூங்கிற் கழிகள் கைத்தடியாக உதவுகின்றன. படகு ஓட்டிகள் மூங்கில்களைக் கொண்டும் படகுகளைச் செலுத்துகிறார்கள்.

காகிதம் செய்வதற்கு ஒரு முக்கியமான மூலப் பொருள் மூங்கில். இளமூங்கில்களைத் தண்ணீரில் நன்றாக ஊறவைத்து, அரைத்துக் கூழாக்கி அதைக் கொண்டு காகிதம் உருவாக்கப்படுகின்றது.

கரும்பு, வைக்கோல், நாணல் இவைகள் மூங்கிலைப் போலவே புல்லினத்தைச் சேர்ந்தவை. மூங்கிற் காடுகளை விருத்தி செய்வதால் நல்ல உபயோகமும், வருவாயும் உண்டு.

| | | |
|---|---|---|
| படல் | கூழ் | வரிச்சல் |
| குழல் | காழ் | உருவாக்கப்படும் |
| குழாய் | புல்லினம் | வெட்டும் பக்குவம் |
| பட்டை | வாரை | மூலப்பொருள் |
| கழி | சாரம் | |

### கேள்விகள்

1. மூங்கில் எந்த இனத்தைச் சேர்ந்தது ?
2. புல்லெனப்படுவன, மரமெனப்படுவன எவை ?
3. மூங்கில் எவ்வெவ்வகைகளில் உபயோகப்படும் ?

### பயிற்சி

1. பொருள் வித்தியாசம் தெரியும்படி வாக்கியங்களில் உபயோகி :

(i) கழி, களி (ii) அறம், அரம்.

2. பின் வருபவற்றைக் கேட்டபடி மாற்றி எழுது.

(i) நீங்கள் வியப்பு அடைவீர்கள். (உங்களுக்கு என்று வாக்கியத்தைத் தொடங்கு.)

(ii) பயிர் செய்வோர் மூங்கில் விதைகளைத் தரையில் ஊன்றுவார்கள். மூங்கில் விதைகள் என்று தொடங்கி வாக்கியத்தை எழுது.)

3. எதிர்ப்பதங்கள் கூறு :
அறியாதவன், உறுதி, முழுவளர்ச்சி, மெல்லிது.

4. தடித்த எழுத்திலுள்ள சொற்களைக் கவனி :

(i) குள்ளன் வந்து நின்றான்.

(ii) படித்த பாடங்களில் ஆசிரியர் கேள்வி கேட்டார்.

(iii) தோட்டத்தில் செடிகள் செழித்து வளர்கின்றன.

(iv) கிழிந்த புத்தகத்தைச் சரிப்படுத்தினேன். தடித்த எழுத்திலுள்ள சொற்களெல்லாம் வினைச் சொற்களே. இவற்றில் நின்றான், கேட்டார், வளர்கின்றன, சரிப்படுத்தினேன் என்ற நான்கும் பொருள் முடிந்துள்ள வினைச்சொற்கள். இவை வினைமுற்றுக்கள் எனப்படும்.

வந்து, படித்த, செழித்து, கிழிந்த என்ற நான்கும் பொருள் முடிவு பெறவில்லை. இவை எச்ச வினைகள் என்று சொல்லப்படும்.

வந்து என்ற எச்சவினை, நின்றான் என்ற வினைச் சொல்லைக் கொண்டு முடிகிறது.

செழித்து என்ற எச்சவினை வளர்கின்றன என்ற வினைச் சொல்லைக்கொண்டு முடிகிறது. வந்து, செழித்து என்ற சொற்கள் வினையெச்சங்கள் என்று சொல்லப்படும்.

படித்த என்ற எச்சவினை பாடங்கள் என்ற பெயர்ச் சொல்லைக் கொண்டு முடிகிறது. கிழிந்த என்ற எச்சவினை புத்தகம் என்ற பெயர்ச் சொல்லைக்கொண்டு முடிகிறது. படித்த, கிழிந்த என்ற சொற்கள் பெயரெச்சங்கள் என்று சொல்லப்படும்.



# 19. மயில்

அழகிய மயிலே! அழகிய மயிலே!
அஞ்சுகம் கொஞ்ச, அமுத கீதம்
கருங்குயி லிருந்து விருந்து செய்ய,
கடிமலர் வண்டுகள் நெடிது பாட,
தென்றல் உலவச் சிலிர்க்கும் சோலையில்
அடியெடுத் தூன்றி அங்கம் புளகித்து
ஆடுகின்றாய் அழகிய மயிலே!

—பாரதிதாசன்

| | | |
|---|---|---|
| அஞ்சுகம் | நெடிது | புளகித்து |
| அமுதம் | சிலிர்க்கும் | கீதம் |
| கடிமலர் | அங்கம் | தென்றல் |

கேள்விகள்

1. மயில் எவ்வாறு ஆடுகின்றது ?

2. மயில் ஆடும்பொழுது கிளி, குயில், வண்டுகள் என்ன செய்கின்றன ?

# 20. கூட்டுறவுப் பண்டகசாலை

மகன் :—அம்மா, வணக்கம்.

தாய் :—குழந்தாய், வா. இப்பொழுது தான் வருகிருயா ? ஏது இரண்டு வாரமாக மாமா வீட்டில் தங்கிவிட்டாய் ?

மகன் :—மாமா ஊரில் திருவிழா நடைபெற்றது. எனக்கும் பள்ளிக்கூடம் விடுமுறையாகையால், மாமா என்னை இருந்துவிட்டுப் போகச் சொன்னுர்.

தாய் :—புதிய வேஷ்டியும், சட்டையும் கொண்டு வந்திருக்கிருயே ! இவைகளை மாமா வாங்கிக் கொடுத்தாரா ? நேர்த்தியாக இருக்கின்றன. எந்தக் கடையில் வாங்கினுய் ?

மகன் :—மாமா ஊரில் 'கூட்டுறவுப் பண்டகசாலை' இருக்கிறது. அதில் எல்லாப் பொருள்களும் விற்கப்படுகின்றன. மளிகைச் சாமான்கள், துணிகள், விவசாயிகளுக்கு வேண்டிய கருவிகள், எருவகைகள், சிமெண்டு ஆகிய பலவகைப்பொருள்களும் அங்குக் கிடைக்கின்றன.

தாய் :—ஒரே கடையில் எல்லாப் பொருள்களும் கிடைக்கின்றனவா? அக்கடைக்கு முதலாளி யார்?

மகன் :—அதற்கு ஒரு முதலாளி இல்லை அம்மா. ஊரிலுள்ள பலரும் ஆளுக்குக் கொஞ்சமாகப் பங்குத் தொகை போட்டிருக்கிறார்கள். அம்முறையில் பதினாயிரம் ரூபாய் முதல் சேர்ந்திருக்கிறது. பலர் கூட்டாகச் சேர்ந்து முதல் போட்டிருப்பதால், அக்கடைக்குக் கூட்டுறவுப் பண்டகசாலை என்று பெயர்.




தாய் :—கூட்டுறவுப் பண்டகசாலை ஏற்படுத்தியதால் என்ன சௌகரியம்? அந்தச் சிறிய ஊருக்கு அவ்வளவு பெரிய கடை வேண்டுமா?

மகன் :—அங்கு விற்கப்படும் பொருள்கள் யாவும் கிராமவாசிகளுக்கு வேண்டியவைகளே. எல்லாப் பொருள்களும் கிராமத்திலுள்ள சாதாரணக் கடை

களில் கிடைக்கமாட்டா. நகரங்களிலிருந்து வாங்கி வருவதென்றால், போகவரச் செலவு ஏற்படும். உள்ளூரிலேயே அவற்றைப் பெறுவது செளகரியம் அல்லவா!

கூட்டுறவுப் பண்டகசாலையார், எல்லாப் பொருள் களையும், அவையவை உற்பத்தியாகும் இடத்தி லிருந்து வருவிக்கிறார்கள். ஆகையால் சகாயமான விலைக்கு அவைகள் கிடைக்கின்றன. குறிப்பிட்ட இலாபம் வைத்து, நியாயமான விலைக்கு அப்பொருள் கள் சில்லறையில் விற்கப்படுகின்றன.

தாய்:—பலபேர் முதல் போட்டிருப்பதாகச் சொன்னாயே. பலபேர் சேர்ந்து ஒரு கடையை நடத்துவது எப்படி? அவரவர்களுக்குச் சொந்த வேலைகள் இருக்குமே! இலாபமெல்லாம் யார் எடுத் துக் கொள்வார்கள்?

மகன்:—குறிப்பிட்ட சிலர் நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்கள். அவர்களில் தலைவர், உபதலைவர், காரியதரிசி, மற்ற அங்கத் தினர் என்போர் உண்டு. அவர்களுடைய மேற்பார் வையில் கொள்முதலும், விற்பனையும் நடைபெறு கின்றன. விற்பதற்கும், கணக்கு எழுதுவதற்கும் சிப்பந்திகள் இருக்கிறார்கள். வருஷத்திற்கொரு முறை இலாபத் தொகை பங்குக்காரர்களுக்குப் பிரித்துக் கொடுக்கப்படுகிறது.

தாய்:—கடையில் நஷ்டம் ஏற்பட்டு விட்டால் என்ன செய்வது?

மகன்:—ஒழுங்காக நடத்தினால் அதில் நஷ்டமே ஏற்படாது. தேவைக்கு வேண்டிய பொருள்கள்

அளவாக வருவிக்கப்படுகின்றன. சிப்பந்திகள் உண்மையுள்ளவர்களாக நியமிக்கப் படுகிறார்கள். அவர்களுக்கு நியாயமான சம்பளம் கொடுக்கப்படுகிறது. அப்போதைக்கப்போது கணக்குகள் சரி பார்க்கப்படுகின்றன. சர்க்கார் அதிகாரிகளும் கூட்டுறவுப் பண்டகசாலைகளை அடிக்கடி வந்து கவனிக்கிறார்கள். ஆகையால் அதில் நஷ்டம் ஏற்படுவதற்குக் காரணம் இல்லை.

தாய் :—நமது கிராமத்திலும் ஒரு கூட்டுறவு பண்டகசாலை ஏற்பட்டால் நல்லது.

மகன் :—ஆம், அம்மா. அப்பாவுக்குத் தான் நமது கிராமத்தில் நல்ல செல்வாக்கு இருக்கிறதே! அவர் முன்னின்று இவ்வூரில் ஒரு கூட்டுறவுப் பண்டகசாலைக்கு ஏற்பாடு செய்யலாமே!

| | | |
|---|---|---|
| கூட்டுறவு | விடுமுறை | நஷ்டம் |
| பண்டகசாலை | எருவகை | தேவை |
| பங்குக்காரர் | சிமெண்டு | சர்க்கார் |
| நியமிக்க | சிப்பந்திகள் | முதல் |
| சரிபார் | சம்பளம் | கொள்முதல் |
| மேற்பார்வை | செல்வாக்கு | விற்பனை |
| சகாயமான | ஏற்பாடு | முதலாளி |
| நிர்வாகிகள் | இலாபம் | |

## கேள்விகள்

1. கூட்டுறவுப் பண்டகசாலை என்று பெயர் ஏற்படக் காரணம் என்ன?

2. அதனால் ஜனங்களுக்கு என்ன சௌகரியம்?

3. கூட்டுறவுப் பண்டகசாலையில் என்னென்ன பொருள்கள் விற்கப்படும்?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி:
நியமிக்க, மேற்பார்வை, விடுமுறை.

2. பின்வரும் வாக்கியங்களிலுள்ள எச்ச வினைகளைக் கூறு; அவை பெயரெச்சமா என்று சொல்லு:
   (i) மாமா என்னைப் போகச் சொன்னார்.
   (ii) மழை பெய்து ஓய்ந்தது.
   (iii) செத்த எலியைக் காகம் எடுத்துப் போயிற்று.
   (iv) நோயாளியைப் பரிசோதித்த வைத்தியர் மருந்து கொடுத்துச் சென்றார்.

3. மேலே உள்ள வாக்கியங்களில் எழுவாய் பயனிலைகளைக் கூறு.

4. பின் வரும் வாக்கியங்களில் தடித்த எழுத்திலுள்ள சொற்களைக் கவனி:
   (i) **கந்தனும் வேலனும்** வந்தார்கள்.
   (ii) **கேசவனா** இங்கு நின்றான்?

**உம், ஆ** என்பவை இடைச்சொற்கள் என்று சொல்லப்படும். இவை தனித்து வரமாட்டா. பெயர்ச் சொல் வினைச் சொற்களைச் சார்ந்தே வரும். ஓ, ஏ, மற்று முதலிய வேறு இடைச் சொற்களும் உண்டு.

5. பின்வரும் வாக்கியத்தில் உள்ள இடைச் சொற்களில் ஏதேனும் இரண்டு சொல்லு:

ஓ! நான் அவனை வீணாக அடித்தேனே!

# 21. ஊர்க்காவல்

சிறுவன் :—ஐயா, போலீஸ்காரரே ஏன் இப்படி நகராமல் ஒரே இடத்தில் நிற்கின்றீர்கள்? வெயிலையும், மழையையும் பொருட்படுத்தாமல், சாலைகளின் சந்திப்பிடத்தில் நிற்கின்றீர்களே!

போ :—சிறுவ, நான் இங்குச் சும்மா நிற்கவில்லையே! என் வேலைகளைக் கவனி.

சிறுவன் :—வண்டிகள் வருவதையே கவனித்துக் கொண்டிருக்கிறீர். உமது கண்களும், கருத்தும் நாற்புறத்திலிருந்தும் வருகின்ற வண்டிகளிலேயே




இருக்கின்றன. வண்டிகளை நிறுத்தும் படியும், விடும்படியும் சைகைகள் காட்டுகின்றீர். அதற்காக ஓர் ஆள் நிற்க வேண்டுமா? வண்டிக்காரர்கள்

தத்தம் வண்டிகளை முன்னும் பின்னும் பார்த்து ஓட்ட மாட்டார்களா?

போ:—வெகு சுலபமாகச் சொல்லி விட்டாயே! என்னுடன் பேச்சுக் கொடுக்காமல் நின்று, சற்றே கவனித்துப் பார். பக்கங்களிலிருந்து வரும் வண்டிகள், ஓட்டுபவர்களுக்குத் தெரியமாட்டா. நான் சற்று நேரம் இல்லாமலிருந்தால், நொடிக் கொரு தடவை வண்டிகள் ஒன்றோடொன்று மோதிச் சேதம் உண்டாகும். சில சமயம் ஆட்களும் வண்டிகளில் அகப்பட்டுக் கொள்வார்கள். ஆகை யால் போக்கு வரவின் பாதுகாப்பிற்காகவே நான் இங்கு நிற்கின்றேன். ஒவ்வொரு சந்தியிலும், என் போன்ற வேறு உத்தியோகஸ்தர்கள் இருப்பார்கள்.



சிறுவன்:—இம்மாதிரிச் சந்திகளில் நிற்பதுதான் உங்களுக்கு வேலையா? அல்லது வேறு பொறுப் பான வேலைகளும் உண்டோ?

போ:—சிறுவன் ஆனாலும், வேடிக்கையாகப் பேசுகிறாயே! பொதுவாக ஊர்க்காவல் முழுவதும்

எங்கள் பொறுப்பு. திருவிழாக்களிலும், கூட்டங் களிலும் நாங்கள் வெகு ஜாக்கிரதையாகக் காவல் செய்வோம். இரவுகளில் ஊரில் தெருக்களைச் சுற்றி ரோந்து செல்வோம். கலகம், திருட்டு, சச்சரவு இவைகளைத் தடுப்பதும், ஒடுக்குவதும் எங்களுடைய பொறுப்புகள் ஆகும்.

சிறுவன் :—ஆம், எனக்கு ஞாபகம் வருகிறது. நள்ளிரவில், போலீஸ்காரர்கள் வீட்டுக் கதவுகளைக் கூடச் சில சமயம் தட்டுகிறார்கள் ; வீட்டுக்காரர் களைக் கூப்பிட்டு 'உஷார், உஷார்' என்று சொல்லி விட்டுப் போகிறார்கள். இரவில் வெளியூர்ச் சாலை களில், போக்கு வண்டிகளோடு அவர்கள் காவலா கத் தொடர்ந்து செல்லுகிறார்கள்.

இவ்வளவு பொறுப்பான வேலைகளைச் செய் கிறீர்களே, உங்களுக்கு யார் சம்பளம் கொடுக்கி றார்கள் ? உங்களுக்கு மேலதிகாரிகள் யார் ?

போ :—சர்க்கார் எங்களுக்குச் சம்பளம் கொடுக் கிறார்கள் ; நாங்கள் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள். சப் இன்ஸ்பெக்டர், இன்ஸ்பெக்டர், டெபுடி சூபரின்டெண்டென்ட், ஜில்லா சூபரின்டெண் டென்ட் என எங்களுக்கு மேலதிகாரிகள் இருக்கி றார்கள். போலீஸ் கமிஷனர் என்பவர் எங்களுக்கு மாகாண அதிகாரி.

சிறுவன் :—நீங்கள் ஊருக்கு நன்மைதானே செய்கிறீர்கள் ! சிலர் போலீஸ் என்றாலே பயப்படு கிறார்களே !

போ :—நல்லவர்கள் எங்களைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை. ஊரின் நன்மைக்காக நாங்கள் வேலை பார்க்கிறோம். நாங்களும் ஊராருடன் சேர்ந்த

வர்களே. பாதுகாப்புப் பணியில், அவசியம் ஏற்பட்டால், ஊரார் எங்களுடன் ஒத்துழைப்பதுவே அவர்களின் கடமை.

| | | |
|---|---|---|
| சாலே | பொறுப்பான | பொருட்படுத்தாமல் |
| சந்திப்பு | சம்பளம் | கண்ணும்கருத்துமாக |
| உஷார் | சச்சரவு | நொடிக்கொருதடவை |
| மோதி | நள்ளிரவு | உத்தியோகஸ்தர் |
| சேதம் | மேலதிகாரி | போக்குவண்டி |
| சும்மா | போலீஸ்காரர் | ஒத்துழைப்பது |

## கேள்விகள்

1. சந்திகளில் போலீஸ்காரர்கள் நிற்பது எதற்காக?
2. அவர்களுக்கு உரிய வேலைகள் என்னென்ன?
3. சந்திகளில் போலீஸ்காரர்கள் நிற்காவிட்டால் என்ன நிகழும்?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி:

சேதம், பொறுப்பான, கண்ணுங்கருத்துமாக.

2. பின்வரும் தடித்த எழுத்திலுள்ள வார்த்தைகளைக் கவனி:

(i) **கடி** மலர் வண்டுகள் நெடிது பாட.

(ii) ஆலயம் தொழுவது **சால**வும் நன்று.

**கடி** மலர் என்றால் வாசனையுடைய மலர். **சால**வும் என்றால் மிகவும். **கடி, சால** என்ற சொற்கள் குணங்களை உணர்த்தும் சொற்கள். இவை **உரிச்சொற்கள்** எனப்படும்.

3. தமிழ் மொழியிலுள்ள எல்லாச் சொற்களும் **பெயர்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல்** என்ற நான்கு வகையுள் அடங்கும்.

பின்வரும் வாக்கியத்திலிருந்து இந்த நான்கு வகைகளுக்கும் ஒவ்வோர் உதாரணம் கொடு:

**கடிமலர்ச் சோலையில் கிளிகளைக் கண்டேன்.**

# 22. பிள்ளை யொழுக்கம்

அன்பை வளர்க்க வேண்டும்—கிளியே
அறிவைப் பெருக்க வேண்டும்;
உன்போற் பிறரை எண்ணி—நல்ல
உதவி புரிய வேண்டும். (1)

தெய்வ நினைப்பு வேண்டும்—கிளியே
தேச நினைப்பு வேண்டும்;
மெய்மை யொழுக்கம் வேண்டும்—நெஞ்சில்
வீர வுறுதி வேண்டும். (2)

அன்னைசொற் கேட்கவேண்டும்—தந்தை
ஆணைக் கிணங்க வேண்டும்;
தன்னை வணக்க வேண்டும்—பிறர்
தம்மை மதிக்க வேண்டும். (3)

ஆசிரியர்க் கடங்கிக்—கிளியே
அறிவை வளர்க்க வேண்டும்;
தேசம் வாழுந் தொழிலில்—மிக்கத்
திறமை யோங்க வேண்டும். (4)

—சுவாமி சுத்தானந்த பாரதியார்

| | | |
|---|---|---|
| புரிய | ஆணை | ஓங்க |
| நினைப்பு | இணங்கு | நெஞ்சு |
| மெய்மை | வணக்க | மதிக்க |

கேள்விகள்

1. பிறரை எவ்வாறு எண்ண வேண்டும்?
2. "தன்னை வணக்க வேண்டும்"—பொருள் கூறு.
3. தேசத்திற்கு உதவி செய்வது எப்படி?

# 23. போலி நண்பன்

டமாஸ்கஸ் நகரில் முஸ்டாபா என்ற ஒரு வியாபாரி இருந்தார். அவருக்கு சயத் என்ற ஒரு மகன் இருந்தான். சயத் தன் தகப்பனுர் சொல்படி நடப்பதில்லை. அவனுடைய நண்பன் ஒருவன் சொல்வதையே அவன் கேட்பான். அந்த நண்பன் சயத்தைப் பல முறை ஏமாற்றி வந்தான். ஆயினும் சயத்துக்கு அவன் மீது நம்பிக்கை குறையவில்லை.

ஒரு நாள், முஸ்டாபாவும் சயத்தும் வியாபாரத்திற்காக பாக்தாத் செல்லவேண்டியிருந்தது. முஸ்டாபா தம் மகனைப் பார்த்து, "நாம் பாக்தாத் செல்ல வேண்டும். நம்முடைய பணத்தை யாரிடம் கொடுத்து வைக்கலாம் ?" என்று கேட்டார்.

சயத் உடனே "என் நண்பனிடம் தான் கொடுத்து வைக்கவேண்டும். அவனைப்போல் யோக்கியமானவர் இந்த ஊரிலேயே யாரும் இல்லை," என்முன். முஸ்டாபா, "சரி நீ சொல்வது போலவே செய்வோம்" என்ருர்.

பிறகு முஸ்டாபா, ஒரு பளுவான இரும்புப் பெட்டியில் சில சாமான்களை வைத்துப் பூட்டி அதை, சயத்தினிடம் கொடுத்தார். சயத் பெட்டியைத் தன் நண்பனிடம் கொடுத்துப் பத்திரமாக வைத்திருக்கச் சொல்லிவிட்டு வந்தான்.

முஸ்டாபாவும் சயத்தும் பாக்தாத் சென்று வியாபாரம் செய்துவிட்டு இரண்டு மாதங்கழித்து நல்ல லாபத்துடன் திரும்பி வந்தார்கள். உடனே

முஸ்டாபா சயத்தை அவனுடைய நண்பனிடம் அனுப்பிப் பெட்டியை வாங்கிவரச் சொன்னார். சயத் நண்பனிடம் சென்று கோபத்துடன் திரும்பி வந்தான். அவன் தந்தையைப் பார்த்து, "என் நண்பனை நீர் அவமானஞ் செய்து விட்டீர்! நீர் பெட்டியில் பணத்தை வைக்காமல் உடைந்த கற்



களை நிறைத்து வைத்திருந்ததாக அவன் சொல்கிறான். இப்படிச் செய்வது அவனைக் கேவலப் படுத்துவதல்லவா?" என்றான்.

முஸ்டாபா, "பெட்டியை நன்றாகப் பூட்டிக் கொடுத்திருந்தேன். அதற்குள் உடைந்த கற்கள் இருந்த விவரம் அவனுக்கு எப்படித் தெரிந்தது? அவன் பூட்டை உடைத்துப் பார்த்திருக்க வேண்டும்.

உள்ளே பணம் வைத்திருந்தால் அவன் அதைத் திருப்பிக் கொடுப்பானா?'' என்றார்.

சயத் தலைகுனிந்தான். தன் தகப்பனார் சொற்படி நடப்பதே நலம் என்று அறிந்து கொண்டான்.

| | | |
|---|---|---|
| ஏமாற்று | பத்திரம் | தலைகுனிந்தான் |
| யோக்கியமானவர் | கேவலம் | அவமானம் |

## கேள்விகள்

1. சயத் எம்மாதிரியான குணமுடையவனாயிருந்தான்?

2. சயத்தின் நண்பன் அயோக்கியன் என்று முண்டாபா எப்படித் தம் மகனுக்கு நிரூபித்தார்?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி:

ஏமாற்று, கேவலம், அவமானம், தலைகுனி

2. எதிர்ப்பதங்கள் கூறு:

கேவலம், அவமானம், யோக்கியன்.

3. எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகிய மூன்றும் உள்ள மூன்று வாக்கியங்களை இப்பாடத்திலிருந்து எடுத்து எழுது.

# 24. இராட்டையின் சிறப்பு

உணவைப் போலவே ஆடைகளும் மக்களுக்கு இன்றியமையாதவை. ஆடைகள் பெரும்பாலும் பருத்தி நூலினால் செய்யப்படுபவை. குளிருக்குக் கம்பளி ஆடைகள் அணியப்படும். பட்டாடைகளும், நார்மடிகளும் நேர்த்தியும் பளபளப்பும் உள்ளவை.

செடிப் பருத்தியும், கொடிப் பருத்தியும் நூல் நூற்கப் பயன்படுகின்றன. பருத்திக் காய்களைக் கொட்டை நீக்கிப் பஞ்சை எடுப்பார்கள்; பிறகு அதை வில்லில் அடித்துத் தூசுகள் போக்கி, மெல்லிய பட்டைகளாகச் செய்வார்கள். பட்டைகளிலிருந்து மெல்லிய நூலிழைகள் இழைக்கப்படும். நூல் இழைப்பதற்கு உபயோகிக்கப்படும் கருவிகள் தக்ளி, இராட்டை என்று இரண்டு வகைப்படும். உங்களில் அநேகர் தக்ளியில் நூல் நூற்க அறிவீர்கள். தக்ளியில் நூற்கப்படும் நூல் நேர்த்தியாக இருக்கும்; ஆனால் அதில் அதிகமாக நூற்க முடியாது.

விரைவாகவும், அதிகமாகவும் நூற்பதற்கு இராட்டை என்னும் கருவி உபயோகிக்கப்படுகிறது. இராட்டை ஏழைகளுக்குப் பிழைப்பை அளிக்கும். கைராட்டையில் நூற்ற நூலைக் கொண்டு, கைத்தறியில் நெய்யப்படும் ஆடை கதராடை எனப்படும்.

இராட்டைக்குச் சர்க்கா என்றும் பெயர். இப்போது பல நூதனமான வகைகளில் இராட்டைகள் பெருகியிருக்கின்றன. அவை கிசான் ராட்டை, பர்தோலி அல்லது பெட்டி ராட்டை, கால் ராட்டை, குதிரை ராட்டை என்பன. இராட்டையில் நூற்கப்

பட்ட நூல் நாற்பத்தெட்டு அங்குலம் கொண்டது ஒரு சுற்று ஆகும். எண்பது சுற்று கொண்டது ஒரு குஞ்சம். எட்டுக் குஞ்சம் கொண்டது ஒரு சிட்டம். சிட்டங்களைத் தறிகாரர்களிடம் கொடுத்தால், அவர்கள் ஆடை நெய்து கொடுப்பார்கள். ஒருவர் தம் ஓய்வு வேளையில் நூற்கக்கூடிய நூலைக் கொண்டு, அவருடைய தினசரி உபயோகத்திற்கு வேண்டிய ஆடைகளை நெய்து பெறமுடியும்.

கைராட்டையில் நூல் நூற்பது குடிசைத் தொழில்களில் முதன்மையானது. ஓய்வு நேரத்தில்



ஒவ்வொருவரும் சிறிதளவேனும் இராட்டையில் அல்லது தக்ளியில் நூற்பதை ஒரு விரதமாகக் கொள்ளலாம். ஒவ்வொரு கிராமத்திலும் நூற்கும் சாலைகள் ஏற்படுத்தி, அவற்றில் பலர் இராட்டை கொண்டு நூற்கலாம். இராட்டை நூல் பெருகப் பெருக, துணிப் பஞ்சம் ஒழிந்து விடும். கதராடைகளின் உற்பத்தி பெருகினால், மில் துணிகளை எதிர்பார்க்க வேண்டிய அவசியமே ஏற்படாது.

பண்டை நாட்களில் இராட்டை கொண்டு நூற்பதும், கைத்தறி நெசவும் நம் பாரத நாட்டில்

விசேஷமாக நடைபெற்றன. முற்காலத்தில் டாக்கா என்னும் ஊரில் நெய்யப்பட்ட ஆடைகள், மேனாட்டுச் செல்வர்களாலும் கொள்ளப்பட்டன.

அவ்வரிய தொழில் வன்மை இடைக்காலத்தில் பெரிதும் குன்றியது. கட்டும் துணிக்குப் பிற நாட்டாரை எதிர்பார்க்கும் நிலை ஏற்பட்டது. காந்தியடிகள் தோன்றி அத் தொழிலுக்குப் புத்துயிர் அளித்தார். பல விடங்களில் கதர் தொழிற் சாலைகள் ஏற்பட்டு வருகின்றன. கதர் தொழில் முற்றிலும் வளர்ச்சி யுறுவது நாட்டிற்கு செல்வம் ஆகும்.

| | | |
|---|---|---|
| நெய்யப்படுபவை | சுற்று | இழைக்கப்படும் |
| பளபளப்பு | குஞ்சம் | பிழைப்பு |
| நார்மடி | சிட்டம் | விரதமாக |
| கைத்தறி | தக்ளி | கதராடை |
| பட்டை | இராட்டை | விசேஷமாக |
| இழை | சர்க்கா | இடைக்காலம் |

## கேள்விகள்

1. இராட்டையில் பல வகைகளைக் கூறு.
2. இராட்டையால் ஏற்படக்கூடிய நன்மைகள் யாவை?
3. சிட்டம் என்பது எத்தனை அடி, அல்லது கெஜம்?

## பயிற்சி

1. எதிர்ப்பதங்கள் கூறு:
   மெல்லிய, விரைவு, முதன்மை.
2. எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் கூறு:
   (i) ஆடைகள் இன்றியமையாதவை.
   (ii) காந்தியடிகள் தோன்றி அத்தொழிலுக்குப் புத்துயிர் அளித்தார்.

# 25. தேசிங்கு ராஜன்

திண்டிவனத்திற்கு அருகிலுள்ள செஞ்சிக் கோட்டையைத் தேசிங்கு என்னும் மன்னன் ஆண்டு வந்தான். செஞ்சிக் கோட்டையின் மன்னர்கள் ஆற்காட்டு நவாபின் அதிகாரத்திற்கு உட்பட்டு, அவருக்குக் கப்பம் கட்டி வந்தார்கள்.

ஒரு சமயம் டில்லி பாதுஷாவிடம் ஓர் அடங்காப் புரவி இருந்தது. அதனை அடக்கி ஓட்டுபவருக்குப் பரிசு வழங்குவதாகவும், அம்முயற்சியால் தோல்வியுறுபவரைச் சிறை செய்வதாகவும் பாதுஷா விளம்பரம் செய்தார். சென்றவரெல்லாம் தம் முயற்சி நிறைவேறாமல் பாதுஷாவால் சிறை செய்யப்பட்டார்கள். அவ்வாறு சிறை செய்யப்பட்டவர்களில் தேசிங்கு ராஜனுடைய தந்தையான தரணி சிங்கும் ஒருவர்.

தரணி சிங்கு சிறை சென்ற போது, தேசிங்கு சிறு குழந்தை. தரணி சிங்கின் மனைவி அரசியல் நிர்வாகத்தைத் தானே மேற்கொண்டு, தன் மகனையும் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்தாள்.

பாலன் வாலிபனானான்; தன் தந்தையின் வரலாற்றை அறிந்தான். புலிக்குப் பிறந்தது பூனையாகுமா? தந்தையின் மானத்தைக் காப்பதே மகனுடைய கடமை என்று தீர்மானித்தான். அவன் தன் அன்னையிடம் விடை பெற்றுக்கொண்டு, டில்லியை நோக்கிச் சென்றான். அங்கு மயிலா

சனத்தில் அமர்ந்திருந்த பாதுஷாவைக் கண்டு தன் அவாவைக் கூறினன். அவர் அப்பரியை யடக்கு வதற்கு அவனுக்கு அநுமதி அளித்தார்.

வாலிபன் அதன் மீது பாய்ந்தேறினன்; அதன் வேகமெல்லாம் அடங்கும்படி, அஞ்சாமல் அதன் மீது சவாரி செய்து வலம் வந்தான். யாவருக்கும் அது வரையில் அடங்காத குதிரை தேசிங்கினிடம் பசுவைப்போல் நின்றது. சிறுவனின் திறமையைக் கண்ட பாதுஷா அவனுக்கே அப்பரியை வழங்கினர்; தரணிசிங்கைச் சிறையினின்றும் விடுவித்தார். அது முதல் செஞ்சி மன்னர் எவருக்கும் கப்பம் கட்டாமல் சுயேச்சையாக ஆளலாம் என்னும் உரிமையும் வழங்கினர்.

தேசிங்கு ராஜன் தன் தந்தையுடனும் பரிசுகளுடனும் வந்து, அன்னையை வணங்கினன். மகனுடைய வெற்றியைக் கேட்ட தாய், ஈன்ற பொழுதில் அடைந்ததை விடப் பெரு மகிழ்ச்சி கொண்டாள். தரணி சிங்கு தம் முதுமையால் இறந்தார். தேசிங்கு ராஜன் பட்டம் பெற்று மன்னன் ஆனன்.

செஞ்சியிலிருந்து வழக்கம்போல் தமக்குக் கப்பத் தொகை வராமையைக் கண்ட ஆற்காட்டு நவாபு சினம் கொண்டார். கப்பத்தை வாங்கி வரும் படி தம் படை வீரர்களுள் சிலரைச் செஞ்சிக்கு அனுப்பினர். நவாபின் ஆணையைக் கேட்டுத் திகைப்பும் கோபமும் கொண்டான் தேசிங்கு. டில்லி பாதுஷாவால் தனக்கு அளிக்கப்பட்ட உரிமையைக் கூறினன். தான் எவருக்கும் முடி வணங்கப் பெறு

தவன் என்றும், போர் முனையில் தன்னைச் சந்திக்கும் படியும் நவாப்பிற்குச் செய்தி அனுப்பினன்.

நவாப்பின் சேனைகள் செஞ்சியை முற்றுகை யிட்டன. போர் முரசைக் கேட்டான் தேசிங்கு. உடனே தன் தளகர்த்தனும், தோழனுமாகிய மகமத்கானுக்கு யுத்தத்தைப்பற்றி ஆணை விடுவித் தான். அச்சமயம் மகமத்கானுக்குத் திரு மணத் திற்கு வேண்டிய ஏற்பாடுகள் ஆகியிருந்தன ; திரு மணத்தை மறந்தான் மகமத்கான் ; மன்னர் ஆணையை நிறைவேற்றுவதே தன் பணியெனக் கொண்டான். வீரமுடன் தன் படைகளைக் கோட் டைக்கு வெளியே யுத்தகளத்தில் நிறுத்திப் போர் தொடங்கினன். நவாபின் படைத் தொகுதிகளைச் சின்னபின்னமாக ஓடச் செய்து விட்டு, மன்ன னுக்கு வெற்றியைத் தெரிவிக்கத் திரும்பினன். அப் போது ஒரு வஞ்சகப் பகைவன் மறைந்திருந்து தன் வாளால் மகமத்கானை வெட்டி வீழ்த்தினன்.

சிறிது நேரத்தில் அந்நிகழ்ச்சிகள் மன்னற்கு அறிவிக்கப்பட்டன. 'தோழனைக் கொன்ற பகைவர் கூட்டத்தை வெல்வேன்' என்ருன் ; 'தோழனைக் காண விண்ணகமும் தொடர்ந்து செல்வேன்' என்று உறுதி செய்தான். தானே தலைமை தாங்கிச் சென்று நவாபின் படைகளை மீண்டும் தோற்கடித் தான். ஆனல் தான் மட்டும் தன் அரண்மனை வந்து வாழ விரும்பவில்லை. தன் வாளை மேலே வீசினன் ; அது தரையை நோக்கி வரும்போது தன் கழுத்தை அதற்கு இரையாகக் கொடுத்தான்.

தன் கணவன் இறந்ததைக் கேட்ட இராணி யும் தீக்குளித்து இறந்து தன் கற்பைக் காத்தனள்.

தேசிங்கின் உண்மை வீரத்தையும், அவன் மனைவியின் கற்பையும் கண்ணுற்ற நவாபு, தம் பிழையை எண்ணி வருந்தினர். அவ்விடத்திற்கு இராணிப் பேட்டை என்ற பெயரை வைத்தார்.

உண்மையான நண்பர்களின் இலக்கணத்திற்கு இக்கதை ஒரு சான்றாகும். இருவரும் தத்தம் இன்ப துன்பங்களை ஒன்றெனக் கொண்டார்கள். சமய வேற்றுமையை அவர்கள் பாராட்டினார்களா? நாட்டின் பெருமையைக் காப்பது எச்சமயத்தாருக்கும் பொதுக் கடமை என்று அறிந்து ஒழுகினர்கள்.

| | | |
|---|---|---|
| கப்பம் | தருணம் | அநுமதி |
| சிறை | நிர்வாகம் | உரிமை |
| அவா | சுயேச்சையாக | கர்ஜித்தார் |
| பரி | போர்முனை | போர்முரசு |
| சவாரி | சின்னபின்னமாக | தொகுதி |
| சினம் | தலைமை தாங்கி | விண்ணகம் |

## கேள்விகள்

I. தேசிங்கு ராஜனுக்கு டில்லி பாதுஷா அளித்த உரிமை யாது? அவ்வுரிமை எதற்காக அளிக்கப்பட்டது?

2. ஆற்காட்டு நவாபு செஞ்சியின்மீது படையெடுத்ததற்குக் காரணம் என்ன?

3. இராணிப்பேட்டை என்ற பெயர் யாரால் வழங்கப்பட்டது? எதற்காக?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி:

, தலைமை தாங்கு, சுயேச்சை, அநுமதி.

2. பின்வரும்வாக்கியங்களிலுள்ள பெயரெச்சம், வினையெச்சம், வினைமுற்று ஆகியவற்றை கூறு:
   (i) டில்லி பாதுஷாவிடம் ஓர் அடங்காத புரவி இருந்தது.
   (ii) கணவன் இறந்ததைக் கேட்ட இராணி, தீக் குளித்து இறந்து தன் கற்பைக் காத்தனள்.

# 26. குமண வள்ளல்

## அங்கம் 1—காட்சி 1

இடம்: அமணன் அரண்மனை. காலை—அமணனும் நண்பர்களும், [மதியிலி, வஞ்சகன்]

நண்பர்கள்:—இளவரசே, வந்தனம். தங்கள் வாழ்வு நலம் பெறுக! சுரண்டல் ஒழிக! அண்ணு ஆட்சி வீழ்க! இளவரசர் ஆட்சி எய்துக!

அமணன்:—என் ஆருயிர் நண்பர்களே! நீங்கள் நமது அரசின் நன்மையை நாடுபவர்கள். நம் அண்ணன் நீதி தவருத நேர்மை உடையவன். மறத்தை ஒழித்து, அறத்தைக் காப்பவன். சிப்பந்திகள் யாவரும் ஒழுங்காகவும், உண்மையாகவும் உத்தியோகம் செய்பவர்கள். நான் வேறு; அண்ணன் வேறு அல்ல. எங்கள் இருவருடைய நலனும் எண்ணமும் ஒன்றே. அண்ணன் இருக்க, எனக்குக் கவலை ஏதும் இல்லை என்றல்லவா இது காறும் மகிழ்ச்சியுடன் இருந்தேன்! இன்று திடீரென்று 'சுரண்டல் ஒழிக' என்கிறீர்களே! அதன் உண்மை விளங்க வில்லையே!

மதியிலி:—இளவரசே! தங்கள் அண்ணனுடைய நேர்மையைப்பற்றி நாங்கள் குறை கூறவில்லை. அவர் சாலவும் நனி நல்லவர். மிகையென்பது தீமையாக விளையும் என்பர். பல வேடதாரிகள் அவரிடம் சுரண்டுவதைப் பார்க்க எங்கள் மனம் பதைக்கிறது. 'தருமம் தருமம்' என்று சொல்லி நிதியைவாரி இறைத்தால் அரசாங்க நிலை தடுமாறுமே என்று நாங்கள் வருந்துகிறோம். இளவரசரின் நன்மையையே நாடும் எங்கள் உள்ளம் எவ்வாறு வருந்தாமல் இருக்கமுடியும்?

வஞ்சகன்:—யுவராஜரே! தங்கள் அண்ணா மிக மிக நல்லவர். இரப்போர்க்கு எதையும் கொடுத்து விடுவார். நல்லவர் என்று தெரிந்தால், வறிய புலவர்கள் சும்மா இருப்பார்களா? வள்ளலே என்றும், குபேரனே என்றும், கர்ணனே என்றும், மலையே, கடலே, மேகமே என்றும் வஞ்சனையாகப் பாட்டுகள் பாடிக்கொண்டு வருகிறார்கள். நாலடிப் பாட்டிற்கு நானூறு பொன்னும் கொடுத்து விடுவார் மன்னர். கந்தையில் வந்த புலவர்கள், பொன் மூட்டைகளைத் தலையிற் சுமந்து செல்லுகிறார்கள். நாட்டின் பொது நன்மைகளுக்கு ஏற்பட்டுள்ள நிதியை, இவ்வாறு முகத்துதி செய்யும் வீணருக்கு அளித்துத்தீர்த்தால், அரசாங்கக் காரியங்கள் எவ்வாறு நடைபெறும்?

அமணன்:— மதி சிறந்த நண்பர்களே! நீங்கள் என் உண்மையான நண்பர்கள். நிதி முழுவதும் காலியாவதற்குள், சமயமறிந்தும், முன்னெச்சரிக்கையாகவும் என்பால் வந்து துப்புச் சொன்னீர்கள்.

## அங்கம் 1—காட்சி 2

*அமணன் அரண்மனை — இரவு — அமணனும் நண்பர்களும்*

அமணன்:—நண்பர்களே, பின் வருவதை முன்னறிவித்த உத்தமர்கள் நீங்கள். தூப்பு வந்து சொல்லிய நீங்களே, யுக்தியும் சொல்வீர்களாக.

வஞ்சகன்:—குமணன் ஆட்சி, அமணனுக்கு மாறவேண்டும். தங்கள் அண்ணு முடி துறந்துவிட வேண்டும். இளவரசர் முடிமன்னர் ஆகவேண்டும். குமணன் சுக ஜீவியாகவும், புலவர்களின் பாட்டுகளைக் கேட்டுக்கொண்டும் இருப்பாராக.

வஞ்சகன்:—முடி மன்னன் குமணன். அமணன் முடிமன்னன் ஆகவேண்டுமென்ருல், அது இலகுவில் ஆகுமா! நிதிக் குவையைப் பார்த்துக் கொண்டே இருப்பவர், அதினின்றும் விலக விரும்புவாரா?

அமணன்:—ஆம், நீவிர் இருவர் கூறுவதும் உண்மையே. இனி ஒரு கணமும், குமணன் சிம்மாசனத்தில் வீற்றிருத்தல் கூடாது. அவனைக் கீழே இறக்குவது எங்ஙனம்?

நண்பர்கள்:—வேந்தே, உண்மையைக் கூறுவதற்கு என்ன தாமதம்? தாங்களே நேரில் சென்று, அரசுரிமையை ஒப்புவிக்கும்படி கேட்பதே ஏற்றது.

## அங்கம் 2 — காட்சி 1

*இடம்: ஆரண்யம். ஒரு நாள் காலை — குமணனும் சாத்தனாரும்*

குமணன் :—[*தனியாக உலாவுகிறார்; பல எண்ணங்களை எண்ணுகிறார்.*] நாட்டின் முன்னேற்றத்திற்காகவே நான் புலவர்களை ஆதரித்தேன்; கலை வளர்ச்சிக்காகவே அவர்களுக்குக் காசுகள் வழங்கினேன். என் உள்ளத்தை அமணன் அறிந்திலன். மதியிலியும், வஞ்சகனும் அவனுடைய உள்ளத்தில் எரியூட்டி விட்டார்கள். ஆற்றல் இல்லாமல் அரசியலை வேண்டினான்.

அரசியலின் சுமையை அவன் அறிவானாக. நான் தனி வாழ்வை இவ்வாரண்யத்தில் அனுபவிக்கிறேன். கவலையில்லாமல் இயற்கையைக் கண்டு களிப்படைகிறேன்.

சாத்தனார் :—கார்நிகர் வண்கையோய்! மன்னுயிர் காக்கும் மதிமன்னா! தாயகன்ற கன்று போல் அலைந்து திரிந்தேன்! கானகம் வந்து உம்மைக் கண்டேன்.

குமணன் :—அருந்தமிழ்ப் புலவரே, பசியுடன் இருக்கின்றீர். இக்கனிகளை அருந்தி இளைப்பாறுக. பின்னர் யாவும் பேசுவோம்.

## அங்கம் 2—காட்சி 2

*அரண்யம் — மாலை — குமணனும் சாத்தனரும்*

குமணன் :—அறிஞரே, உமது கவி என் உள்ளத்தைக் கவர்கிறது. கற்பனை நிறைந்த கவியைக் கானகத்தில், தனியனாக வாழும் நாளில் கூறுகிறீர்களே! முடியுடன் விளங்கியபோது, வந்திருந்தால் பொன் முடிப்பு அளிப்பேனே! இல்லையென்னது அளித்த கை, இப்போது இரப்போரைக் கண்டு வறிது இரங்குகின்றதே!

சாத்தனர் : — "ஆற்றுப் பெருக்கற் றடிசுடும் அந்நாளும், அவ்வாறு ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்." தாங்கள் அளித்த கனிகள் என் உள்ளத்தைக் களிக்கச் செய்தன. தங்களுடைய தனிமையைக் கண்டு கலங்குகிறேன். யானும் இக் காட்டிலேயே உம்முடன் துணையிருக்க விரும்புகிறேன்.

குமணன் :—புலவர் பெரும, அவரவர்களுடைய விதிப்பயனை அவரவர்கள் அனுபவித்தே தீரவேண்டும். தாங்கள் வருந்தற்க. இப்போது எனக்கு ஒரு ஞாபகம் வருகிறது. காட்டிற்கு வந்தும், என்பால் அச்சமும் ஐயமும் கொள்கிருனும் அமணன். என் தலையைக் கொணர்வோருக்கு ஆயிரம் பொன் அளிப்பதாகப் பறை அறைவித்தானும். நாட்டிலிருந்து வந்த ஒற்றர்கள் நேற்று என்பாற் கூறினர்கள். இறந்தபின் இவ்வுடல் எதற்கு ஆவது? என் தலையைக் கொண்டுபோய் என் தம்பியிடம் கொடுப்பீராக. அவன் அளிக்கும் ஆயிரம் பொன்னைக் கொண்டு, வறுமை யொழிய வாழ்வீராக.

## அங்கம் 2—காட்சி 3

*அமணன் கொலுமண்டபம்—முற்பகல்—அமணன், மந்திரி முதலாயினோர், சாத்தனார்.*



சாத்தனார்:—அமண மன்னன் நன்மை எய்துக. வஞ்சகன் வீழ்க. அரசு ஓங்குக. குடிகள் மகிழ்க. கலைகள் வாழ்க.

கொற்றவ, நீவிர் கூறியவாறே, இதோ உமது அண்ணன் தலை! அளித்திடுக ஆயிரம் பொன்னும்!

அமணன்:—(அத்தலைமுன் மண்டியிட்டுத் தன் தலைகுனிந்த வண்ணமாய்) ஐயோ, நான் இந்தப் பாவம் செய்ததை யாரிடம் சொல்வேன்! நெஞ்சு பிளக்கிறது. மதிலியும், வஞ்சகனும் என்னைத் துன்பத்தில் ஆழ்த்தி விட்டார்களே. தம்பியும் இவ்வாறு அநியாயம் செய்யலாமோ? எப்படிக்

காண்பேன் இனி என் அண்ணனை! அண்ணா! அண்ணா!! (பிறகு புலவரைப் பார்த்து) புலவர் பெரும, ஆயிரம் பொன் அளித்திடத் தடையில்லை. அண்ணன் இறந்து, நான் படிமிசை வாழ்வேனோ! தேவியின் அருளால், நீர் என் அண்ணனைப் பிழைப் பிப்பீரேல், பின்னுமோர் ஆயிரம் பொன் அளிப் பேன். புலவரே, அருள் செய்திடுக.

சாத்தனார்:—கலங்கற்க, அமண. வாணியின் அருள் பெற்றோருக்கு எதுவும் அரிதல்ல. மாலையே உம் அண்ணனைப் பிழைப்பித்து வருவேன்.

## அங்கம் 3—காட்சி 1

*அரண்யம்—குமணனும், சாத்தனாரும். பிற்பகல்.*

சாத்தனார்:—அறத்திற் சிறந்த நீதி மன்ன எல்லாம் மங்களமாக முடிந்தன. அமணன் உம்மை விரைவில் அழைத்து வரச் சொல்லினன்.

குமணன்:—என்ன! ஒன்றும் விளங்கவில்லையே, இது நனவோ, கனவோ!

சாத்தனார்:—அரசே, உம் தலையைக் கொணர் வோர்க்கு அமணன் ஆயிரம் பொன் அளிப்பான் எனக் கூறினீர்கள். யான் கைதேர்ந்த ஒரு சிற்பியை நாடி, செவாழைக் கட்டையால் உமது தலை போலவே உருச் செய்து, அமணன்பால் சென் றேன். செவ்வாழைக் கட்டையாகையால், அதனின் றும் ஒழுகிய நீர் இரத்தம்போல் தெரிந்தது.

அமணன் கலங்கித் துடிக்கிறான். தன் பிழையை எண்ணித் தவிக்கிறான். அண்ணுவைப் பிழைப்பித்தால், பின்னுமோர் ஆயிரம் பொன் தருவதாகக் கூறினன். விரைவில் வருக; தாமதித் தால் அவன் நெஞ்சம் பிளந்துபோம். தம்பியைக் காத்தருள்க.

## அங்கம் 3—காட்சி 2

*அரண்மனைக் கொலுமண்டபம்—அந்திவேளை—அமணன் அமைச்சர், குடிகள்.*

[குமணனும், சாத்தனும் வருகின்றனர்.

குடிகள்:—ஜே! ஜே!! ஜே!!! குமண மன்ன ருக்கு ஜே! அறம் வளர்ந்திடுக! கலைகள் வளர்ந்திடுக!

அமணன்:— அண்ணு! அண்ணு!! உன்னைக் கண்டவுடன் ஆநந்தம் கொண்டேன். பொறுத்திடுக என் பிழைகளை. கயவரையும் மூர்க்கரையும் இனி நட்புக் கொள்ளேன். நல்லோர் நட்பே இனி எக் காலும் நாடுவேன். ஏற்றுக்கொள்க அரியாசனம், உமது அடி பணிந்து தொண்டுசெய்வேன்.

[பிறகு புலவரைப் பார்த்து] புலவரே, இதோ பேசியபடி ஈராயிரம் பொன்னும். நீர் இனி இவ்வரண்மனையிலேயே வாழ்வீராக.

குமணன்:—அமண, பிழை செய்தல் இளைஞர்க்கு இயல்பு; பிழை பொருத்தலும் திருத்துவதும்

மூத்தோர் கடமை. யான் வறிதே பொருளை வீணாக்க வில்லை. புலவர்கள் என்போர் கலைகள் வளர்ப்பவர் கள். கலைகள் ஆராய்ச்சியால் நாட்டின் நிலைமை உயரும்; நாகரிகம் பெருகும். புலவர்களை அரசர்கள் ஆதரிப்பது நாட்டின் நலனுக்காகவே.

### பயிற்சி

இந்த நாடகத்தை நடித்துக் காட்டுக

# 27. நறுந்தொகை

1. எழுத்தறி வித்தவன் இறைவன் ஆகும்.
2. கல்விக் கழகு கசடற மொழிதல்.
3. செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்.
4. மன்னர்க் கழகு செங்கோல் முறைமை.
5. மந்திரிக் கழகு வரும்பொருள் உரைத்தல்.
6. தந்திரிக் கழகு தறுகண் ஆண்மை.
7. உண்டிக் கழகு விருந்தோ டுண்டல்.
8. பெண்டிர்க் கழகு எதிர்பேசா திருத்தல்.
9. அறிவோர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்.
10. வறியோர்க் கழகு வறுமையிற் செம்மை.
11. தேம்படு பனையின் திரள்பழத் தொருவிதை
வானுற ஓங்கி வளம் பெற வளரினும்
ஒருவர்க் கிருக்க நிழலா காதே.
12. தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை
தெண்ணீர்க் கயத்துச் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே ஆயினும் அண்ணல் யானை
அணிதேர் புரவி ஆட்பெறும் படையொடு
மன்னர்க் கிருக்க நிழலா கும்மே.
13. பெரியோ ரெல்லாம் பெரியரும் அல்லர்.
14. சிறியோ ரெல்லாம் சிறியரும் அல்லர்.

15. பெற்றோ ரெல்லாம் பிள்ளைகள் அல்லர்.
16. உற்றோ ரெல்லாம் உறவினர் அல்லர்.
17. அடினும் ஆவின்பால் தன்சுவை குன்றாது.
18. சுடினும் செம்பொன் தன்னொளி கெடாது.
19. அரைக்கினும் சந்தனம் தன்மணம் அறாது.
20. புகைக்கினும் காழ் அகில் பொல்லாங்கு கமழாது.
21. கலக்கினும் தண்கடல் சேறுகாது.
22. ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே.
23. நூற்றாண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை
நீர்க்குள் பாசிபோல் வேர்க்கொள் ளாதே.
24. பெருமையும் சிறுமையும் தான் தர வருமே.
25. சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம்
பெரியோ ராயின் பொறுப்பது கடனே.
26. சிறியோர் பெரும் பிழை செய்தன ராயின்
பெரியோர் அப்பிழை பொறுத்தலும் அரிதே.
27. கற்கை நன்றே; கற்கை நன்றே;
பிச்சை புகினும் கற்கை நன்றே.
28. கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுள் பிறந்த பதரா கும்மே.
29. நாற்பால் குலத்தில் மேற்பால் ஒருவன்
கற்றிலன் ஆயின் கீழிருப்பவனே.

30. எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியிற் கற்றோரை வருக வென்பர்.

31. அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்.

32. யானைக் கில்லை தானமும் தருமமும்.

33. பூனைக் கில்லை தவமும் தயையும்.

34. ஞானிக் கில்லை இன்பமும் துன்பமும்.

35. சிதலைக் கில்லை செல்வமும் செருக்கும்.

36. முதலைக் கில்லை நீத்தும் நிலையும்.

37. அச்சமும் நாணமும் அறிவிலோர்க் கில்லை.

38. நாளும் கிழமையும் நலிந்தோர்க் கில்லை.

39. கேளுங் கிளையும் கெட்டோர்க் கில்லை.

40. உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா.

—அதிவீரராம பாண்டியன்

இறைவன்
கசடற
செழுங்கிளை
செங்கோல்
வரும்பொருள்
தந்திரி
தறுகண்
தேம்படு
கயம்

நுண்ணிது
அண்ணல்
புரவி
அடினும்
குன்றுது
அருது
காழ்
அகில்
பொல்லாங்கு

கமழாது
கேண்மை
சிதலை
நீத்து
நலிந்தோர்
கேள்
செம்மை
உடைமை
பதர்

அரும்பதவுரை: இறைவன் - கடவுள். கசடு அற - குற்றம் நீங்க, பிழை இல்லாமல். செழுங்கிளை - நெருங்கிய சுற்றத்தார். செங்கோல் - நேர்மையான ஆட்சி முறை. தந்திரி - சேனைத் தலைவன். தறுகண் - அஞ்சாமை. செம்மை - ஒழுக்கம். தேம்படு - இனிமை பொருந்திய. வானுற - வானத்தைத் தொடும்படியாக. தெண்ணீர் - தெளிந்த நீர். கயம் - குளம். நுண்ணிது - நுட்பமானது. அண்ணல் - பெரிய; பெருமை வாய்ந்த. அணிதேர் - அலங்கரிக்கப்பட்ட தேர். புரவி - குதிரை. படை - சேனை. அடினும் - காய்ச்சினாலும். குன்றுது - குறையாது. அருது - குறையாது. காழ்-மரவைரம். கேண்மை - நட்பு. குலநலம் - குலப்பெருமை. பதர் -சாவி. நலிந்தோர் - வறுமையடைந்தோர்.

# சுதந்திர தமிழ் வாசகம்

## ஐந்தாம் புத்தகம்


ஆக்கியோர் :

R. நாகராஜ ராவ்

ஆசிரியர், E. R. ஹைஸ்கூல், திருச்சிராப்பள்ளி

V. நரசிம்ம அய்யர், B. O. L.,

தமிழாசிரியர், ஸேவா ஸதனம் ஹைஸ்கூல், சென்னை



P.B. 343. TEL "BOOK"

ஸதர்ன் பப்ளிஷர்ஸ்

தெப்பக்குளம், திருச்சி.




[ விலை 0–9–0

Fifth Edition—May, 1952

*Approved by the Text-Book Committee on May 7, 1952,*
*Supplement to Part I-B of the Fort St George Gazette*
*No. 18-A, Standard use (Part I) Page 28,*
*Class use (Part II) Page 101.*

Madras Ripon Press, Pudukkottai. ([illegible])

# முகவுரை

'சுதந்திர தமிழ் வாசகம்' என்னும் பெயருடன் மலரும் இப் புத்தகத்தில் உள்ள பாடங்கள் காலத்திற்கேற்பப் பழையன கழிந்து, புதியன புகுத்தி எழுதப் பெற்றுள்ளன. வகுப்பிற் கேற்பப் படிப் படியான முறையில் வாசிப்பதற்கு வேண் டிய பயிற்சிகளைக் கொடுப்பது என்ற நோக்கத்தையும் அடிப்படையாகக் கொண்டு, விஷயங்களைத் தேர்வதிலும் கவனம் செலுத்தப் பெற்றுள்ளது. உலக வியலில் பொருந்தாதனவற்றை அறவே நீக்கி, சமூக ஒற்றுமையும், பரந்த நோக்க மும், தேச பக்தியும், ஊக்கமும், அளிக்கற் பாலனவாகிய விஷயங்களையே பாடமுறை யில் அமைத்துள்ளோம். வகுப்புகளைக் கையாண்ட அநுபவத்தைக் கொண்டு வெளியிடப் பெற்றுள்ள இப்புத்தகங்கள் மாணவர்களுக்கு வேண்டிய மொழிப் பயிற்சியையும் நல்லறிவையும் பயக்கு மென நம்புகிறோம்.

ஆக்கியோர்

# பொருளடக்கம்

# சுதந்திர தமிழ் வாசகம்

## ஐந்தாம் புத்தகம்

### 1. பாரத நாடு




பாரத நாடு நம் தாய் நாடு. வெகு காலத்துக்கு முன்னே, பரதர் என்ற புகழ் பெற்ற அரசர் ஒருவர் இந்தியா முழுமையும் ஆட்சி செய்தார்.

ஆகையால் நம் நாட்டிற்குப் பாரத நாடு என்ற பெயர் ஏற்பட்டது.

மலைகள், சமவெளிகள், காட்டுப் பிரதேசங்கள், பாலை நிலம், கடற்கரை ஆகிய எல்லாவிதமான இயற்கை நலன்களும் பொருந்தியது, நம் நாடு. இமயமலைத் தொடர்கள், இந் நாட்டின் வடக்கு எல்லையாகவும், பாதுகாப்பாகவும் அமைந்துள்ளன. உலகத்திலுள்ள மலைகள் எல்லாவற்றிலும் இமய மலையே மிகப் பெரியது. இமம் என்றால் பனி. அம்மலைச் சிகரங்களில் எப்போதும் பனி உறைந் திருக்குமாகையால் அப்பெயர் ஏற்பட்டது.

தேசத்தின் மத்திய பாகத்தில் கீழ்மேலாக விந்திய மலைத் தொடர் அமைந்துள்ளது. விந்திய மலையின் வடக்கிலுள்ள பாகம் வட இந்தியா அல்லது இந்துஸ்தானம் என்றும், தெற்கிலுள்ள பாகம் தென்னிந்தியா என்றும் வழங்கப்படும்.

தென்னிந்தியா கிழக்கு, மேற்கு, தெற்கு ஆகிய மூன்று பக்கங்களிலும் கடலால் சூழப்பட்டிருக் கிறது. ஆகையால் இப்பகுதி ஒரு பெரிய தீபகற்ப மாகும். இத் தீபகற்பத்தின் மேற்குப் பக்கத்தில் கடற்கரையை ஒட்டி ஒரு நீண்ட மலைத்தொடர் வியாபித்திருக்கிறது. அதற்கு மேற்குத் தொடர்ச்சி மலை என்று பெயர். கிழக்குப் பக்கத்திலும் கடற் கரையினின்று சிறிது விலகி, உள்நாட்டில் கிழக்குத் தொடர்ச்சி மலைகள் இருக்கின்றன. இவ்விரு மலைத் தொடர்களில், மேற்குத் தொடர்ச்சி மலைகளே மிக உயரமானவை.

தென்னிந்தியத் தீபகற்பம் தெற்கே செல்லச் செல்லக் குறுகி ஒடுங்கியுள்ளது. தெற்குக்

கோடியில் உள்ள முனைக்குக் கன்னியாகுமரி முனை என்று பெயர்.

இமயமலைகளிலிருந்தும் மேற்குத் தொடர்ச்சி மலைகளிலிருந்தும் உற்பத்தியாகும் ஆறுகள் முறையே இந்துஸ்தானத்தையும் தென்னிந்தியாவையும் வளமுறச் செய்கின்றன. இமயமலைகளில் தோன்றும் நதிகளில் கங்கை, சிந்து, பிரமபுத்திரா ஆகிய மூன்றும் முக்கியமானவை. கோதாவரி, கிருஷ்ணை, காவிரி ஆகிய மூன்றும் தென்னிந்தியாவைச் செழிப்பிக்கும் ஆறுகளில் சிறந்தவை.

நம் பாரதநாடு தெற்கு வடக்கில் சுமார் இரண்டாயிரம் மைல்களும், கிழக்கு மேற்கில் சற்றேறக் குறைய அதே தூரமும் வியாபித்துள்ள பெரிய தேசம். இங்கு எல்லா இயற்கை வளங்களும் நிரம்பியுள்ளன. ஆகையால் சுமார் முப்பத்தைந்து கோடி மக்கள் இங்கு வாழ்கின்றனர். வெவ்வேறு பிரதேசங்களில் வாழ்வோர் வெவ்வேறு பாஷை பேசுவோராகவும் வெவ்வேறு நடை உடை பாவனை உள்ளோராகவும் இருக்கின்றனர். பல்வேறு சமயக் கொள்கைகளும் மக்களால் அனுசரிக்கப்படுகின்றன. எனினும் இந்தியர் எல்லோரிடமும், 'ஒரே நாட்டு மக்கள்' என்ற உணர்ச்சி பண்டைக்கால முதலே இருந்து வந்திருக்கிறது. சமீப காலத்தில் பாரத நாட்டின் சுதந்திரப் போரில் ஈடுபட்ட தியாகிகளின் உழைப்பினால் இந்த ஒற்றுமை உணர்ச்சி மேலும் பலப்பட்டிருக்கிறது. எனவே எல்லா மதத்தினரும் எல்லா மொழியினரும் ஐக்கிய உணர்ச்சியும் கட்டுப்பாடும் கொண்டு பாரத நாட்டின் முன்னேற்றத்திற்காக உழைக்க முன் வரவேண்டும்.

| | | |
|---|---|---|
| பாதுகாப்பு | ஐக்கியம் | செழிப்பு |
| இயற்கை நலன் | அனுசரி | வளம் |
| தீபகற்பம் | இமம் | சமயம் |
| உற்பத்தி | வியாபி | தியாகி |
| வளமுறச்செய் | கோடி | |

### கேள்விகள்

1. பாரதநாடு என்ற பெயர் எவ்வாறு ஏற்பட்டது?

2. இந்தியாவின் இரு பெரும் பிரிவுகள் யாவை? அவற்றை வளமுறச் செய்யும் முக்கிய நதிகளைச் சொல்லு.

3. நம் நாட்டு மக்கள் எவ்விஷயங்களில் வேறுபட்டுள்ளனர்?

4. இந்தியராகிய நம் கடமை என்ன?

### பயிற்சி

1. பின்வரும் சொற்களை உன் சொந்த வாக்கியங்களில் உபயோகி:
பாதுகாப்பு, ஐக்கியம், அனுசரி, செழிப்பு.

2. எதிரான அர்த்தமுடைய சொற்களைக் கூறு:
இயற்கை, ஐக்கியம், பண்டைக்காலம்.

3. இரண்டு பொருள்கள் கூறு:
கொடி, சமயம்.

4. இப்பாடத்திலிருந்து ஐந்து பெயர்ச் சொற்களும் ஐந்து வினைச் சொற்களும் கூறு.

## 2. தமிழ்

யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவ தெங்கும் காணோம்.
பாமரராய் விலங்குகளாய் உலகனைத்தும்
இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழரெனக் கொண்டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ, சொல்லீர்!
தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்.

யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல் இளங்கோவைப் போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை, உண்மை
வெறும் புகழ்ச்சி யில்லை;
ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய்
வாழ்கின்றோம்; ஒரு சொற் கேளீர்!
சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்!

—பாரதியார்

| | | |
|---|---|---|
| பாமரர் | யாங்கணும் | நாமம் |
| விலங்கு | சேமம் | தேமதுரம் |
| பான்மை | முழக்கம் | அனைத்தும் |

### கேள்விகள்

1. தமிழராகிய நாம் எவ்வாறு வாழ்கிறோம்?

2. சேமமுற வேண்டுமெனில் என்ன செய்தல் வேண்டும்?

3. கம்பன், வள்ளுவர், இளங்கோ—இவர்கள் எழுதிய நூல்கள் எவை?

# 3. தேகப் பயிற்சி

"சுவர் வைத்துக் கொண்டு சித்திரம் எழுத வேண்டும்" என்பது ஒரு பழமொழி. அதுபோல் நாம் நமக்கும், மற்றவர்களுக்கும் ஆகக் கூடிய பல நற் காரியங்களைச் செய்வதற்கும் மகிழ்ச்சியாக வாழ்வதற்கும் உடல் நலம் அவசியமாகும். உடல் நலமாவது, நோயின்மையும் வலிமையும். இவ்விரண்டும் ஒவ்வொருவருக்கும் இன்றியமையாதவைகளே. உணவும், உடையும், காற்றும் சரியானபடி இருந்தால் ஆரோக்கியம் அமையும். ஒருவர் நோயின்றி ஆரோக்கியமாக இருக்கலாம்; ஆனல் பலமில்லாதவர்களாக இருப்பதுண்டு. வினைகளை ஆற்றுவதற்குப் பலம் இல்லாமல் முடியாது. உடல் பலம் பெறுவதற்குத் தேகப்பயிற்சியே சாதனமாகும். தேகப் பயிற்சி அவரவர்கள் செய்யும் தொழில்களுக்கும் வயதுக்கும் ஏற்றபடி மாறுபடும். நெற்றி நீர் நிலத்தில் விழும்படி வேலை செய்கிறவர்களுக்கு அவ் வேலையே தேகப்பயிற்சியும் ஆகும். நாற்காலியில் அமர்ந்து வேலை செய்கிறவர்களுக்கு, ஆட்டம், ஓட்டம், உலாவுதல் போன்ற பயிற்சிகள் வேண்டும்.

இளம் பருவத்தினராகிய நீங்கள் மேற்கொள்ள வேண்டிய தேகப்பயிற்சி முறைகளைப் பற்றி இப் பாடத்தில் கவனிப்போம். நீங்கள் எல்லோரும் கல்வி கற்பவர்கள். கல்வி கற்பதற்கு மூளை, அதாவது யூகம் வேண்டும் என்பர். யூகம் மட்டும் இருந்தால் போதுமா? யூகமுள்ள பிள்ளைகள் பலர் மெலிந்திருப்பதையும் காணலாம். அவர்களால் நன்கு உழைக்க முடியாது. ஆகையால் உடலையும்

பலம் உள்ளதாக வைத்துக் கொள்ளவேண்டும். பலமும், யூகமும் உள்ளவர்கள் தம் வாழ்க்கையிலும் சுகமாக இருப்பார்கள். அதனால்தான் தேகப் பயிற்சியும் உங்களுக்குள்ள பாட வகைகளுள் ஒன்ருக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

தேகப் பயிற்சி செய்வதால் உடலிலுண்டாகும் கழிவுப் பொருள்கள் வெளிப்படும்; ரத்தஓட்டம் செம்மையாகும்; உடலின் உறுப்புக்கள் சுறுசுறுப்பு அடையும்; நரம்புகள் எல்லாம் வலிமை பெறும்;உண்ணும்உணவு சரியாக ஜீரணமாகும்; நோய்கள் அணுகமாட்டா; ஞாபக சக்தியும், கிரகிக்கும் சக்தியும் திடப்படும்.



அதிகாலையும், மாலை நேரமும் தேகப் பயிற்சி செய்வதற்கு ஏற்ற காலங்கள். உண்டபின் தேகப் பயிற்சி செய்யக்கூடாது. காற்ரேட்டமும், வெளிச்சமுமுள்ள வெளியிடமே தேகப் பயிற்சிக்கு ஏற்ற இடம். தேகப் பயிற்சி செய்தவுடன் தண்ணீர் அருந்தக்கூடாது. சிறிது நேரம் இளைப்பாறிவிட்டுச் சத்துள்ள உணவுப் பொருள்களை அருந்தலாம். தேகப்பயிற்சி செய்து



விட்டு நல்ல ஆகாரம் உட்கொள்ளாமலிருந்தால் நோய்கள் உண்டாகும். முறையாகவும், அளவாகவும், குறித்த நேரத்தில் தேகப் பயிற்சி செய்வதே நல்ல பழக்கம்.

இப்பயிற்சியில், மேனாட்டு முறை, நம் நாட்டு முறை எனப் பல வகைகள் உண்டு. நம் நாட்டு





முறைக்குக் கருவிகள் வேண்டுவதில்லை; அம்முறையால் நிலையான நீடித்த வலிமை ஏற்படும். அவை பஸ்கி, தண்டால், கரளா வீசுதல்,ஓட்டம் முதலியன ஆகும். தாண்டிக் குதித்தல், கால்பந்து, எறிபந்து போன்ற விளையாட்டுக்களும் தேகப்பயிற்சியைச் சேர்ந்தவையே.



இளம் வயதில், தேகப் பயிற்சிசெய்து உடம்பைப் பலப்படுத்திக் கொண்டால், அவ்வுடல் பலம் நெடுநாள் நன்மையைத் தரும். வயதானவர்களுக்குப்

*பூப்பந்து போன்ற இலேசான ஆட்டங்களும், உலாவச் செல்வதுமே போதுமான தேகப்பயிற்சி யாகும்.*

*தேகப்பயிற்சி யில்லாமல், யூகத்தை மட்டும் கொள்வது எப்படிச் சிறக்காதோ, அதுபோலவே படிப்பைக் கவனிக்காமல், உடல் பலத்தை மாத்திரம் வளர்ப்பதும் நன்மையாகாது. ஆகையால் பிள்ளைகள் தேகப் பயிற்சியையும், மற்றப் பாடங்களோடு ஒன்றாகக் கொண்டு செய்து வரவேண்டும்.*

| | | |
|---|---|---|
| தேகப்பயிற்சி | கரளா | இளம்பருவத்தினர் |
| விளைகள் | நற்காரியங்கள் | நரம்புகள் |
| ஆற்றுவது | நோயின்மை | ஜீரணமாகும் |
| மூளை | நெற்றிநீர் | ஞாபகசக்தி |
| யூகம் | கழிவு | கிரகிக்கும் சக்தி |
| நீடித்த | ரத்தவோட்டம் | அதிகாலை |
| தண்டால் | திடப்படும் | காற்ரேட்டம் |
| பஸ்கி | அருந்துவது | |

கேள்விகள்

1. *தேகப்பயிற்சி செய்வதால் உண்டாகும் நன்மைகள் யாவை?*

2. *தேகப்பயிற்சியில் பலவகைகளைக் கூறு.*

3. *தேகப்பயிற்சி செய்பவர் கவனிக்கவேண்டிய முறைகள் என்னென்ன?*

பயிற்சி

1. *கோடிட்ட இடங்களைத் தகுந்த வார்த்தைகளை அமைத்து நிரப்பு:*

(i) *உடல் நலம் ஒவ்வொருவருக்கும்————*

(ii) *தேகப்பயிற்சியால் நரம்புகள்————பெறும்.*

2. *பொருள் கூறு: திடப்படும், இருந்து, நீடித்த.*

3. பின்வரும் வாக்கியங்களைக் கவனித்துப் படி :

(i) முருகன் ஓடினன்.

(ii) ராமன் புத்தகத்தைப் படித்தான்.

முதல் வாக்கியத்தில் ஓடினன் என்பது வினைச் சொல். இச்சொல் முருகன் செய்த செயலைக் குறிக்கிறது. ஒரு வாக்கியத்தில் இம்மாதிரி செயலைக் குறித்து வரும் சொல்லுக்குப் பயனிலை என்று பெயர். பயனிலையால் குறிக்கப்படும் செயலைச் செய்தவனை அல்லது செய்த பொருளைக் குறிக்கும் சொல்லுக்கு எழுவாய் என்று பெயர். முதல் வாக்கியத்தில் முருகன் எழுவாய்.

இரண்டாம் வாக்கியத்தில் ராமன் எழுவாய்; படித்தான் பயனிலை. இதில் மற்றொரு சொல் இருக்கிறது. 'எதைப் படித்தான்?' என்ற கேள்விக்கு 'புத்தகத்தை' என்பது விடையாக வருகிறது; பயனிலைக்கு முன் 'எதை' அல்லது 'யாரை' என்று வைத்து வினவினல் வரும் விடை **செயப்படுபொருள்** என்று சொல்லப்படும்.

பின்வரும் வாக்கியங்களில் எழுவாய் பயனிலை செயப்படுபொருள் கூறு :

(i) பையன் விளையாடுகிருன்.

(ii) பூனை பாலைக் குடித்தது.

(iii) என் தந்தை நேற்று வந்தார்

(iv) யானை பாகனைக் கொன்றது.



# 4. எலிஷா

பண்டைக் காலத்தில் இஸ்ரவேலர் நாட்டில் எலிஷா என்ற தீர்க்கதரிசி வாழ்ந்துவந்தார். கடவுளின் அனுக்கிரகத்தினால், முக்காலத்தையும் அவர் அறிந்திருந்தார். அவர் சொன்ன வார்த்தைகள் அப்படியே பலித்தன. சாதாரண மக்களால் செய்ய முடியாத பல தெய்வீகமான காரியங்களை அவர் செய்தார். அவரது மகிமையை அறிந்தோர் தங்களுடைய கஷ்டகாலத்தில் அவருடைய உதவியை நாடிவருவது வழக்கம்.

ஒரு நாள் ஒரு கைம்பெண் அவரிடம் வந்தாள். அவள் அவரை நோக்கி, " என் கணவன் சமீபத்தில் மரணமடைந்தான். அவன் கடவுளுக்குப் பயந்து

வாழ்க்கை நடத்தினன். அவன் இறந்ததால் நான் பிழைக்க வழியில்லாதவளா யிருக்கிறேன். மேலும் அவன் ஒருவனிடம் கடன் வாங்கி யிருந்தான். கடனைக் கொடுக்க என்னிடம் பணம் ஏதுமில்லை. இச்சமயத்தில் கடன் கொடுத்தவன் என்னிடம் வந்து தன்னுடைய பணத்தைத் திரும்பக் கேட்கிருன். பணமில்லாவிடில், எனது இரண்டு மக்களை அடிமைகளாகக் கொடுக்கும்படி கேட்கிருன். நான் என்ன செய்வேன்!" என்று தன் கஷ்ட நிலையைக் கூறி அழுதாள்.

ஏழைகளுடைய துன்பத்தைப் போக்குவதில் எலிஷாவுக்குத் தனிப் பிரியம் உண்டு. ஆகவே அவர் அவளை நோக்கி, "ஏதேனும் ஒரு பொருளை விற்றுக் கடனைக் கொடுக்க முடியாதா? உன் வீட்டில் ஏதும் இல்லையா?" என்று கேட்டார்.

அவள் வருத்தத்துடன், "கடனை ஈடு செய்யக் கூடிய பொருள் எதுவும் என் வீட்டில் இல்லையே! ஒரு சிறு ஜாடியில் இருக்கும் எண்ணெயைத் தவிர வேறு ஒன்றும் இல்லை!" என்ருள்.

எலிஷா அவளைப் பார்த்து, "அம்மா! வருந்தாதே! நான் சொல்லுகிறபடி செய். உனக்குப் பழக்கமானவர்களுடைய வீடுகளுக்கெல்லாம் சென்று, எத்தனை பானைகளை இரவலாக வாங்கிவர முடியுமோ, அத்தனையும் வாங்கிக் கொண்டுவா. உன் சிறு ஜாடியிலிருக்கும் எண்ணெயை அவைகளில் ஊற்று" என்ருர்.

எலிஷாவின் கட்டளை விநோதமாகக் காணப் பட்டாலும், அந்த விதவைக்கு அவருடைய சக்தியில் அபார நம்பிக்கை யிருந்தமையால், அவர்

கட்டளைப்படி செய்ய எண்ணி, விரைவாக வீட்டுக்குச் சென்றாள். அவளும் அவளது இரு மக்களும் அந்தக் கிராமத்தில் தமக்குத் தெரிந்தவர்களுடைய வீடுகளுக்குச் சென்று பல ஜாடிகளையும் பானைகளையும் இரவல் வாங்கி வந்தார்கள். பிறகு அவள் எண்ணெய் இருந்த தன் ஜாடியை எடுத்து, வாங்கி வந்த பாண்டங்களில் ஒன்றில் ஊற்றத் தொடங்கினாள். தன் ஜாடி எண்ணெய் சீக்கிரமே தீர்ந்து போகுமென்று அவள் நினைத்தாள். ஆனால் என்ன ஆச்சரியம்! வாங்கி வந்த பானைகளும் ஜாடிகளும் ஒவ்வொன்றாக எண்ணெயால் நிரம்பிக்கொண்டிருந்தன. அவளுடைய ஜாடியில் எண்ணெய் குறையாமல் ஊற்றுப்போல் பெருகிக் கொண்டிருந்தது. எலிஷாவின் மகிமையையும் கடவுளின் அருளையும் வாழ்த்திக் கொண்டே பாத்திரங்களை எல்லாம் எண்ணெயால் நிறைத்தாள். கடைசிப் பாத்திரம் நிறைந்ததும் சிறு ஜாடி எண்ணெய் தீர்ந்தது.



அவள் எலிஷாவிடம் சென்று நடந்ததைக் கூறினாள். அவர், "அந்த எண்ணெய் முழுவதும் உன்னுடையது. அதை விற்று உன் கடனைக் கொடு. பிறகு உன் மக்களுடன் அமைதியாக வாழ்க்கையை நடத்து" என்றார்.

எலிஷாவை வணங்கின பிறகு அம்மாதரசி வீட்டுக்குச் சென்றாள். பாத்திரங்களிலிருந்த எண்

ணையை விற்றுக் கடனைத் தீர்த்தாள். கடன் தொல்லையிலிருந்து விடுபட்டதால், மகிழ்ச்சியுடன் தன் மக்களுடன் வாழ்ந்து வந்தாள்.

| | | |
|---|---|---|
| தீர்க்கதரிசி | மகிமை | அருள் |
| அனுக்கிரகம் | ஈடு | அமைதி |
| முக்காலம் | கைம்பெண் | தொல்லை |
| பலித்தன | தீர்ந்தது | இரவல் |
| தெய்வீகமான | இஸ்ரவேலர் | அபார |

## கேள்விகள்

1. எலிஷாவின் மகிமை என்ன?

2. கைம்பெண்ணுக்கு நேர்ந்த துன்பம் யாது?

3. கைம்பெண் எவ்வாறு தன் கஷ்டத்திலிருந்து விடுபட்டாள்?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி:

தெய்வீகமான, பலித்தது, தொல்லை.

2. உதாரணத்தில் கொடுக்கப்பட்டுள்ளதுபோல் பின் கண்ட வாக்கியங்களை மாற்றி எழுது.

(i) அவர் தெய்வீகமான காரியங்களைச் செய்தார்.

(ii) அவர்கள் ஜாடிகளை வாங்கி வந்தார்கள்.

[ **உதாரணம்:** அவன் மரத்தை வெட்டினன். மரம் அவனல் வெட்டப்பட்டது. ]



# 5. தேனீக்கள்

பகுத்தறிவில்லாத பிராணிகளின் வாழ்க்கையிலும், நாம் கண்டு அதிசயிக்கத்தக்க மதிநுட்பமான செயல்கள் காணப்படும். தேனீக்களின் மதிநுட்பமும், அலுவல்களும் வெகு விசித்திரமானவை.

தேனீக்கள் பூக்களை நாடிச் சென்று, அவற்றிலுள்ள தேனை நுகர்ந்து கொண்டு வந்து தம் கூட்டில் சேர்த்து வைக்கின்றன என்று நீங்கள் முன்னமே அறிவீர்கள். தேனீக்களின் வகைகளைப் பற்றியும், அவைகள் எவ்வாறு தத்தம் வேலைகளை வகுத்துக்கொண்டு செய்கின்றன என்பதைப் பற்றியும் இப்பாடத்தில் விளக்கப்படும்.

ஒரு கூட்டில் வசிக்கும் தேனீக்கள் மூன்று வகைப்படும். அவை இராணி ஈ, ஆண் ஈக்கள்,

வேலைக்கார ஈக்கள் என்பனவாம். ஒரு கூட்டில் ஒரே இராணி ஈ தான் உண்டு அதுவே அக் கூட்டத்தைச் சேர்ந்த மற்றெல்லா ஈக்களுக்கும் தலைமை வகிக்கும். ஒவ்வொரு கூட்டிலும் சில ஆண் ஈக்கள் தான் இருக்கும். வேலைக்கார ஈக்களின் தொகையே அதிகமாகும். இவை முட்டையிடும் சக்தியில்லாத பெண் ஈக்கள். வேலைக்கார ஈக்கள் வெகு தூரம் வெளியில் பறந்து சென்று, பூக்களினின்றும் தேனைத் தேடிக் கொணரும். அவை மற்ற வகை ஈக்களை விடச் சுறுசுறுப்பும், உழைப்பும் உடையவை. தேன் ஈட்டுதல் முதல் கூட்டைக் கட்டுதல், தேன் கூட்டைப் பாது காத்தல், தேனீப் புழுக்களைப் பராமரித்து வளர்த்தல் ஆகிய எல்லா வேலைகளையும் வேலைக்கார ஈக்களே செய்யும். மரக்கிளையிலுள்ள ஒரு தேன் கூட்டைப் பார்த்தால், அதைச் சுற்றிலும் எண்ணிறந்த ஈக்கள் மொய்த்துக் கொண்டிருக்கும். அவையெல்லாம் வேலைக்கார ஈக்களே. அவற்றிற்குக் கொடுக்குகள் உண்டு. கொடுக்கினால் அவை தம் கூட்டின் அருகில் வருபவர்களைக் கொட்டித் துரத்தும். இராணி ஈ ஒன்றே நூற்றுக்கணக்கான முட்டைகள் இடும். முட்டைகளிலிருந்து வெளிப்படும் தேனீப் புழுக்களை வேலைக்கார ஈக்கள் கவனமாக வளர்க்கும். அப்புழுக்களில் ஒன்றிரண்டு மட்டும் இராணி ஈயாக ஆகும்; மற்றவை யெல்லாம் ஆண் ஈக்களாகவும், வேலைக்கார ஈக்களாகவும் ஆகும்.

ஆண் ஈக்கள் என்பன சோம்பேறி ஈக்கள்; அவை ஒரு வேலையும் செய்யாமையால் அப்பெயர் பெற்றன. வேலைக்கார ஈக்கள் சேகரித்து வைக்

கும் தேனில் ஒரு பாகத்தை ஆண் ஈக்கள் உண்டு வாழும். கூட்டில் தேன் நிரம்ப இல்லாத சமயங்களில், அவைகளை வேலைக்கார ஈக்கள் வெளியே துரத்துவதும் உண்டு. ஆண் ஈக்களுக்குக் கொடுக்குகள் இல்லை.

தேனீக்கள் இயற்கையாகக் கட்டும் தேன்கூடு மெழுகினால் ஆக்கப்படும். அம்மெழுகு அவற்றின் உடலிலிருந்தே உண்டாகிறது. தேன் கூட்டில் பல சிறு அறைகள் அமைக்கப்பட்டிருக்கும். கூட்டின் அடிப்புறத்தில் பெரிய அறையில் தான் இராணி ஈ வசிக்கும். வேலைக்கார ஈக்கள் தாம் சேகரிக்கும் மதுவைச் சிறு அறைகளில் நிரப்பி வைக்கும்.

தேன் ஓர் இனிய பொருள். அது உணவாகவும், மருந்துப்பொருளாகவும் பயன்படுகிறது. பல அரிய ஔஷதங்களுக்குத் தேன் இன்றியமையாததாகும். காடுகளில் வாழும் வேடர்கள், புகை போட்டு, ஈக்களை விரட்டி விட்டு அவற்றின் கூடுகளைப் பிழிந்து தேன் எடுப்பார்கள்.

இக்காலத்தில் செயற்கை முறையிலும் தேன் சேகரிக்கப்படுகிறது. மரச் சட்டங்களினால் ஒரு வகைத் தேன்கூடு செய்யப்படுகிறது. அக்கூட்டின் மேற்புறத்திலும், நாற்புறங்களிலும் பலகைகள் அடைக்கப்பட்டு ஒரு பெட்டி போல் இருக்கும். அப்பெட்டியில் ஈக்கள் உட்புகவும், வெளிவரவும் வட்டமான துவாரங்கள் விடப்பட்டிருக்கும். அக்கூட்டை ஓரிடத்தில் தொங்கவிட்டு, உட்புறத்தில் உள்ள சட்டங்களில் மெழுகையும் தடவி, ஒரு இராணி ஈயையும், பல ஆண், பெண் ஈக்களையும்

அதனுள் புக விடுவார்கள். பிறகு இயற்கையாகவே அவைகள் தம் வேலையைத் தொடங்கும். சட்டங் களில் தேன் நிரம்பியதும், தேனீக்களுக்குச் சேதம் விளைவிக்காமலே தேனை எடுத்துக் கொள் வார்கள்.

தேனீ வளர்த்தல் ஒரு துணைத்தொழில். அதை யாவரும் தம் வீட்டில் இருந்தபடியே செய்யலாம்.

| | | |
|---|---|---|
| பகுத்தறிவு | அதிசயிக்கத்தக்க | ஔஷதம் |
| மதிநுட்பம் | விசித்திரமானவை | சேதம் |
| நுகர்ந்து | வகுத்துக்கொண்டு | துணைத்தொழில் |
| கொணரும் | பராமரித்து | தூரத்து |
| ஈட்டுதல் | மொய்த்து | கொடுக்கு |

## கேள்விகள்

1. தேனீக்களின் மூன்று வகைகளைக் கூறு:
2. இராணி ஈயின் வேலை என்ன?
3. வேலைக்கார ஈக்கள் செய்யும் வேலைகளை எழுது.
4. தேனின் உபயோகங்களைக் கூறு.
5. தேனீ வளர்த்தலைப் பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுது.

## பயிற்சி

1. பொருள் கூறு:

   மதிநுட்பம், ஈட்டுதல், பராமரித்து.

2. சொந்த வாக்கியங்களில் உபயோகி:

   தூரத்து, பராமரி, ஈட்டு.

3. பின்வரும் வாக்கியங்களில் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் கூறு:

   (i) மாணவர் பாடங்களைப் படிக்கிறார்கள்.
   (ii) வேடர்கள் தேன் எடுப்பார்கள்.
   (iii) நாங்கள் உணவு அருந்துகிறோம்.



## 6. வீரமா முனிவர்

வீரமா முனிவர் என்பவர் இத்தாலிய தேசத்தைச் சேர்ந்தவர். அவருடைய சொந்தப் பெயர் ஜோசப் பெஸ்கி என்பது. அவர் கிறிஸ்தவ சமயத்தினர். தம்முடைய மதத்தில் நம்பிக்கையும் பற்றும் உடையவர். கிறிஸ்தவ மார்க்கத்தை உலகமெங்கும் பரவச் செய்ய வேண்டுமென்பது அவருடைய அவா. சமயப் பிரசாரம் செய்வதில் அவர் தைரியமும் ஆற்றலும் உடையவர்; ஆகையால் அறிஞர்கள் அவருக்குத் தைரியநாதர் என்ற பெயரை வழங்கினார்கள்.

சுமார் இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னே, அவர் இந்தியாவில் கோவா நகருக்கு வந்தார். அப்போது அவருக்கு வயது இருபத்தாறு.

பிறகு அவர் திருநெல்வேலி ஜில்லாவிற்குச்சென்றார்; அங்கே தமிழருடன் பழகித் தமிழைப் பேசவும், எழுதவும் கற்றுக்கொண்டார். தேனினும் இனிய தமிழ்ச் சுவை அவர் மனத்தைக் கவர்ந்தது. சாதாரணமாக எழுதப் படிக்கத் தெரிந்து கொண்டதோடு அமையாமல், அவர் தமிழ் நூல்களையும் கற்கத் தொடங்கினர். ஊக்கமுடையோர்க்கு மலையைக் குடைவதும் எளிதாகத் தோன்றுமல்லவா? அன்னிய நாட்டாராகிய அவர் ஆர்வமும், முயற்சியும் கொண்டு கற்றதால் தமிழில் சிறந்த புலமை பெற்றார். தமிழில் பிரசங்கம் செய்யவும், நூல்கள் இயற்றவும் தொடங்கினர். தேம்பாவணி என்னும் ஓர் அரிய காவியம் அவரால் இயற்றப்பட்டது. அவருடைய தூய்மையும், அறிவும் தமிழ் நாட்டினரால் போற்றப்பட்டன. தமிழர்கள் அவரை வீரமா முனிவர் என்று அழைத்தார்கள்.

வீரமா முனிவரின் இனிய சொற்பொழிவுகளில் தமிழ் மக்கள் வயமானர்கள். அவருடைய சமயப் பிரசாரங்களைக் கேட்டுப் பல தமிழ் மக்களும் அச் சமயத்தைத் தழுவினர்.

அன்புடையவர்கள் எல்லாராலும் நேசிக்கப்படுவார்களன்றோ? வீரமா முனிவரிடம், அக்காலத்திலிருந்த ஆற்காட்டு நவாபு அன்பும் மதிப்பும் கொண்டிருந்தார். முனிவர், அரசியல் காரியங்களில் நவாபுக்குத் துணைவராக விளங்கி வந்தார். அவருடைய புத்திக் கூர்மையையும், தகுதியையும் கண்டு மகிழ்ந்த சந்தா சாகிப் என்னும் நவாபு அவருக்குப் பல கிராமங்களை இனமாக வழங்கினர். கல்வியின் பொருட்டாகவும், சமயத்தின் பொருட்டாகவும், வீரமா

*முனிவர் தம்முடைய வாழ்நாளெல்லாம் தமிழ் நாட்டிலேயே கழித்தார். தமது இறுதிக் காலத்தில் அவர் மணப்பாறையில் வாழ்ந்தார். 1740-ஆம் ஆண்டில் அவர் பரகதி அடைந்தார். அப்போது அவருக்கு வயது அறுபது.*

*வீரமா முனிவர் தமிழின் மலர்ச்சிக்குச் செய்த தொண்டுகள் பல. தேம்பாவணியைத் தவிர தொன்னூல் என்ற இலக்கண நூலையும், சதுரக ராதி என்ற ஓர் அகராதி நூலையும் அவர் இயற்றினார். மேல் நாட்டினராகிய வீரமா முனிவரின் தமிழ்த் தொண்டைத் தமிழுலகம் எக்காலத்தும் போற்றுதல் உறுதி.*

| | | |
|---|---|---|
| சமயம் | பிரசாரம் | வயமானார்கள் |
| மார்க்கம் | அமையாமல் | துணைவராக |
| பற்று | இலக்கணம் | இனமாக |
| கவர்ந்தது | அகராதி | பரகதி |

கேள்விகள்

1. *வீரமா முனிவர் எந்த நாட்டினர்? அவர் இந்தியாவிற்கு எதற்காக வந்தார்?*
2. *தமிழில் அவர் இயற்றிய நூல்கள் யாவை?*
3. *அவருக்கு யாரால் இனம் கிராமங்கள் வழங்கப் பட்டன? எதற்காக வழங்கப்பட்டன?*

பயிற்சி

1. *கீழ்க்கண்ட வாக்கியங்களைக் கவனித்துப்படி:*
   (i) *ஆசிரியர் பாடம் கற்பிக்கிறார்.*
   (ii) *கோபாலன் வந்தானா?*
   (iii) *இந்த மரம் எத்துணை உயரம்!*

இவற்றில் முதல் வாக்கியம் 'ஆசிரியர் கற்பிக்கிறார்' என்ற விஷயத்தைக் கூறுகிறது. அதன் முடிவில் முற்றுப்புள்ளி (.) இடப்பட்டிருக்கிறது.

இரண்டாம் வாக்கியம் ஒரு வினா. விடையை எதிர் பார்த்து நிற்கிறது இவ்வாக்கியம். இதன் முடிவில் வினாக்குறி (?) இடப்பட்டிருக்கிறது. மூன்றாம் வாக்கியம் வியப்பு அல்லது அதிசயத்தைக் காட்டுகிறது. அதன் முடிவில் வியப்புக்குறி (!) இடப்பட்டுள்ளது.

இந்த மூன்று நிறுத்துக் குறிகளின் உபயோகத்தையும் கவனித்து அறிந்துகொள்.

2. பின் உள்ள வாக்கியங்களில் ஏற்ற நிறுத்துக் குறிகளை அமைத்து எழுது:

கேசவன் பேசினான் கேசவன் எப்பொழுது பேசினான் நான் வரமாட்டேன் உன்னையார் அழைத்தார்கள் வேடரும் அஞ்சும் காடல்லவா இது.



## 7. தமிழ் வளர்ச்சி

எளிய நடையில் தமிழ் நூல் எழுதிடவும் வேண்டும்.
இலக்கண நூல் புதிதாக இயற்றுதலும் வேண்டும்.
வெளியுலகில், சிந்தனையில் புதிது புதிதாக
விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்களெல்லாம் கண்டு,
தெளியுறுத்தும் படங்களோடு சுவடியெலாம் செய்து,
செந்தமிழைச் செழுந்தமிழாச் செய்வதுவும் வேண்டும்.
எளிமையினால் ஒரு தமிழன் படிப்பில்லை யென்றால்
இங்குள்ளோர் எல்லோரும் நாணிடவும் வேண்டும்.

— பாரதி தாசன்

| | | |
|---|---|---|
| இயற்றுதல் | சிந்தனை | செந்தமிழ் |
| வெளியுலகு | சுவடி | செழுந்தமிழ் |
| விளைந்துள்ள | தெளிவுறுத்தும் | நாணிட |

கேள்வி

*தமிழ் முன்னேற்றம் அடைவதற்குச் செய்ய வேண்டுவன யாவை?*

# 8. சந்தன மரம்

*திருமணக் காலங்களில் விருந்தினர்களுக்குச் சந்தனம் வழங்குதல் நம் நாட்டில் ஒரு மரியாதையாகக் கொள்ளப்படுகிறது. சுப காரியங்கள் எல்லாவற்றிலும் சந்தனமே முன் வருகிறது. சந்தனத்தின் நறுமணம் யாவரும் விரும்பத் தக்கது. சந்தனம் நமது உடலின் வெப்பத்தைத் தணித்துக் குளிர்ச்சியை அளிக்கின்றது. கோடை காலங்களில் மக்கள் வாசனை கலந்த சந்தனத்தைத் தம் உடம்பின் மீது பூசி மகிழ்வர். இவ்வாறு நமக்கு மிகுதியும் உபயோகப்படுகின்ற நறுமணப் பொருளாகிய சந்தனம் நமக்கு எவ்வாறு கிடைக்கின்றது என்பதை அறியவேண்டுமல்லவா?*



*சந்தனம் என்பது ஒரு வகை மரம். அம்மரம் பொதுவாக எல்லா இடங்களிலும் காணப்படுவ*

தில்லை. மலைப் பிரதேசங்களில் சந்தன மரம் பயி ராக்கப்படும்; ஆகையால் அது மலைபடு பொருள் களுள் ஒன்றாகும். தென்னிந்தியாவில், மைசூர் இராஜ்யத்தில் சந்தன மரங்கள் விசேஷமாகப் பயிராகின்றன; மைசூர்ச் சந்தனமே இந்நாட்டில் உயர்ந்தது எனக் கொள்ளப்படுகிறது. திருநெல் வேலி, சேலம், திருச்சிராப்பள்ளி ஆகிய ஜில்லாக் களைச் சேர்ந்த மலைப் பிரதேசங்களிலும் சந்தன மரம் பயிராக்கப்படுகிறது.

சந்தன மரம் பார்வைக்கு ஏறக்குறைய கொய் யாமரத்தை ஒத்திருக்கும். அதுசுமார் ஐந்தாறு அடிச் சுற்றளவு உடையதாய், ஐம்பதடி உயரம் வளரும். அம்மரத்தின் இலைகள் கூரிய நுனியுடையவையாயும், அகலமாகவும், தனித்தனியாகவும், பசுமையாகவும் இருக்கும். கிளைகளின் நுனியில், இலைகளை யடுத்து, மலர்கள் கொத்துக் கொத்தாக மலரும். அதன் காய்களும், கனிகளும் நாவற் கனிகளை ஒத்திருக்கும்.

இம்மரம் நன்கு வளர்ச்சி யடைந்து, மணம் பெறுவதற்கு முப்பது ஆண்டுகள் ஆகும். மரத்தின் அடிப்பாகம் சிறிது வெண்மை கலந்த பொன்னிற மாகவும், மேற்பாகமும் கிளைகளும் முழுவெண்மை யாகவும் இருக்கும். இம்மரத்தை மிகவும் கருத்துடன் பயிர் செய்து பாதுகாப்பார்கள். சந்தன விதைகள் ஏறக்குறைய மிளகினளவு இருக்கும். பயிர் செய் வோர் அவ்விதைகளை நன்றாக உலரவைத்தெடுத் துக் குழிக்கு இரண்டாக அநேக குழிகளில் ஊன்றி, அக்குழிகளை மண்ணால் மூடி வைப்பார்கள். மழை பெய்து, பூமி ஊறியுள்ள சமயமே சந்தனவிதைகளை

ஊன்றுவதற்கு ஏற்ற பருவம். ஒரு மாதத்திற்குள், அவ்விதைகளிலிருந்து முளைகள் தோன்றும்; அவற்றின் மேல் வெயில் அதிகமாகப் பட்டால் அவைகள் காய்ந்துபோகும். ஆகையால் அவைகளைத் தழைகளால் மூடி வைப்பார்கள். முளைகளுக்குக் காப்பாகச் சுற்றிலும் முள் வேலியும் இடப்படும். அம்முளைகள் செடியாகும் வரையில், இவ்வாறு அவற்றை வெகு கருத்துடன் வளர்க்க வேண்டும். செடிகள் தழைத்து, மரங்களாக உருவடைவதற்கு இருபது வருஷங்கள் ஆகும். பிறகு அம்மரங்களின் அடிப்பாகத்தில், சிறிது சிறிதாக வயிரம் பிடித்து முதிர்ச்சி யடைவதற்குப் பின்னுமோர் பத்தாண்டுகள் ஆகும்.

முற்றின அடிமரத்தின் கட்டைகளே நாம் அரைத்துப் பூசிக்கொள்வன ஆகும். மரத்தின் மேற்பாகமும், கிளைகளும் பெரும்பாலும் எரிப்பதற்கே உதவும். குளிக்கும் போது சந்தனத் தூளையும், சந்தன சோப்பையும் நாம் தேய்த்துக் கொள்கிறோம். சரும வியாதிகளைப் போக்கி, சருமத்திற்கு மென்மையும், நறுமணமும் அளிக்கக்கூடியது சந்தனம். சந்தனத்தூளைநெருப்பிலிட்டு, அதினின்று எழும் புகையில், மாதர்கள் தம் கூந்தலை உலர்த்திக் கொள்வது நம் நாட்டின் பண்டைய வழக்கம். முதிர்ந்த சந்தனக் கட்டைகளிலிருந்து



அத்தரும், தைலமும் செய்யப்படுகின்றன. சந்தனா தித்தைலம் என்பது ஸ்நானத் தைலங்களுள் ஒன்று; அது மூளைக்கும், கண்களுக்கும் நல்ல குளிர்ச்சியைக் கொடுக்கும். மருந்துகளிலும் சந்தனம் சேர்க்கப் படுவதுண்டு. சந்தனக் கட்டையிலிருந்து சீப்புகள், உருவங்கள் முதலியன மிக்க நேர்த்தியாகச் செய்யப் படும்.

சந்தனக் கட்டைகள் மிகுந்த விலை மதிப் புடையவை; அவை நிறுத்து விற்கப்படும். உயர்ந்த கட்டைகள் வீசை ஒன்றுக்குப் பத்து ரூபாய் விலை பெறும். மைசூர் அரசாங்கத்தார் சந்தன மரங் களைத் தாமே பயிர் செய்து வருகிறார்கள்.

| | | |
|---|---|---|
| திருமணம் | சுபகாரியம் | மலைபடுபொருள் |
| விருந்தினர் | மரியாதை | மலைப்பிரதேசம் |
| தணித்து | நறுமணம் | முழுவளர்ச்சி |
| ஒத்திருக்கும் | சுற்றளவு | பொன்னிறமாக |
| ஊன்றி | வயிரம் | ஏற்றபருவம் |
| மென்மை | சோப்பு | விலைமதிப்பு |

## கேள்விகள்

1. சந்தனம் எவ்வெவ் வகைகளில் உபயோகிக்கப் படுகிறது?

2. தென்னிந்தியாவில் சந்தன மரம் எங்கெங்கே பயிராகிறது? எங்கே அது விசேஷமாகப் பயிராகிறது?

3. சந்தன மரத்தைப் பயிர் செய்யும் முறையைக் கூறுக.

## பயிற்சி

1. கோடிட்ட இடங்களில் தகுந்த வார்த்தைகளை நிரப்பு:

(i) சந்தனத்தின் ——— யாவரும் விரும்பத்தக்கது.

(ii) சந்தன மரம் ஏறக்குறைய———ஒத்திருக்கும்.

2. சொந்த வாக்கியங்களில் உபயோகி:

ஒத்திரு, பூசு, முதிர்ச்சி.

3. தம்பி, மகன், மக்கள், இந்திரன், திருமால், சிவபிரான் — இச்சொற்கள் மனிதர் அல்லது தேவர்களின் பெயர்கள். இவை உயர்திணைப் பெயர்கள் எனப்படும்.

மரம், கல், பாம்பு, மாடு, பறவை—இவை மனிதர்களும் தேவர்களுமல்லாத பிற பொருள்களின் பெயர்களைக் குறிக்கின்றன. இவை அஃறிணைப் பெயர்கள் எனப்படும்.

4. பின் வரும் பெயர்ச் சொற்களுக்குத் திணை கூறு:
நதி, பிரமன், பொன், பசு, ஜனங்கள், கந்தன், மரங்கள்.



# 9. கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரனார்

பல வளங்களும் நிரம்பப் பெற்ற பாண்டிய நாட்டின் கண் ஒரு பழம் பெருங் குடியில் 1870-ம் ஆண்டில் வ. உ. சிதம்பரம் பிள்ளை என்னும் வீரர் பிறந்தார். அவருடைய தகப்பனார் உலகநாதப் பிள்ளை; தாயார் பெயர் பிரமாயி அம்மை.

அவர் தம் இளம் வயதில் தமிழும் ஆங்கிலமும் கற்றுத் தேர்ந்தார்; தம்முடைய இருபத்தெட்டாவது ஆண்டில் தூத்துக்குடியை அடைந்து அங்கு வழக்கறிஞர் பணியை மேற்கொண்டார்; நேர்மையும் திறமையும் அமைந்து அப்பணியில் பல ஆண்டுகள் சிறப்புடன் விளங்கினார்.

வழக்கறிஞர் பணியில் பொருளை ஈட்டிக் கொண்டு சுயநலத் தேவைகளைப் பூர்த்தி செய்வதுடன் திருப்தியாக வாழ்வதற்குச் சிதம்பரனார் விரும்பவில்லை. அவர் நாட்டுத் தொண்டில் ஆர்வங் கொண்டார். 'பிறவியின் நோக்கம், தாய் நாட்டிற்கு உழைத்தல்' என்ற கொள்கையைச் சிரமேற்

கொண்டார். நாட்டின் நன்மைக்கும் முன்னேற்றத்திற்கும் போராடுபவர்கள் உயிர் துறப்பினும் நற்கதியே எய்துவர் என்ற நம்பிக்கை கொண்டார்.

1907-ம் ஆண்டில், சுய ராஜ்யக் கிளர்ச்சிப் போரில் திலகர் பெருமான் தலைமை தாங்கினர்; அவருடைய வழியைச் சார்ந்து சிதம்பரனரும் தென்னாட்டில் தேசீய இயக்கத்தைத் தொடங்கினர். அவருடைய மனவுறுதியையும் நேர்மையையும், சொல்லாற்றலையும் கண்டு மகிழ்ந்து நாட்டு மக்கள் பெரும்பான்மையோர் அவரைப் போற்றினர்கள். சுப்பிரமணிய சிவா என்ற தேச பக்தரும் சிதம்பரனரின் துணைவரானர். அவ்விருவரும் பொதுக் கூட்டங்களில் பேசுகிறார்களென்றால், மக்கள் கடல் போலக் குழுமுவர். அவர்களுடைய வீர கர்ஜனை மக்களகத்தில் உணர்ச்சி வேகத்தை எழுப்பும்.

சிதம்பரனரிடம் விளங்கிய பண்புகள் பல. அவர் எல்லா வசதிகளையும் பொருந்தப் பெற்றவராயிருந்தும், எளிமையை நேசித்தார்; செருக்கும் சினமும் அவர்பால் காணப்படா. எல்லோரும் சமம் என்னும் சீரிய நோக்கம் உடையவர் அவர்; வஞ்சகங்களை அஞ்சாமல் களையும் மாண்பும், உண்மைக்கு உழைக்கும் பண்பும் பொருந்தியவர்.

இவ்வாறாகத் தமிழரின் உறுதிக்கு ஓர் எடுத்துக் காட்டாக வாழ்ந்த சிதம்பரனர் 1906-ம் ஆண்டில், தேசீய கப்பற் சங்கம் ஒன்றை இந்தியரின் மூலதனத்தைக்கொண்டே ஏற்படுத்தினர். 'பிரிட்டிஷ் இந்திய ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி' என்ற கூட்டுறவு யார்த்தக சங்கத்தார் சிங்களத்திற்கும், தூத்துக்குடிக்கும் வர்த்தகக் கப்பல்களைச் செலுத்தி

வந்தார்கள். அச்சங்கத்திற்கு இந்தியர்கள் ஏராள மான மூலதனம் கொடுத்திருந்தார்கள் என்றாலும், ஆங்கிலேயரே கொள்ளை லாபங்களை அனுபவித்து வந்தார்கள். சிதம்பரனார் நாட்டின் பல பகுதி களுக்கும் சென்று தேசீய கப்பற் சங்கத்திற்குப் பொருள் திரட்டினார். "பொழுதெல்லாம் எங்கள் செல்வம் கொள்ளை கொண்டு போகவோ நாங்கள் சாகவோ, அழுது கொண்டிருப்போமோ, ஆண் பிள்ளைகள் நாங்கள் அல்லமோ, உயிர் வெல்லமோ?" என்று கர்ஜித்தார். தம் முயற்சியில் அந்நியரால் விளைவிக்கப்பட்ட இன்னல்கள் பலவற்றையும் சகித்துக்கொண்டு, சிறிது காலம் தேசீயக் கொடி யுடன் கப்பல் ஓட்டினார்.

தரும நெசவுசாலையும், தேசீயப் பண்டகசாலை யும் அவரால் ஏற்படுத்தப்பட்டன. அந்நிய நாட்டுப் பொருள்களைப் பகிஷ்கரித்து, இந்தியப் பொருள் களையே ஆதரிக்கவேண்டும் என்னும் கொள்கையை அவர் எங்கும் பரப்பினார்.

தியாக புருஷர்களுக்குச் சோதனை காலம் என்பது இயல்பு அல்லவா! 1908-ம் ஆண்டு அவர் ஆங்கில அரசாங்கத்தாரால் சிறை செய்யப்பட்டார். நான்காண்டுகள் சிறைவாசத்தில் அவர் அடைந்த கொடுமைகள் பல. கொலையும் களவும் ஆகிய கொடுஞ் செயல்களைச் செய்து சிறைபுக்க கைதிக ளின் வரிசையில் சிதம்பரனார் வைக்கப்பட்டார். கேப்பைக் கூழ் உண்டும், செக்கிழுத்தும், விலங்கு பூட்டப் பெற்றும், மற்றும் பலவாறும் அவர் நமக்கா கப் பட்ட பாடுகள் மிகப் பல. அவ்வளவு பாடுபட்டும் சிதம்பரனார் மனம் சலித்தாரா? உறுதி குன்றினாரா?

சிறைச்சாலையைத் தவச்சாலையாக் கருதினர்; ஓய்வுப்பொழுதைச் சிந்தனைப் பொழுதாகக் கழித்தார்; மனம் போல் வாழ்வு என்ற ஓர் அரிய நூலைச் சிறையில் இருந்தபோது எழுதினர்.

1912-ஆம் ஆண்டில் சிதம்பரனர் சிறையினின்றும் விடுவிக்கப்பட்டார். அவர் தம் வக்கீல் தொழிலையும் தேசீயத் தொண்டு காரணத்தால் இழக்க நேர்ந்தது. அதனல் அவர் தம் வாழ்க்கையைச் செம்மையாக நடத்த முடியவில்லை; எனினும் தேசத் தொண்டில் அவர் தம் ஆர்வத்தை விடவில்லை. 1920-ஆம் ஆண்டில் கல்கத்தாவில் கூடிய காங்கிரஸ் மகா சபைக்குச் சிதம்பரனரும் ஓர் பிரதிநிதியாகச் சென்ருர். அச்சபையில் அரசாங்க சட்டசபை, நிர்வாக சபை ஆகிய இடங்களில் பணி செய்வதில்லை என்ற ஒத்துழையாமை இயக்கம் நிறைவேறியது. ஒத்துழையாமை இயக்கம் பயன் அளிக்காது என்றும், கூடிக் கொல்ல வேண்டும் என்றும் சிதம்பரனர் வாதாடினர். பெரும்பான்மை ஆதரவு இன்மையால் அவருடைய வாதம் தோல்வியுற்றது. 1936-ம் ஆண்டில் சிதம்பரனர் நோய் வாய்ப்பட்டு உயிர் துறந்தார்; பின் நிகழ்ச்சியையும் வெற்றிகளையும் அவர் காணக் கூடாமற் போயிற்று. எனினும், அவருடைய நோக்கமே பிற்காலத்தில் தேச பக்தர்களால் கையாளப்பெற்றது; 1920-இல் சிதம்பரனர் கண்ட கனவே, 1947 ஆகஸ்டு 15-இல் நனவாக நிறைவேறியது.

நாட்டின் பொருட்டுப் பல தியாகங்கள் செய்து, தம் வாழ்நாள் முழுமையும் பாடுபட்ட தமிழர்களுள் சிதம்பரனர் முதல் வரிசையில் எண்ணப்படுவர்.

'கப்பலோட்டிய தமிழன்' என்பது அவருக்குச் சிறப்புப் பெயராய் வழங்கலாயிற்று. அவருடைய ஞாபகம் நம் நாட்டில் என்றும் நின்று நிலவும்.

| | | |
|---|---|---|
| பெருங்குடி | பண்டகசாலை | உணர்ச்சி வேகம் |
| வழக்கறிஞர் | பகிஷ்கரித்து | எடுத்துக்காட்டு |
| பெருமான் | சிரமேற்கொண்டார் | கொள்ளை லாபம் |
| குழுமுவர் | போராடுவார் | தேசீய இயக்கம் |

## கேள்விகள்

1. வ. உ. சிதம்பரனார்பால் விளங்கிய பண்புகள் யாவை?

2. தேசீய இயக்கத்தின் நோக்கங்கள் யாவை?

3. 'கப்பல் ஓட்டிய தமிழர்' என்ற பெயர் சிதம்பரனாருக்கு ஏன் ஏற்பட்டது?

## பயிற்சி

1. பொருள் கூறு: பெருங்குடி, குழுமுவர், எடுத்துக்காட்டு, வழக்கறிஞர்.

2. எதிர்ப்பதங்கள் சொல்லு.
நிரம்ப, முற்போக்கு, நற்கதி.

3. அண்ணன், பெருமான், தேவர்கள், மகள், மங்கை, சிறுமிகள், மக்கள் — இவை எல்லாம் உயர் திணைப் பெயர்கள். இவற்றில் அண்ணன், பெருமான் என்ற இரண்டு சொற்களும் ஓர் ஆணைக் குறிக்கின்றன. இவை ஆண்பால் சொற்கள் என்று சொல்லப்படும். மகள், மங்கை என்ற இரண்டு சொற்களும் ஒரு பெண்ணைக் குறிப்பதால் பெண்பால் எனப்படும். தேவர்கள், சிறுமிகள், மக்கள்—இவை பலரைக் குறிப்பதால், பலர்பால் எனப்படும். உயர்திணைச் சொற்களுக்குத்தான் இந்த மூன்று பாகுபாடுகள் உண்டு.



# 10. ஆகாய விமானம்

கப்பல் என்றுமே—மெல்லக்,
கடலில் நீந்துவதாம்!
தப்பித் தப்பியே—ரயிலும்
தரையில் ஊருவதாம்!

வானமீதெழுவேன்—அங்கே
வட்டம் சுற்றிடுவேன்!
கானம் மலையெல்லாம்—யானோர்
கணத்தில் தாண்டிடுவேன்.

இடைவிடாது தபால்—உலகில்
எங்கும் கொண்டு செல்வேன்;
சடைவிலாமலே—பலரைத்
தாங்கியும் போவேன்.

நன்மை செய்ய வந்தேன்—அதை
　　நன்குணராமல்
வன்மைப் போரில் எனை—இழுத்து
　　மாட்டி விட்டாரையோ!

தீவினை செய்ய—என்னைத்
　　தினமும் ஏவுகிறார்;
பூவுலக மெல்லாம்—சுட்டுப்
　　பொசுக்கச் சொல்லுகிறார்.

அன்பைக் கொன்று விட்டார்—மனிதர்
　　அரக்கராகி விட்டார்;
துன்பம் செய்திடவே—இன்று
　　துணிந்திறங்கி விட்டார்.

சாந்த மூர்த்தியின்—அஹிம்சா
　　தருமம் மேற்கொண்டு,
மாந்தர் இவ்வுலகில்—நன்றாய்
　　வாழ்வதெந் நாளோ?

தேசிக விநாயகம் பிள்ளை

| | |
|---|---|
| கணம் | மாட்டிவிடுதல் |
| சடைவு | அரக்கர் |

## கேள்விகள்

1. ஆகாய விமானத்தின் உபயோகங்களைச் சொல்லு.

2. ஆகாய விமானத்தை எந்தத் தீய காரியங்களுக்கு மனிதர் உபயோகிக்கின்றனர்?



## 11. கல்வி வளர்ச்சி

"எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்" என்றார் ஔவையார். "கல்வி நலனே கலனல்லால் மற்றோர் அணிகலன் வேண்டாவாம்" என்பர் புலவர். மக்களாய்ப் பிறந்தவர்களுக்கு உயிர் வாழ்வை அளிப்பது கல்வி. விலங்குகள் உண்கின்றன, உறங்குகின்றன. மக்களும் உண்பதும் உறங்குவதுமாகக் காலத்தைக் கழித்தால், அவர்கள் மாக்களையே போல்வர்.

"எக்குடிப் பிறப்பினும் யாவரேயாயினும், அக்குடியிற் கற்றோரை வருக வென்பர்" எனவும், "கல்லா வொருவன் குல நலம் பேசுதல் நெல்லினுட் பிறந்த பதராகும்மே" எனவும் நீங்கள் படித்திருக்கிறீர்கள். "அறிவுடை யொருவனை அரசனும்

விரும்பும்". கற்றோர்களையுடைய நாடு உலகத்தில் மேன்மையுடையதாக விளங்கும்.

கல்வியாராய்ச்சியாலேயே, மேனாட்டார் எந்திரச் சாதனங்களையும், கப்பல்களையும், வானவூர்திகளையும், மின்சாரத்தின் எண்ணிறந்த பயன்களையும், சிறந்த போர்க் கருவிகளையும் கண்டுபிடிக்க முடிந்தது. சுமார் அரை நூற்றாண்டில், ஜப்பானியர் மேனாட்டருடன், ஓரணியில் நின்றார்கள்; அதற்குக் காரணம் அவர்களுடைய கல்வியறிவே. சமூக வளர்ச்சி, சமய முன்னேற்றம் இவற்றிற்கும் கல்வியறிவே அடிப்படையான சாதனம்.

மிகப் பழமையான காலத்தில் வாழ்ந்து வந்த நம் முன்னோர்கள் கல்வியாராய்ச்சியில் முதன்மையாக விளங்கினார்கள். பல கலைகளிலும் எண்ணிறந்த நூல்களை அவர்கள் எழுதி வைத்த சாஸ்திரங்கள் பெரும்பாலன இப்போது இருக்கின்ற இடம் புலப்படவில்லை. கிடைக்கப் பெறும் நூல்களையும் ஆராய்ச்சி செய்கின்றவர்கள் இல்லை என்றே சொல்லவேண்டும். அப் பழம் பெருமைகளை யெல்லாம் வறிதே பேசுவதால், நாம் முன்னேற்றமடைய முடியாது. இடைக் காலத்தில் நம் நாட்டின் கல்வி நிலை சீர் குலைந்து விட்டது. பாமர மக்களின் எண்ணிக்கையே மலிந்திருக்கிறது. இக்குறையை நாம் ஒழிப்பது எங்ஙனம்?

கல்வித் துறையில் மூலாதாரக் கல்வி, நடுத்தரக் கல்வி, உயர்தரக் கல்வி என்று மூன்று படிகள் உண்டு. மூலாதாரக் கல்வியை ஒவ்வொரு பிள்ளைக்கும் கட்டாயமாக அளிக்கவேண்டும். நடுத்தரக் கல்வியும் பெரும்பான்மையோர் கற்பது நன்மையாகும். பொருளாதாரமும், மற்ற வசதிகளும்

உடையவர்கள் கல்லூரிக் கல்வியும் பயின்று, ஆராய்ச்சிகள் செய்து கலை நூல்களைப் பெருக்க வேண்டும். நடுத்தரக் கல்வியில் புத்தகப் படிப்பைப் படிக்கும்போதே, ஏதேனும் ஒரு தொழிலிலும் பயிற்சியைப் பெற வேண்டும். நல்லொழுக்கமும், சமூக உறவும் பள்ளிப் பழக்கத்திலே படிய வேண்டும். பள்ளிப் பருவம் முடிந்து, வெளியேறியதும் ஏதேனும் ஒரு தொழில் செய்யும் தகுதியைப் பெற்றிருக்க வேண்டும்.

கிராமங்களில் முதியோர்களுக்கும் கல்வியறிவு உண்டாக வேண்டும். வயதானவர்கள் எத்தனையோ பேர் கையெழுத்துப் போடவும் அறியாமல் இருக்கிறார்கள். முதியோர் கல்விச் சாலைகள் கிராமங்கள் தோறும் இருக்கவேண்டும். எழுத்து வாசனை அறியாதவர்கள், இரவில் ஒரு மணி நேரமாவது அப் பள்ளிக்கூடங்களில் கல்வி கற்றுக் கொள்ளலாம். கடிதம் எழுதப் படிக்கவும், பத்திரிகைகள் வாசிக்கவும் போதிய அளவாவது ஒவ்வொருவரும் படித்துக் கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு கிராமத்திலும் பொது வாசகசாலைகள் அமையவேண்டும். ஒவ்வொருவரும் தலைக்கட்டு வரியைக் கொடுத்து வாசகசாலையை நடத்த வேண்டும். ஓய்வு நேரங்களில் எல்லோரும் சிறிது நேரம் பத்திரிகைகளைப் படிப்பதும்,படித்தவர்கள் மற்றவர்களுக்கு நிகழ்ச்சிகளை எடுத்துச் சொல்வதும் வேண்டும். ஊர் நிகழ்ச்சிகளையும், உலக விஷயங்களையும், அரசியல் செய்திகளையும் தெரிந்து கொள்வதே தற்காலத்தில் அறிவை வளர்க்கும்.

வாசக சாலைகளுடன், நூல் நிலையங்களும் இணைக்கப்படுவது நன்மையாகும். பெரிய கிராமங்களில் புத்தக சாலைகள் கட்டாயமாக அமைக்கப்பட வேண்டும். சிறு கிராமங்களுக்கு, வாரம் ஒரு கிழமையாவது, வண்டிகளில் புத்தகங்களை எடுத்துச் சென்று, ஆங்காங்கு உள்ளவர்களுக்குப் படிக்கும் வசதிகளை அளிக்க வேண்டும். பணக்காரர்கள் கல்வி நலனுக்கு நன்கொடைகள் அளிப்பதே இக்காலத்தில் சிறந்த அறமாகும்.



வயது வந்தவர்கள் யாவரும் வோட்டுரிமை உடையவர்கள். அவர்களுக்குக் கல்வி யறிவும் அமைந்தால் தான், அவர்கள் தம் வாக்குரிமையைச் சரியானபடி உபயோகிக்க முடியும். அஸ்தஸ்து வேற்றுமையும், சமய வேற்றுமையும் இன்றிப் பொது நன்மை நாடுபவர்களை அவர்கள் தேர்ந்தெடுப்பார்கள்.

| | | |
|---|---|---|
| நலன் | சீர்குலைந்து | அடிப்படையான |
| கலன் | மலிந்திருக்கிறது | மூலாதாரம் |
| மாக்கள் | சாஸ்திரம் | நடுத்தரம் |
| வறிதே | பருவம் | உயர்தரம் |
| கையெழுத்து | தகுதி | கல்லூரி |
| நிகழ்ச்சி | வாக்குரிமை | பொருளாதாரம் |
| அரசியல் | வோட்டு | வெளியேறியதும் |
| தேர்ந்தெடு | பத்திரிகை | வாசகசாலை |
| சாதனம் | நூற்றாண்டு | நூல்நிலையம் |
| ஆராய்ச்சி | முன்னணி | அந்தஸ்து |

## கேள்விகள்

1. படிப்பில் மூன்று படிகள் யாவை?

2. முதியோருக்குக் கல்வி அறிவை எவ்வாறு விருத்தி செய்யலாம்?

3. இக்காலத்தில் சிறந்த அறம் எது?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி:
நலன், சாதனம், ஆராய்ச்சி, முன்னணி, அந்தஸ்து.

2. எதிரான பொருளுள்ள வார்த்தைகளை எழுது:
தரும், உயர்நிலை, விரும்பும், மேன்மை.

3. பின்வரும் வாக்கியங்களுக்கு எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் கூறு:

(i) அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்.

(ii) கற்றோரை உடைய நாடு உலகில் மேன்மையுடையதாக விளங்கும்.

(iii) காவிரியில் நீராடச் சென்றோம்.

4. மேலே காட்டியுள்ள (iii)-ம் வாக்கியத்தில் 'நாம்' எழுவாய். இது வாக்கியத்தில் இல்லை. இம்மாதிரி வரும் எழுவாய்க்கும் தோன்றா எழுவாய் என்று பெயர்.

5. தோன்றா எழுவாய்களைக் கூறு:

(i) தினசரி நன்றாகப் படிப்பேன்.

(ii) நன்றாகப் பாடுகிறீர்.

# 12. மின்சாரம்

தற்காலத்தை மின்சார காலம் என்று சொல்லலாம். அதன் உதவியால் நாம் அடைந்துள்ள வாழ்க்கைச் சாதனங்கள் மிகப் பல. மின்சாரம் ஓர் அதிசயிக்கத்தக்க சக்தி; அச்சக்தியை மனிதன் தன் அறிவினால் ஒரு சிறந்த ஊழியனாகப் பயன்படுத்திக் கொள்கிறான். மின்சாரம் எல்லாப் பொருள்களிலும் மறைந்திருக்கின்றது; மனிதன் தனது அறிவினால் அதை வெளிப்படுத்தும் வழிகளையும் அதன் பல இயல்புகளையும் கண்டறிந்துள்ளான்.

மேகத்தில் இடியும், மின்னலும் தோன்றுவது மின்சாரத்தின் இயக்கத்தினாலேயே. இவ்வுண்மையை, பெஞ்சமின் பிராங்க்லின் என்னும் அமெரிக்கர் முதன் முதலாகக் கண்டுபிடித்தார். மின்சாரம் பிற பொருள்களைக் காட்டிலும் மிக எளிதாக உலோகங்களின் வழியே பாயும். இவ்வுண்மையை உபயோகித்தே கட்டடங்களின் உச்சியில் இடிதாங்கிகள் நிறுத்தப்பட்டன. கட்டடங்களை நோக்கிப் பாயும் மின்சார சக்தி உலோகத்தினால் ஆன இடி தாங்கிகள் மூலம் பூமிக்குச் சென்றுவிடும். கட்டடங்களுக்குச் சேதம் ஏற்படாது.

மின்சார சக்தியை உஷ்ணமாகவும் ஒளியாகவும் மாற்றலாம். நீர்வீழ்ச்சியின் சக்தியைத் தக்க எந்திரங்களைக் கொண்டு மின்சாரமாக மாற்றுகின்றனர். மின்சாரத்தைத் தாமிரக் கம்பிகளின் மூலமாகப் பாய விடுகிறார்கள். தேவையான இடங்

களில் மின்சார பல்புகளையும் உஷ்ணக் கருவிகளையும் பொருத்தி ஒளியாகவும், உஷ்ணமாகவும் மின்சாரம் மாற்றப்படுகிறது.

மனிதன் தன் கூரிய அறிவினால், மின்சாரத்தை எண்ணிறந்த வகைகளில் பயன்படுத்திக் கொள்கிறான். இயற்கையான காற்றோட்டம் இல்லாத அறைகளில், மின்சார விசிறிகள் உதவி புரிகின்றன.





தபாலாபீசுகளில் தந்தியடிப்பதை நீங்கள் கவனித்திருப்பீர்கள். ஒவ்வொரு எழுத்துக்கும் ஒவ்வொரு விதமான ஒலிச் சைகை ஏற்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். அவ்வொலிகள் ஓரிடத்தில் உண்டாக்கப்பட்டால், கம்பிகள் மூலமாகச் செல்லும் மின்சாரம் குறிப்பிட்ட தபாலாபீசில் அதே ஒலிகளை உண்டாக்கும். அவற்றைக் கொண்டு அறியப்படும் செய்திக் குறிப்புகள் தாளில் எழுதப்பட்டு விலாசதாருக்கு அனுப்பப்படும்.

சிறு பிள்ளைகள் இரண்டு அட்டைப் பெட்டிகளை நூல்களைக்கொண்டு இணைப்பார்கள். ஒருவன் ஓரிடத்தில் நின்றுகொண்டு, இப்பெட்டியைத் தன்

வாயண்டை வைத்துக்கொண்டு மெதுவாகப் பேசுவான். சிறிது தூரத்திலுள்ள மற்றொருவன் இன்னொரு பெட்டியைத் தன் காதில் வைத்துக்கொண்டு ஒலியைக் கவனிப்பான். ஒருவன் கூறிய சொற்களை மற்றவன் தெளிவாக அறிவான். இக்கருவியில் நூலின் வழியே ஒலி செல்கிறது. டெலிபோன்





என்ற கருவியில் ஒலியை மின்சாரமாக மாற்றிக் கம்பிகள் மூலம் தூரத்திலுள்ள ஒரு கருவியை இயக்கும்படி செய்வார்கள். பேசுக்கருவியில் உண்டாக்கப்பட்ட ஒலி செவிக்குழலிலும் உண்டாகும். கடைகளிலும், சர்க்கார் காரியாலயங்களிலும் டெலிபோன் கருவியை நீங்கள் பார்த்திருக்கக்கூடும். அதில் ஒரு பகுதி காதிலே வைத்துக்கொண்டு ஒலியைக் கேட்பது; மற்றொரு பகுதி வாயண்டை வைத்துக் கொண்டு பேசுவது.



ரேடியோ மூலமாக நாம் சேய்மை யிடங்களில் நிகழும் நிகழ்ச்சிகளை உடனுக்குடன் அறிவதும், மின்சாரத்தின் உதவியைக்கொண்டேயாகும். ரேடியோவின் அமைப்பு விவரத்தைப்பற்றி நீங்கள்மேல் வகுப்பில் அறிவீர்கள்.






மாவு அரைக்கும் எந்திரங்கள், நெல் குத்தும் எந்திரங்கள், ஆலைகள், அச்சு எந்திரங்கள் முதலி






யன மின்சார சக்தியினால் வெகு துரிதமாக இயங்கும். சிறிது நேரத்தில், சிறிது மனித உழைப்பைக் கொண்டு ஏராளமான வேலை இவ்வெந்திரங்களால் செய்யப்படுகின்றது.

சென்னையில் மின்சார ரயில் வண்டிகளும் டிராம் வண்டிகளும், மின்சார சக்தியினால் செலுத்தப் படுகின்றன.

இவ்வாறே மின்சாரத்தால் ஏற்படும் பயன்கள் எண்ணிறந்தவை என்றாலும், அதைக் கையாளுவதில் அதி ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். எச்சரிக்கையில் சிறிதளவு குன்றினாலும், பெரிய ஆபத்து ஏற்பட்டு விடும். அதனால் தான், மின்சார எந்திரங்கள் வைக்கப்பட்டுள்ள இடங்களில் 'அபாயம்' என்ற எச்சரிக்கைக் குறிப்பு எழுதப்பட்டிருக்கும்.

இயற்கையின் அபூர்வ சக்திகளை, ஆராய்ச்சி செய்து, அவற்றை நன்மை அளிக்கும் வகைகளில் பயன்படுத்திக் கொள்வது நாகரிக வளர்ச்சியும் அறிவும் ஆகும்.

| | | |
|---|---|---|
| மின்சாரம் | நவீன ஆராய்ச்சி | இடிதாங்கி |
| மேலிடம் | அதிசயிக்கத்தக்க | ரேடியோ |
| அபூர்வம் | அடிப்படையாக | டெலிபோன் |
| புதுமை | சேமித்து | டிராம் வண்டி |
| சக்தி | சைகைகள் | ஜாக்கிரதை |
| தந்தி | செய்மை | எச்சரிக்கை |
| | | அபாயம் |

### கேள்விகள்

1. மின்சாரம் என்பது என்ன? அதை முதன்முதலில் கண்டுபிடித்தவர் யார்?

2. மின்சாரத்தின் சக்தியை நாம் எந்தெந்த வகைகளில் பயன்படுத்திக்கொள்கிறோம்?

3. மின்சாரத்தைக் கையாளும் போது நாம் எவ்வாறு நடந்துகொள்ளவேண்டும்? ஏன்?

### பயிற்சி

1. கோடிட்ட இடங்களில் தகுந்த வார்த்தைகளை அமைத்துப் பூர்த்தி செய் :

(i) தற்காலத்தை———என்று சொல்லலாம்.

(ii) பிற பொருள்களைக் காட்டிலும்——— மின்சாரம் எளிதாகப் பாயும்.

(iii) மின்சார எந்திரங்கள் உள்ள இடங்களில் ———என்ற எச்சரிக்கைக் குறிப்பு எழுதப் பட்டிருக்கும்.

2. சொந்த வாக்கியங்களில் உபயோகி :

அபூர்வம், சேமி, எச்சரிக்கை.

3. வாக்கியங்களில் பெயர்ச்சொற்கள் வரும் பொழுது உருவத்தில் சில மாறுபாடுகளைப் பெற்று வரும். இவற்றிற்கு வேற்றுமை என்று பெயர். எழுவாயாக வரும் பெயர்ச்சொல் எவ்வித மாறுபாடும் அடைந்திராது. வேற்றுமைகளை எட்டு வகைகளாகப் பிரிப்பார்கள்.

4. (i) முருகன் வந்தான். (முதல் வேற்றுமை)

(ii) நான் முருகனை அழைத்தேன். (இரண்டாம் வேற்றுமை)

(iii) நான் முருகனோடு சென்றேன். (மூன்றாம் வேற்றுமை)

முருகனால் இவ்வேலை செய்யப்பட்டது. (மூன்றாம் வேற்றுமை)

மேலே காட்டியுள்ள வாக்கியங்களைக் கவனித்துப்படி. எழுவாயாக வரும் பெயர்ச் சொல் முதல் வேற்றுமை எனப்படும். இரண்டாம் வேற்றுமையில் வரும் பெயர்ச் சொல்லுடன் ‘ ஐ ’ சேருகிறது. ‘ ஐ ’ இரண்டாம் வேற்றுமை உருபு என்று சொல்லப்படும். இதேபோல் மூன்றாம் வேற்றுமையின் உருபுகள் ஆல், ஒடு என்பனவாம்.

5. கீழ்க்கண்ட பெயர்ச் சொற்களை முதல் மூன்று வேற்றுமைகளிலும் அமைத்து வாக்கியங்கள் எழுது :

பசு, கோவிந்தன்.



## 13. நமது கொடி

ஒவ்வொரு அரசாங்கத்திற்கும் ஒவ்வொரு கொடிச் சின்னம் உண்டு. நாட்டினரின் சீரிய நோக்கங்களையும், பண்புகளையும் எடுத்துக் காட்டுவது கொடி. நம்முடைய இந்திய அரசாங்கத்தின் கொடியைப் பற்றியும், அதன் பொருளைப்பற்றியும் நீங்கள் இப்பாடத்தில் அறிவீர்கள்.

1947-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 15-ஆம் தேதி நம் நாடு சுதந்திரம் அடைந்தது. சுதந்திர இந்தியாவின் குறிக்கோளே இப்போதுள்ள கொடியாகும். இந்தியாவிற்கு ஒரு தனிக் கொடி யென்பது காங்கிரஸ் வாதிகளால் 1908-ஆம் ஆண்டில் கற்பிக்கப்பட்டது. முறையே 1921, 1931 ஆண்டுகளிலும், இறுதியாக 1947-ஆம் ஆண்டிலும் சிற்சில மாறுதல்கள் அக்கொடியின் அமைப்பில் செய்யப் பட்டன. அவற்றுள் இறுதியாக ஏற்பட்ட சுதந்திர இந்தியாவின் கொடியைப்பற்றி மட்டும் இப்போது கவனிப்போம்.

சுதந்திரக் கொடி தலைப்பிலிருந்து முறையே காவி, வெண்மை, பச்சை ஆகிய மூன்று தனித்தனி வர்ணங்களோடு கூடிய பட்டைகளால் ஆனது. நடுவேயுள்ள வெள்ளைப் பட்டையில் ஒரு நீலச் சக்கரம் பொறிக்கப்பட்டுள்ளது.

கொடியின் பொருள் :—காவி வர்ணம் தைரியத்தையும், தியாகத்தையும் உணர்த்தும்; வெண்மை நிறம் உண்மையையும் சாந்தியையும் அறிவிக்கும்; பச்சை நிறம் விசுவாசத்தையும், பலத்தையும் விளக்கும். இடையிலே உள்ள சக்கரம் தருமசக்கரம். அஃது அசோகரது அறத்தையும், காந்தியடிகளின் உண்மையையும் இணைத்து நிற்கும் அடையாளம்.

சக்கரம் சுழலும் இயல்புடையது. நமது கொடியில் உள்ள தரும சக்கரமும் உயிரோடுள்ள வாழ்வைக் குறிப்பதோடு, சுறுசுறுப்பாக உழைக்கும் ஊக்கத்தை உள்ளத்துக்கு அளிப்பது.

கொடியினடியில் வாக்குறுதி எடுக்கும்போது அனைவரும் கைகளைக் கட்டிக்கொண்டு வாக்குறுதியைக் கொடுக்கவேண்டும். அவ்வாக்குறுதியாவது, "சமய வேற்றுமையின்றி இந்திய சமூகத்தினர் எல்லோருக்கும் சுதந்திரமும் நியாயமும் வழங்கக்கூடிய குறிக்கோளாய், நமது இந்திய அரசாங்கத்திற்குரிய இராஜ சின்னமாகிய நம்முடைய கொடிக்கு நமது வணக்கத்தைச் செலுத்துகிறோம்" என்பது.

தேசியக் கொடியைப் பறக்க விடும் போது சில விஷயங்களைக் கவனிக்க வேண்டும். தேசிய விடுமுறை நாட்களிலும், மற்ற விஷேச சந்தர்ப்பங்

களிலும் மட்டுமே கொடியைப் பறக்கவிடலாம். கொடியைச் சுறுசுறுப்பாய் ஏற்றவும், மெதுவாய் இறக்கவும் தெரியவேண்டும். சூரிய உதயம் முதல், சூரிய அஸ்தமனம் வரையில்தான் கொடிகள் பறக்க வேண்டும்.

பிள்ளைகள் வரிசையாகச் செல்லும்போது, முதலில் வலது பக்கம் செல்லும் மாணவன் கொடி பிடித்துச் செல்லவேண்டும். கொடியைப் பறக்க விடும்போது காவிவர்ணப் பட்டை மேலேயும், பச்சை வர்ணப் பட்டை அடியிலும் இருக்கும்படி பறக்கவிட வேண்டும்.

துக்க சம்பவங்களைத் தெரிவிக்கும் காலத்தில், கொடியைக் கொடிமரத்தின் பாதியில் பறக்கவிட வேண்டும்; அப்போது முதலில் கொடியை உச்சிக்கு ஏற்றிப் பிறகே, நடுவிற்குக் கொண்டுவந்து நிறுத்த வேண்டும்; இறக்கும்போது கொடியை உச்சிக்குக் கொண்டுபோய்ப் பிறகுதான் கீழிறக்க வேண்டும். தேசீயக் கொடிக்கு அவமரியாதை ஏற்பட அநுமதிக்கக் கூடாது. வேறு எந்தக் கொடியையும் தேசீயக் கொடிக்கு மேலேயோ அல்லது வலது புறமோ பறக்கவிடக் கூடாது. கொடியானது தரையில் படவோ, தரையில் இழுபடவோ செய்யாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். தேசீயக் கொடிக்குமேல் அழகுபடுத்தக்கூடிய எதையும் கம்பத்தின் உச்சியில் பறக்கவிடக் கூடாது. படுக்கை வசமாகக் கொடியைப் பிடித்துக்கொண்டு போகக் கூடாது. கொடியில் எந்த விதமான எழுத்துக்களையும் எழுதவோ, ஒட்டவோ கூடாது. வண்டிகளுக்குப் பின்னும், வண்டிகளின் உச்சிப் பாகத்தி

லும், புகை வண்டிகளிலும், படகிலும் கொடியை நீட்டிப் பிடித்துக் கொள்ளக்கூடாது.

| | | |
|---|---|---|
| சின்னம் | சம்பவம் | தருமசக்கரம் |
| குறிக்கோள் | அநுமதிக்க | வாக்குறுதி |
| மாறுதல்கள் | காங்கிரஸ் வாதி | சந்தர்ப்பம் |
| சாந்தி | பொறிக்கப்பட்டு | கற்பிக்கப்பட்டது. |

## கேள்விகள்

1. சுதந்திரக் கொடியிலுள்ள வர்ணங்கள் என்னென்ன? அவை முறையே என்னென்ன பொருளை விளக்குகின்றன? சக்கரத்தின் பொருளை விளக்கு.

2. கொடியைப்பற்றிய எச்சரிக்கை விதிகளில் மூன்று கூறு.

3. கொடியை எந்த நாட்களில் பறக்க விடவேண்டும்? அதில் அனுசரிக்கவேண்டிய விதிகள் யாவை?

## பயிற்சி

1. பொருள் கூறு:
குறிக்கோள், கற்பி, சந்தர்ப்பம், சம்பவம்.

2. கோடிட்ட இடங்களில் சரியான வார்த்தைகளை அமைத்துப் பூர்த்திசெய்:

(i) சுதந்திர இந்தியக் கொடியின் மையத்திலுள்ளது ———— நிறப்பட்டை; அதில் ———— நிறத்தில் ஒரு சக்கரம் பொறிக்கப் பட்டுள்ளது.

(ii) கொடியைப் பறக்க விடும் பொழுது ———— வர்ணப்பட்டை மேலேயும் ———— வர்ணப் பட்டை அடியிலும் இருக்க வேண்டும்.

3. பின்வரும் வேற்றுமைகளைக் கவனி:

(i) என் பென்சிலை முருகனுக்கு அளித்தேன்.

(ii) சோற்றுக்கு உப்பு குறைவு.

இவற்றில் கு உருபு சேர்ந்துள்ளது. முருகனுக்கு, சோற்றுக்கு—இவை நான்காம் வேற்றுமை.

(iii) முருகனின் நல்லவன் ஆறுமுகம்

(iv) சென்னையிலிருந்து புறப்பட்டேன்.

iii-ம் வாக்கியத்தில் இன் ஐந்தாம் வேற்றுமை உருபு. iv-ம் வாக்கியத்தில் இருந்து என்பதும் ஐந்தாம் வேற்றுமை உருபே.

(v) முருகனது புத்தகம்.

(vi) என்னுடைய தந்தை வந்தார்.

அது, உடைய ஆறும் வேற்றுமை உருபுகள்.

4. பின்வரும் வாக்கியங்களிலுள்ள பெயர்ச் சொற்களின் வேற்றுமைகளைக் கூறு.

(i) காக்கையில் கரியவன் இப்பிள்ளை.

(ii) ஊரிலிருந்து நன்னெில் புறப்பட்டுச் சென்றேன்.

(iii) நான் ராமனைக் கோபாலனோடு மதுரைக்கு அனுப்பினேன். கோபாலன் மதுரையிலிருந்து புறப்பட்டு நாராயணனது ஊருக்குச் சென்றான்.



# 14. ரவீந்திர நாத தாகூர்

ரவீந்திர நாத தாகூர் என்பவர் உலகப்பிரசித்தி பெற்ற ஒரு கவிஞர். அவர் சமீப காலத்தில் நமது பாரத நாட்டில் சிறந்து விளங்கிய புலவர். அவர் வங்க ராஜ்யத்தில், கல்கத்தா நகரில் 1861- ஆம் ஆண்டில் ஒரு செல்வக் குடும்பத்தில் பிறந்தார். அவர் தம் இளமையிலேயே தம்முடைய தாயாரை இழந்தார். தாகூரின் தகப்பனரும் தம் சொந்த ஊரில் நிலையாகத் தங்காமல் அடிக்கடி யாத்திரை சென்றுவிடுவார். ஆகவே தாகூரின் சகோதரர்கள் தங்களுடைய மேற்பார்வையில், வேலைக்காரர்களைக் கொண்டு அவரை வளர்த்து வந்தார்கள்.

இளமையிலிருந்தே ரவீந்திரர் புத்திக் கூர்மையும், படிப்பில் விருப்பமும் உடையவராக விளங்கினர்

எனினும் அவர் சில ஆண்டுகளே பள்ளிக்கூடம் சென்று படித்தார். தனிப்பட்ட முறையில் அவர் தம் வீட்டிலேயே ஓர் ஆசிரியர் உதவியைக் கொண்டு கல்வி பயின்றார். தம் தாய்மொழியாகிய வங்காளியி லும், ஆங்கிலத்திலும் வெகு விரைவில் தேர்ச்சி பெற்றார். கவி பாடும் வன்மையும் அவருக்கு இளமைப் பருவத்திலேயே அமைந்தது. அவர் பதினைந்தாண்டுப் பிராயம் அடைந்தபோதே அவரு டைய இனிய கவிகள் வெளிவர ஆரம்பித்தன.

ரவீந்திரரின் கவித்திறமையும், கல்வியில் ஆற்ற லும் உலகமெங்கும் பரவின. பல நாடுகளிலுள்ள அறிஞர்களும் அவரைக் கொண்டாடினார்கள். ஐரோப்பா, அமெரிக்கா முதலிய வெளிநாடுகளுக் கும் சென்று, அவர் பிரசங்கங்கள் செய்தார். தாகூரின் விரிவுரை யென்றால் படிப்பாளிகள் பலர் திரளாகக் கூடுவார்கள்.

தாகூர் தம் தாய்பாஷையாகிய வங்கமொழியில் எண்ணிறந்த பாடல்களை இயற்றினார்; நவீன நூல் கள் பலவும் எழுதினார். வேண்டும்போது அவர் அவற்றை ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்து வெளி யிடுவார். வங்க மொழியே யன்றி, ஆங்கிலத்திலும் அவர் பற்றும் தேர்ச்சியும் உடையவர். ஆகையால் ஆங்கில மொழியிலும் அவர் ஒரு சிறந்த கவிஞராகப் பிரசித்தி பெற்றார்.

ரவீந்திர நாத தாகூரை உலக அறிஞர்கள் "கவியரசர்" என்றே வழங்கி வருகிறார்கள். சுவீடன் தேசத்து அரசாங்கத்தார் அவருக்கு நோபல் பரிசு

அளித்து, அவரைக் கௌரவப்படுத்தினார்கள். அப் பரிசு நூறாயிரம் ரூபாய் பெறுமானமுள்ளது.

உலகத்திலுள்ள மக்கள் எல்லோரும் ஒற்றுமையாகவும், சகோதர பாவனையுடனும், இன்பமாகவும் வாழ வேண்டுமென்பது தாகூரின் நோக்கம். மேலும் அவர் கிராமக்குடியானவர்களின் உண்மையான ஊழியத்தையும், உழைப்பையும் கண்ணாரக் கண்டுணர்ந்தவர்; ஆகையால் அவர்கள் நல்வாழ்வு பெற்றுச் சுகமாக இருக்கவேண்டுமென்று எண்ணினார்; அவர்களின் பொருட்டு அவர் மிகவும் அக்கரையும் கொண்டவர்.

கல்வி முறையில் அவர் சீர்திருத்தமான கொள்கையை உடையவர். இயற்கையோடு ஒட்டிய கல்வியே சிறந்தது என்பது அவருடைய தீர்மானம். ஆகையால் பள்ளிக்கூடங்களும், இயற்கைக் காட்சி நிரம்பிய இடத்தில் அமைய வேண்டுமென்பது அவருடைய நோக்கம்.

தம்முடைய நோக்கங்களை யொட்டித் தாமே ஒரு கல்விச் சாலையையும் ஏற்படுத்தினார். வங்காள ராஜ்யத்தில் போல்பூருக்கு அருகே ஒரு சிற்றூரில் அக் கல்விச் சாலை அமைக்கப்பட்டது. "உலக முழுதுக்கும் அறிவு புகட்டுவது" என்ற பொருளில் "விசுவபாரதி" என்று அக் கலாசாலைக்கு நாமம் சூட்டப்பட்டது. அஃது இப்பொழுது ஒரு பெரிய கல்லூரியாக வளர்ந்துள்ளது.

ரவீந்திரர் தம்முடைய கல்விச்சாலையின் வளர்ச்சியில், கண்ணும் கருத்துமாக இருந்து அதைப் பாதுகாத்தார். தமது குடும்பச் சொத்தினின்று,

தமக்குரிய பங்கையும் அப் பள்ளிக்கூடத்திற்கு உரிமையாக்கினர். தாம் எழுதிய நூல்களின் வாயிலாகவும், அவருக்கு நிரம்ப வருவாய் கிடைத்தது. அவ் வருவாய்யையும் விசுவபாரதியின் பாதுகாப்பிற்காக அளித்தார்.

இவ்வாருக, சிறந்த முறையில், நாட்டிற்குத் தொண்டு ஆற்றிவந்த கவிஞர் தமது எண்பதாம் வயதில் (1941) இம் மண்ணுலக வாழ்வை நீத்தார். அவருடைய பிரிவைக் கேட்டு, அறிஞர்கள் அனைவரும் வருந்தினர். அவர் இயற்றிய நூல்களும், அவர் ஏற்படுத்திய கல்லூரியும் இவ்வுலகில் என்றும் அவருடைய புகழை நிலவச் செய்யும்.

| | | |
|---|---|---|
| உலகப் பிரசித்தி | மாகாணம் | தனிப்பட்டமுறை |
| மேற்பார்வை | கல்லூரி | மண்ணுலக வாழ்வு |
| பிரசங்கங்கள் | நிலையாக | சகோதர பாவனை |
| சீர்திருத்தமான | திரளாக | யாத்திரை |
| பாதுகாத்தார் | ஊழியம் | நிலவச்செய்யும் |
| நவீனம் | அக்கரை | |

## கேள்விகள்

1. விசுவபாரதி என்பதற்குப் பொருள் என்ன?

2. எப்படிப்பட்ட கல்வியே சிறந்தது என்பது தாகூரின் எண்ணம்?

3. தாகூர் தம்முடைய சொத்தையும், வருவாயையும் எவ்வாறு பயன்படச் செய்தார்?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி :
மேற்பார்வை, ஊழியம், நவீனம்.

2. பின்வரும் வேற்றுமைகளைக் கவனி :

(i) மரத்தில் பறவை இருக்கிறது.

(ii) புத்தகத்தின்மேல் காகிதத்தை வை.

(iii) வீட்டினுள் ஓடினேன்.

(iv) கல்லின்கண் பிளவு உள்ளது.

இல், மேல், உள், கண்—இவை எல்லாம் ஏழாம் வேற்றுமை உருபுகளாம்.

(v) முருகா, வா.

(vi) அண்ணா, எங்கே செல்கிறாய் ?

(vii) தம்பி ! நீ நன்றாய்ப் படி.

ஒருவரை விளிக்கும்பொழுது அல்லது அழைக்கும் பொழுது பெயர்ச்சொல் சிறிது மாறுதல் அடையும். இதுவே எட்டாம் வேற்றுமை எனப்படும்.

3. மரம், சாத்தன் — இச் சொற்களை எல்லா வேற்றுமைகளிலும் கூறு.



## 15. காந்தியடிகளின் பெருமை

இந்திய நாடு சுதந்திர மெய்த நல்
தந்திரம் தந்தது யார்?—சிறு
கந்தைப் 'பக்கீர்' என்று தந்தொருவன் சொன்ன
காந்தி யென்னும் பெரியார்.

அஞ்சிக் கிடந்த நம் நெஞ்சந் துணிந்திட
ஆண்மை எழுப்பின தார்?—ஒரு
வஞ்சமில்லாதவர் வாய்மையின் தூய்மையின்
வாழ்க்கையர் காந்தியவர்.

ஆயுதம் இன்றியும் யாரும் வணங்கிடும்
அன்பைப் பெருக்கின தார்?—சற்றும்
சாயுதல் செய்திடாச் சத்தியமூர்த்தி நம்
தவமுனி காந்தியவர்.

நாட்டினுக்காயுயிர் கேட்பினும் தந்திட
நானென்று முன்வருவோர்—பலர்
போட்டியிட்டே வர வீரம் புகுத்தினர்
புண்ணியர் காந்தியவர்

அடிபட்டு மாளவும் சிறைபட்டு வாழவும்
அச்ச மகற்றினதார்?—உண்மை
குடிகொண்டு கோபத்தைக் குறைவற நீக்கிய
குணமுயர் காந்தியவர்.

—நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை

| | | |
|---|---|---|
| கந்தை | சாயுதல் | துணிந்தி |
| பக்கீர் | மாள | எழுப்பு |



## 16. வான நூல்

வானத்தில் இயங்கும் கோள்கள், மீன்கள் இவைகளைப் பற்றியது வான நூல். வெப்பமும், தட்பமும், காற்றும், மழையும் அவைகளின் இயக்கத்திலேயே ஏற்படுகின்றன. செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்பன கோள்கள் அல்லது கிரகங்கள் எனப்படும். பூமியும் இவற்றைப் போன்ற ஒரு கிரகமே. கிரகங்கள் எல்லாம் சூரியனைச் சுற்றி வருகின்றன. சந்திரன் பூமியைச் சுற்றி வரும் ஓர் உபகிரகம். மீன்கள் என்பன நக்ஷத்திரங்கள். வானத்தில் உள்ள நக்ஷத்திரங்கள் எண்ணிலடங்காதவை. அவற்றுள் இருபத்தேழு நக்ஷத்திரக் கூட்டங்கள் நம் நாட்டுப் பண்டைய வான நூல்களில் கூறப்பட்டுள்ளன. அவைகளின் உதயமும், அஸ்தமனமும், சஞ்சாரமும் கணக்கில் அடங்கியவை.

அசுவினி முதல் ரேவதி வரை இவற்றிற்குப் பெயர் கொடுக்கப்பட்டுள்ளன.

கோள்கள் (கிரகங்கள்) ஆகாய வீதியில் வலமாக இயங்கிக்கொண்டே இருக்கின்றன. அவைகள் சஞ்சரிக்கும் வேகம் காலவரையில் முறையாக அடங்கியுள்ளது. ஆகாய வீதி பன்னிரண்டு ராசிகளாகப் பிரிக்கப்பட்டு, பன்னிரண்டு பெயர்களால் வழங்கப்படும். அவை, மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்பன.

கோள்கள் கோடிக்கணக்கான மைல்களுக்கு அப்பால் உள்ளன. அவற்றுள் சூரியனும், சந்திரனும் மிக முக்கியமானவை. இச் சுடர்களின் கதியைக் கொண்டே இரவு, பகல், பருவம் இவைகள் கணக்கிடப்படுகின்றன.

சூரியனைப் பூமி சுற்றுகிறது; அவ்வாறு அது ஒரு முறை வலம் வருவதற்கு ஒரு வருஷம் ஆகும். அவ்வாறு வருகையில் ஒவ்வொரு மாதமும், ஒவ்வொரு இராசி மண்டலத்திற்கு எதிராகச் சூரியன் காணப்படும். அவற்றைச் சூரியன் இருக்கிற இராசி என்பர். பூமி சூரியனைச் சுற்றிவரும் காலமாகிய ஒரு வருஷம் ஆறு பருவங்களாகப் பிரித்துக் கூறப்படும். அவை கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பன. பூமியானது சூரியனைச் சுற்றிக்கொண்டு செல்லும்போது, தன்னைத் தானேயும் சுற்றிக் கொள்ளுகிறது. அவ்வாறு பூமி தன்னைத் தானே ஒரு தடவை சுற்றும் நேரம் ஒரு நாள் ஆகும். இச்சுழற்சியால் தான் இரவும் பகலும் உண்டாகின்றன.

சந்திரன் பூமியை வலம் வருகிறது. அவ்வாறு அது ஒரு முறை வலம் வரும் காலம் சுமார் 29 நாள் என்பர். சந்திரன் வலம் வரும்போது, ஒவ்வொரு இராசி மண்டலத்தையும் கடக்க இரண்டேகால் நாட்கள் ஆகும். அவற்றையே சந்திரன் உள்ள நக்ஷத்திரங்கள் என்போம்.

இவ்வாறே ஒவ்வொரு கிரகமும் இராசி மண்டலங்களை ஒரு முறை வலம் வருவதற்குக் குறிப்பிட்ட காலவரை யுண்டு. கோள்களின் கதிகளை யொட்டியே, இயற்கை நலன்கள் மாறுபடும் இயல்பின. நம் முன்னோர் வான நூலில் சிறந்த பயிற்சி பெற்றிருந்தனர். பருவங்களில் நிகழக்கூடிய வெப்ப தட்ப நிலைகள், காற்று மழைகள், அவற்றை யொட்டிப் புவியில் ஏற்படக்கூடிய விளைவுகள், கிரகணங்கள் ஆகிய இவைகளை யெல்லாம் நுட்பமாகக் கணக்கிடக் கூடியவர்கள். அக்கலைக்குக் கணித சாஸ்திரம் என்று பெயர். கணித சாஸ்திரிகள் தம் கணக்குப் படி அறியும் வருஷநிகழ்ச்சிகளைப் பஞ்சாங்கம் என்ற பெயரில் வெளியிடுகிறார்கள். விவசாயிகளுக்கும், மற்றவர்களுக்கும் பஞ்சாங்கக் குறிப்புகள் உதவியாக விளங்கும். நீங்கள் பஞ்சாங்கத்தைப் பார்த்து அக் குறிப்புகளைக் கூறுவீர்களா?

| | | |
|---|---|---|
| வானநூல் | புவி | நக்ஷத்திரம் |
| கோள் | ராசி | விளைவு |
| கிரகம் | சஞ்சாரம் | குறிப்பு |
| கதி | ஆகாய வீதி | காலவரை |
| வெப்பம் | சுழற்சி | கோடிக்கணக்கான |
| தட்பம் | வலம் வருதல் | நுட்பமாக |
| பஞ்சாங்கம் | கிரகணம் | |

## கேள்விகள்

1. கோள்களின் பெயர்களைக் கூறு. கோள்கள் செய்யும் வேலை யாது?

2. கோள்களின் நிலையை யொட்டி ஏற்படும் பயன்கள் யாவை?

3. ஆறு பருவங்களின் பெயர்களைக் கூறு.

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி:
கோள், சஞ்சாரம், சுழற்சி, விளைவு.

2. கோடிட்ட இடங்களில் தகுந்த வார்த்தைகளை நிரப்பு:

(i) வெள்ளி ஒரு ———.

(ii) சந்திரன் ஒரு ———.

(iii) பூமி தன்னைத்தானே ஒரு முறை சுற்றும் காலத்திற்கு ஒரு ——— என்று பெயர்.

(iv) பூமி ஒரு முறை சூரியனைச் சுற்றும் காலத்திற்கு ஒரு ——— என்று பெயர்.

3. பின் வரும் வாக்கியங்களிலுள்ள பெயர்ச் சொற்களுக்கு வேற்றுமை கூறு:

(i) நீ உன்னுடைய புத்தகத்தை எனக்குக் கொடு.

(ii) தாயே! உம்மோடு நானும் வருகிறேன்.

(iii) மரத்தின்கண் இருந்த பறவையை வில்லினின்றும் சென்ற அம்பு கொன்றது.

# 17. இளங்கோவடிகள்

ஏறக்குறைய ஆயிரத் தெண்ணூறு ஆண்டு கட்குமுன், சேரநாட்டைச் சேரலாதன் என்னும் ஓர் அரசன் ஆண்டு வந்தான். சேரநாடு என்பது தென்னிந்தியாவின் மேற்குப் பகுதியாகும். அது மலைவளம் நிரம்பிய நாடு. வஞ்சிமாநகரம் சேர நாட்டின் தலைநகரமாகத் திகழ்ந்தது.

அக்காலத்தில் சேரலாதன் புகழ் பாரத நாடு முழுவதும் பரவியிருந்தது. அம் மன்னனுடைய மனைவியின் பெயர் நற்சோணை. இந்த அரச தம்பதிகளுக்குச் செங்குட்டுவன், இளங்கோ என்ற இரண்டு புதல்வர்களிருந்தார்கள். 'இளங்கோ' என்றால் இளவரசன் என்று பொருள். இரு சகோதரரும் தம் இருவர் நலன்களும் ஒரு நலமாகக் கொண்டொழுகி அரண்மனையில் வாழ்ந்து வந்தார்கள்.

அவ்வாறிருக்கையில் ஒரு நாள் நிமித்தன் ஒருவன் அரசனைக் காண அரண்மனையை அடைந்தான். அப்பொழுது சேரலாதன் தன் அமைச்சர், சேனைத் தலைவர் முதலாயினோர் சூழத் தன் மைந்தர்களுடன் கொலுவில் வீற்றிருந்தான். நிமித்தனது வரவைக் கண்டதும் மன்னவன் அவனை இனிது வரவேற்று, ஆசனம் அளித்து இருக்கச் செய்து, இன்சொல் பகர்ந்து அளவளாவிப் பேசிக்கொண்டிருந்தான். அத்தருணம் மன்னவனுக்குத் தன் மைந்தர்களின் யோகங்களைப் பற்றி அறிய அவா ஏற்பட்டது. அவன் தன் விருப்பத்தை நிமித்தனிடம் கூறினான்.

நிமித்தனும் வேந்தனுடைய விருப்பத்திற்கு இசைந்தான். அரச குமாரர்கள் இருவரையும்

தனித்தனியே உற்று நோக்கி, அவர்களுடைய அங்க லக்ஷணங்களைக் கவனித்தான். பிறகு அவன் அரசனை நோக்கி, "வீர மன்ன, இராஜ குமாரர்கள் இருவர்களின் அங்க இலக்ஷணங்களை அடி முதல் முடிவரையில் உற்றுக் கவனித்தேன். நிமித்த நூல் கூறியபடி, இளைய மைந்தனே அரசுரிமைக்குத் தகுதியுடையவனாகத் தோன்றுகிறான்" என்றனன். நிமித்தன் கூற்றைக் கேட்டு, அச்சபையில் இருந்தவர்கள் அனைவரும் திகைப்பெய்தினர்.

இளங்கோ மட்டும் திகைப்பெய்தவில்லை; நிமித்தனை வெகுண்டு நோக்கினான்; தமையன் இருக்கத் தம்பிக்கு அரசுரிமை உண்டு என்று கூறியதைத் தான் விரும்பவில்லை. நிமித்தன் கூறியதைக் கேட்ட தன் தமையன் வருந்துவானே என்று எண்ணினான்; தமயனுடைய வருத்தத்தைப் போக்குவது தன் கடமை என்று கொண்டான். பிறகு தன் தமையனை நோக்கி, "அண்ணா, நிமித்தன் கூறியதைக் கேட்டுத் தாங்கள் வருத்தப்பட வேண்டாம். அரசுரிமை அடைய எனக்குச் சிறிதும் அவா இல்லை. இக்கணமே யான் துறவு கொள்கிறேன். முறைப்படி தாங்களே அரசுரிமையை மேற்கொள்க" என்று கூறினான்.

செங்குட்டுவனும் தன்பால் ஐயம் கொள்ளாமல் இருப்பதற்காக, அக்கணமே தன்னுடைய ஆடையணிகளை இளங்கோ கழற்றி வைத்தான்; துறவுக் கோலம் பூண்டு, அரண்மனையை விட்டகன்றான். "இனி அரண்மனையை நாடுவதில்லை" என்னும் உறுதியுடன் வஞ்சி நகரின் கிழக்கிலிருந்த ஒரு கோயிலை அடைந்தான்; துறவிக் கோலத்துடன் அங்கேயே வசித்தான்.

இளையவன் தன்பால் கொண்ட அன்பையும், அவனுடைய மனவுறுதியையும் கண்ட செங்குட்டுவன், இளங்கோவை நகரின் வெளியே அகன்று செல்லாதிருக்கும்படி வேண்டிக் கொண்டான்; அரசியல் காரியங்களை யெல்லாம், துறவியாகிய தன் தம்பியுடன் ஆலோசித்தே செய்து வந்தான்.

அரண்மனையில் இன்பமாக வாழ்வதை இளமையிலேயே நீத்த இளங்கோவை எல்லாரும் கொண்டாடினார்கள். 'இளங்கோ' என்ற பெயர் 'இளங்கோவடிகள்' எனச் சிறப்புடன் வழங்கலாயிற்று. அண்ணன்பால் தம்பிக்கு ஏற்பட்ட அன்பைப் பார்த்தீர்களா!

இளங்கோவடிகள் கல்வியில் தேர்ச்சி பெற்றவர்; தமிழில் பெரும் புலமை உடையவர். 'சிலப்பதிகாரம்' என்னும் ஓர் அரிய காவியம் இளங்கோவடிகளால் எழுதப்பெற்றது. அந்நூலில் கோவலன், கண்ணகி இவர்களின் வரலாறு கூறப்படும். அவருடைய புலமையும், பண்பும் தமிழர்களால் என்றும் போற்றப்படும்.

| | | |
|---|---|---|
| பகுதி | ஏறக்குறைய | புதல்வர் |
| செறிந்து | சீரும் செல்வமும் | மைந்தர் |
| தலைநகரம் | வரவேற்பு | குமாரர் |
| யோகம் | அங்கலக்ஷணம் | ஆசனம் |
| உரிமை | ஐயம் | நிமித்தன் |
| கோ | துறவுக்கோலம் | தனித்தனியே |
| கோலு | காவியம் | திகைப்பு |
| கூற்று | நீத்த | எய்தவில்லை |

## கேள்விகள்

1. 'இளங்கோ' என்ற சொல்லுக்குப் பொருள் யாது?

2. சிலப்பதிகாரம் என்ற நூல் எதைப்பற்றிக் கூறும்? அந்நூலை எழுதியவர் யார்?

3. இளங்கோ துறவு பூண்டதற்குக் காரணம் என்ன?

## பயிற்சி

1. எதிர்ப்பதங்கள் கூறு:
நிரம்பிய, வரவு, இன்சொல், விருப்பு.

2. பொருள் கூறு:
நிமித்தன், யோகம், மைந்தன்.

3. வினைச் சொற்கள் மூன்று காலங்களில் வரும். பின்வரும் வாக்கியங்களைக் கவனித்துப் படி:

(i) நான் படிக்கிறேன்.
(ii) கோபாலன் ஓடுகின்றான்.
(iii) நீர் புசிக்கின்றீர்.

இந்த வாக்கியம் ஒவ்வொன்றிலும் பயனிலையால் குறிக்கப்படும் தொழில் நிகழ்காலத்தில் (தற்காலத்தில்) இருக்கின்றது. தொழில் நடப்பது நிகழ்காலத்தில் என்பதை கிறு, கின்று என்ற உறுப்புகள் காட்டுகின்றன. இந்த உறுப்புகளுக்கு இடைநிலை என்று பெயர். ஆகையால் நிகழ்கால இடைநிலைகள் கிறு, கின்று என்பனவாம்.

4. பின்வரும் வாக்கியங்களில் நிகழ்கால வினைச் சொற்களை அமைத்துப் பூர்த்தி செய்:

(i) மாணவர்———.(விளையாடு)
(ii) மரங்கள்———.(வளர்)
(iii) கன்று———.(துள்ளு)



## 18. சாந்து பிபி

அக்பர் பாதுஷா டில்லியைத் தலைநகராகக் கொண்ட வட இந்தியா முழுமையும் தம் அதிகாரத்துக்கு உட்படுத்தி, குடி மக்கள் புகழ ஆட்சி செய்து வந்தார். அக்காலத்தில் விந்தியமலைக்குத் தெற்கே பிஜப்பூர், ஆமது நகரம், கோல்கொண்டா ஆகிய மூன்று முஸ்லிம் ராஜ்யங்கள் பிரபலமாயிருந்தன.

வெகு காலமாக அக்பர் இந்த ராஜ்யங்களின் விவகாரங்களில் தலையிடவில்லை. ஆனால் அவருடைய ஆட்சியின் கடைசிக் காலத்தில் ஆமது நகரத்தைத் தம் ராஜ்யத்துடன் சேர்த்துக்கொள்ள அவருக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது.

ஆமது நகர சுல்தான் பிள்ளையில்லாமல் இறந்தார். ஆகையால் அரச பதவிக்குப் பலர் போட்டி

யிட்டனர். சுல்தானுக்கு மருமகன் முறையில் ஒரு சிறு பாலகனிருந்தான். அவனே சுல்தான் பதவியை வகிக்க வேண்டுமென்று அவனை ஆதரித்த சாந்து பிபி என்ற மாதரசியார் கூறினர். ஆமது நகர மக்கள் இவரையே ஆதரிக்க முன்வந்தனர்.

இதற்கிடையில் சிம்மாசனத்திற்குப் போட்டியிட்டவர்களில் ஒருவன் அக்பருடைய உதவியை நாடினன்; மற்ருருவன் பிஜப்பூர் சுல்தானுடைய உதவியைக் கோரினன். தம்மை உதவி கேட்டவர்களைச் சிம்மாசனத்தில் ஏற்றுவதற்காக, அக்பரும், பிஜப்பூர் சுல்தானும் சேனைகளை அனுப்பினர்கள்.

சாந்து பிபி, பிஜப்பூர் சுல்தானுக்கு ஒரு செய்தி அனுப்பினர். அதில், இவர், தக்காணத்து ராஜ்யங்கள் தமக்குள் போர் செய்து கொண்டிருந்தால், முடிவில் எல்லோரும் டில்லி ராஜ்யத்துக்கு அடிமைகளாக ஆகவேண்டி யிருக்குமென்றும், ஆகலால் பிஜப்பூர் சுல்தான் ஆமது நகரை எதிர்ப்பது நியாயமன்று எனவும் எடுத்துக் காட்டினர். சுல்தானுக்கு இது நியாயமென்று தோன்றியது; எனவே அவர் நம் இராணியாருக்கு நண்பரானர்.

சாந்து பிபி ஆமது நகரக் கோட்டையை மிக்க வலிமைப்படுத்தி, மொகலாய சைனியத்தைத் தடுத்துத் துரத்த ஏற்பாடுகள் செய்தார். கோட்டைக் காவலைத் தாமே நேரில் மேற்பார்த்தார். ஒருவீரனைப் போல் கவசமும் ஆயுதங்களும் அணிந்து, சேன வீரர்களுக்கு இடையில் சென்று அவர்களை ஊக்கப்படுத்தினர். ஒரு சமயம் மொகலாயர் கோட்டைச் சுவரின் ஒரு பகுதியை வெடிமருந்தினல் தகர்த்து

வழி செய்து விட்டார்கள். அங்கிருந்த ஆமது நகர வீரர்கள் பயந்து பின் வாங்கத் தொடங்கினர். அச் சமயத்தில் சாந்து பிபி அங்கே தோன்றி, ஓடிய வீரர்களை உற்சாகப் படுத்தித் திரும்பச் செய்து, அவ்வழியைப் பகல் முழுதும் காத்தார். மொகலாய வீரர்கள் அந்த வழியாக உள்ளே நுழையாதபடி ஆயுதங்களைப் பொழிந்தனர், ஆமது நகர வீரர். இரவு வந்ததும் மொகலாய சைனியம் பாசறைக்குத் திரும்பியது. மறுநாள் காலைக்குள் சாந்து பிபியின் மேற்பார்வையில் கோட்டைச் சுவரில் ஏற்பட்ட அந்தப் பிளவு அடைக்கப்பட்டது. பிஜப்பூர் சுல்தானுடைய சேனை ஆமது நகருக்கு உதவி செய்ய வந்துகொண்டிருந்தது. இச்செய்தியைக் கேள்வியுற்ற மொகலாய சேனை, முற்றுகையைக் கைவிட்டு, சாந்துபிபியுடன் சமாதானம் செய்து கொண்டது.

சில மாதங்கள் சென்றன. சாந்துபிபியின் பிரதம மந்திரியும், வேறு சிலரும், அவருக்கு விரோத மாகத் திரும்பி, டில்லியுடன் சதி செய்தார்கள். இப் பொழுது மற்றொரு மொகலாயப்படை ஆமது நகரைக் கைப்பற்ற அனுப்பப்பட்டது. தமது அதி காரிகளில் பல துரோகிகள் இருப்பதை அறிந்த சாந்துபிபி, மொகலாயருடன் போர் செய்யாமல், சமாதானம் பேச முற்பட்டார். இராணியார் டில்லி அரசருடன் சதி செய்வதாகச் சிலர் நகரத்தில் செய்தி பரவச் செய்தனர். இதைக் கேட்டு வெகுண்ட சில சேனை வீரர்கள், சாந்து பிபியின் அறையில் புகுந்து அவரைக் கொன்று வீழ்த்தினர். தம் நாட்டிற்காக வீரத்துடன் போர் புரிந்த சாந்து பிபி இராணியார்,

ஓர் வீரனைப் போலவே மரணமடைந்தார். சில நாட்களில் மொகலாய சேனை ஆமது நகரைக் கைப்பற்றியது. தமக்குள் விரோதத்தை ஒழித்து எல்லோரும் இராணியாரின் சொற்படி நடந்திருந்தால், ஆமது நகரம் வீழ்ச்சி அடையாமல் இருந்திருக்கக் கூடுமல்லவா?

| | | |
|---|---|---|
| உட்படுத்தி | ஆதரி | பாசறை |
| பிரபலம் | காடினன் | சமாதானம் |
| விவகாரம் | கோரினன் | கைப்பற்ற |
| தலையிடு | தகர்த்து | சதி |
| சந்தர்ப்பம் | பின்வாங்கு | வீழ்ச்சி |

## கேள்விகள்

1. அக்பர் எந்தச் சந்தர்ப்பத்தில் ஆமது நகரத்தின் மீது படையெடுத்தார்?
2. சாந்துபிபியின் வீரத்திற்கு ஒரு உதாரணம்கொடு.
3. சாந்துபிபி எந்தச் சந்தர்ப்பத்தில் உயிர் துறந்தார்?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி:
   பிரபலம், தலையிடு, ஆதரி, பின்வாங்கு.
2. பின்வரும் வாக்கியங்களைக் கவனித்துப் படி:
   (i) கமலா நேற்று நன்றாகப் படித்தாள்.
   (ii) ஜான் வெற்றி பெற்றான்.
   (iii) நான் இனிய பாடல் ஒன்று கேட்டேன்.
   (iv) அவன் பதில் கூறினன்.

இந்த வாக்கியங்களில் பயனிலைகளால் குறிப்பிடப்படும் தொழில்கள் இறந்த காலத்தை (கடந்து போன காலத்தை)ச் சேர்ந்தவை. ஆகையால் இந்த வினைச்

சொற்கள் இறந்த காலம் காட்டுகின்றன. இறந்த காலம் காட்டும் இடைநிலைகள் த், ட், ற், இன் என்பவையாம்.

3. பின்வரும் வாக்கியங்களில் இறந்த கால வினைச் சொற்களை அமை:

(i) அப்துல்———. (பேசு)
(ii) நீங்கள்———. (குதி)
(iii) நாங்கள்———. (சொல்)
(iv) எல்லோரும் இன்புற்று———. (இரு)

# 19. தென்னை இனம்

தமிழ் நாட்டில் காணப்படும் மரவகைகளுள் தென்னை ஒன்று. மற்றவைகளைப்போல் தென்னைக்குக் கிளைகள் இல்லை. ஓலைகளோடு கூடிய மட்டைகளே கிளைகள்போல் பரவி இருக்கும்.

தென்னை மரத்தைப்போலவே, பனை, கமுகு, ஈந்து ஆகிய மரங்களும், கிளைகளுக்குப் பதிலாக மட்டைகள் உடையவை. தென்னை போலவே, அவைகளும் ஓங்கி, உயர்ந்து வளரும் இயல்புடையவை. ஆகவே பனையும், கமுகும், ஈந்தும் தென்னை இனம் அல்லது வருக்கம் எனப்படும்.

இவற்றுள் தென்னைமரம் மணற்பாங்கான ஆற்றோரங்களில் மிகுதியாகக் காணப்படும். தென்னந்தோப்புகள் காட்சிக்கு இனியவை. இம்மரத்தின் ஒவ்வொரு பாகமும் நமக்குப் பயன்படுகிறது.

நன்றாக முற்றின தேங்காயை மண்ணில் ஊன்றித் தென்னையைப் பயிர் செய்வார்கள். நெற்றி

லிருந்து தென்னம்பிள்ளை தோன்றும். ஐந்தாறு ஆண்டுகளில் பிள்ளை வளர்ந்து காய்க்கும் மரங்கள் ஆகும். தென்னம் பிள்ளைகளை சிரமமும் கவனமும் கொண்டு வளர்த்தால் அவை வளர்ந்த பின் நல்ல பலனைக் கொடுக்கும்.



பனைமரம் மேட்டுப் பாங்கான பிரதேசங்களில் வளரும் தன்மை உடையது. இதற்கும் மணல் கலந்த பூமியே ஏற்றது. தென்னையைப் போல் அதிக நீர் வளமுள்ள பூமி பனைக்கு வேண்டுவதில்லை. மணற் பாங்கான இடங்களில் குழிகளைத் தோண்டி, அவற்றில் பனங்கொட்டைகளை நட்டுப் பயிராக்குவார்கள். அதிகச் சிரமமும் கவனமும் எதிர் பாராமலே அது வளர்ச்சி அடையும். தென்னையைப் போலவே, பனை மரமும் எல்லாப்பாகங்களாலும் நமக்குப் பயன்படுகிறது. முற்காலத்தில் பனையோலைகளில் நூல்கள் எழுதப்பட்டன. அவை ஏட்டுச் சுவடி என்று வழங்கப்படும்.



கமுகு என்பது பாக்கு மரம். பாக்கு நெற்றுக்களைப் பாத்திகளில் நட்டால், அவை நாற்றாக வளரும். பிறகு அந்நாற்றுக்களைப் பிடுங்கி வேறு இடங்களில்

நட்டு வளர்ப்பார்கள். அவை கன்றாக வளர்ந்து, கன்று மரமாக வளரும். கமுக மரம் வளர்வதற்கு நீர்வளம் வேண்டும்; பூமியும் செழுமையுள்ளதாக இருக்கவேண்டும். ஆகையால் அவை, மழை மிகுதியாகவுள்ள மலையாள நாட்டிலும், திருவாங்கூர் நாட்டிலுமே பெரும்பாலும் வளர்கின்றன. இம்மரத்திலிருந்து கிடைக்கக்கூடிய பாக்கு நம் நாட்டில் பெரும்பான்மையோரால் வெற்றிலையுடன் உபயோகிக்கப்படுகிறது.

ஈந்து அல்லது ஈச்ச மரம் இவ்வருக்கத்தைச் சேர்ந்த மற்றொரு மரம். நீர்வளம் மிகுதியாக இல்லாத இடங்களிலும் இம்மரம் வளரும். நமது நாட்டில் சில இடங்களில் ஈச்ச மரங்கள் காணப்படும். ஈச்சம் பழங்கள் தின்பதற்கு உருசியானவை. அரேபியாவிலும், பாரசீகத்திலும் ஈச்ச மரங்கள் மிகுதியாகப் பயிராகின்றன. அவற்றின் பழங்களே பேரீச்சம்பழங்கள்.



பேரீச்சம்பழம் ஒரு நல்ல உணவுப் பொருள். இம்மரத்திற்குப் பயிர் செய்வோரின் கவனம் வேண்டுவதில்லை. அவை தாமாகவே ஓங்கி வளரும்.

இந்நால்வகை மரங்களும் நமக்குப் பயன்படுபவைகளே. தென்னங் கட்டைகளும், பனங்கட்டைகளும் தூண்களாகவும், விட்டங்களாகவும் பயன்படும். தென்னை ஓலைகளால் கீற்று முடையப்படு

கிறது. தென்னங் கீற்றுகளும், பனை மட்டைகளும் கூரை வேயப் பெரும்பாலும் உபயோகமாகின்றன. தேங்காயிலிருந்து எண்ணெய் எடுக்கப்படுகிறது. தேங்காயும் நுங்கும் உணவுப் பொருளாகும். இளநீர் ஓர் இனிய பானம்; பதநீரையும் பலர் பருகுகிறார்கள். ஈச்ச மரத்தின் ஓலைகளிலிருந்து பாய் முதலியன முடையப்படும்.

இம்மரங்களின் பாளையைச் சீவி அதனடியில் ஒரு கலயத்தைக் கட்டித் தொங்க விட்டால், பாளையிலிருந்து சுரக்கும் சாறு கலயத்தில் நிரம்பும். இதைப் புளிக்க வைத்துத்தான் முன்பெல்லாம் 'கள்' தயாரித்தார்கள். இப்பொழுது புளிக்க வைக்காமல் அந்த இனிப்பான சாற்றிலிருந்து வெல்லம் தயாரிக்கிறார்கள்.

புலவர்கள், கொடையாளிகளின் தன்மைகளுக்குத் தென்னை, பனை, கமுகு ஆகிய மூவகை மரங்களின் இயல்பை உவமையாகக் கூறுவார்கள்.

தென்னம் பிள்ளையை மரமாகும் வரையில் கவனமாகப் பாதுகாத்து வளர்க்கவேண்டும். அவ்வாறு பாதுகாக்கப்பட்டால், மரமானபின் அது நல்ல பலனைத் தருகிறது. அதுபோல், தமக்கு ஒரு சமயம் இதம் அளித்தவருக்குக் கொடுத்து உதவுபவர்கள் கொடையாளிகளுள் மத்திமர் அல்லது நடுத்தரமானவர் எனப்படுவர்.

மக்களின் கவனத்தையும், பாதுகாப்பையும் எதிர்பாராமலே வளர்கிறது பனைமரம். தம்மைக் கவனத்துடன் வளர்க்காதவர், என்று கருதாமல் அவர்களுக்குப் பயன் அளிக்கின்றது. அதுபோல்,

*யாவராயினும் அவர்பால் உதவியை நாடாமல் கொடுப்பவர்கள் கொடையாளிகளுள் உத்தமர் அல்லது முதல் தரமானவர் ஆவர்.*

*மனிதரின் மிகுந்த கவனத்தினுல் தான் கமுகு செழிப்புறும்; வளர்ந்தபின் அவர்களுக்கு அது பலனை அளிக்கும். கவனம் குறையுமானுல் பலனும் கெடும். அதுபோல் தமக்கு எப்போதும் இதம் அளிப்பவர்களுக்கு அளிப்பவர்கள் ஒரு வகையார். அவர்கள் கொடையாளிகளுள் அதமர் அல்லது கடைசித் தரமானவர் எனப்படுவர்.*

*நம் முன்னேர் இயற்கை நுட்பங்களை ஆராய்ந்து அறிபவர் அன்றே!*

| | | |
|---|---|---|
| மரவகை | கமுகு | ஓங்கி உயர்ந்து |
| மட்டைகள் | ஈந்து | இயல்புடையவை |
| ஆற்றேரம் | முற்றின | மணற்பாங்கான |
| கடற்கரை | ஊன்றி | நெற்றுத் தேங்காய் |
| மேட்டுப்பாங்கு | கலந்த | தென்னம்பிள்ளை |
| ஏட்டுச்சுவடி | நட்டு | பலனைத்தரும் |
| கீற்று முடைய | சிரமம் | பேரீச்சம்பழம் |
| உவமையாக | நாற்று | கொடையாளி |
| கருதாமல் | வருக்கம் | உத்தமர் |
| நாடாமல் | ஊறும் | மத்திமர் |
| யாவராயினும் | தரம் | அதமர் |

### கேள்விகள்

1. *தென்னை இனத்தைச் சேர்ந்த மற்ற மரங்கள் எவை?*

2. *கமுகு எங்கே அதிகமாக விளைகிறது?*

3. *பனையின் தன்மை என்ன? ஈச்சமரம் எங்கே அதிகம்?*

பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி :
கருது, முற்றின, ஊறும்.

2. பின்வரும் வாக்கியங்களை இரண்டாகப் பிரித்துக் கூறு :

(i) முற்றின தேங்காய் நெற்றைப் பூமியில் ஊன்றிப் பயிர் செய்வார்கள்.

(ii) தென்னையைப்போல அதிக நீர்வளமுள்ள பூமி பனைக்கு வேண்டியதில்லை.

3. பின்வரும் வாக்கியங்களைக் கவனித்துப்படி :

(i) என் தந்தை நாளை வருவார்.

(ii) என் சொல் கேளாவிடில் உன்னை அடிப்பேன்.
இவற்றில் பயனிலைகளால் குறிக்கப்படும் தொழில்கள் எதிர்காலத்தை (இனிமேல் வரப் போகிற காலத்தை)ச் சேர்ந்தவை. ஆகையால் **வருவார், அடிப்பேன்** என்ற வினைச்சொற்கள் எதிர்காலம் காட்டுகின்றன. எதிர்காலத்தைக் காட்டும் இடைநிலைகள் **வ், ப்** என்பனவாம்.

4. பின் வருவனவற்றில் எதிர்கால வினைச்சொற்களை அமை :

(i) என் பெற்றோர் நாளை ஊருக்கு———. (போ)

(ii) மாணவர்கள் நன்றாக———. (உழை)

(iii) நீங்கள் இவ்வேலையை———. (செய்)



## 20. தேகப்பயிற்சி

தேகப் பயிற்சி செய்வோம்—வரிசையாகச்
சேர்ந்து நிமிர்ந்து நிற்போம்
வேகமாய்க் கால்வீசி—நடப்போம்
வேங்கைபோற் பாய்ந்திடுவோம்.

சோம்பலை வெட்டியெறி—இடுப்பைத்
தோகை மயில்போல் வளை
'ஓம்' என் றுயிர்த்துவிடு—மார்பு விரிந்
தூரம்பெற் றோங்கிடவே.

கையை மடக்கிடுவோம்—முன்னும் பின்னும்
கையைச் சுழற்றிடுவோம்
பையஉட் கார்ந்தெழுவோம்—பஸ்கி செய்து
பாதத் தசை வளர்ப்போம்.

வேர்த்துச் சதைபுரளக்—கசரத்
வேண்டு மட்டுஞ் செய்வோம்
சேர்த்துக் கரங்களெல்லாம்—வட்டமாய்ச்
சேர்ந்து நட்மிடுவோம்!

—சுவாமி சுத்தானந்த பாரதியார்

| வேங்கை | பைய | உரம் |
| --- | --- | --- |
| சோம்பல் | பஸ்கி | கசரத் |

# 21. இந்திய விஞ்ஞானிகள்

நாகரிகம் பெருகுவது விஞ்ஞானக் கலையினால் ஆகும். உலகத்திலுள்ள பொருள்களையும், இயற்கையையும் பற்றி ஆராய்ச்சி செய்து அவைகளில் அமைந்துள்ள சக்தியைக் கண்டுபிடிப்பதே விஞ்ஞானக் கலை.

வெகு காலத்திற்கு முன்னே நம் முன்னோர்கள் விஞ்ஞானத்தில் ஓரளவு அறிவு பெற்றிருந்தார்கள். கலைகள் பெருகுவதற்கேற்ற கலாசாலைகள் அக்காலத்தில் இல்லை. அவர்கள் தாமறிந்தவைகளை இரகசியமாக வைத்துக் கொண்டிருந்தார்கள். ஆகவே நூல்கள் நம் நாட்டில் இருக்குமிடம் தெரியாமல் மறைந்துள்ளன.

சென்ற சிலநூற்றாண்டுகளாக மேனாட்டார்களே விஞ்ஞான ஆராய்ச்சியில் முயற்சி செய்து பல

புதுமைகளைக் கண்டுபிடித்து வருகிறார்கள். மேனாட்டுக் கல்வியின் உதவியால் இந்தியர்களும் இப்போது அக்கலைகளில் தேர்ச்சி பெற்று விளங்குகிறார்கள். சில ஆண்டுகளாக இந்தியாவிலும் விஞ்ஞான ஆராய்ச்சி புத்துயிர் பெற்றுள்ளது. இந்தியர்களுள் சிலர் விஞ்ஞான ஆராய்ச்சியில் உலகப் பிரசித்தி பெற்றனர். அவ்வாறு சிறப்புப் பெற்ற இந்திய விஞ்ஞானிகள் யாவர் என அறிய நீங்கள் ஆவல் கொள்வீர்கள் அல்லவா?

ஸர் சி. வி. ராமன் என்பவர் இப்போது விளங்கும் இந்திய விஞ்ஞானிகளுள் முதன்மையானவர்.



அவருடைய முழுப் பெயர் வேங்கடராமன் என்பது. அவர் 1886-ம் ஆண்டில் திருச்சிராப்பள்ளியில் பிறந்தார். அவர் அரசாங்க உத்தியோகத்தில் சிலகாலம் அமர்ந்திருந்தார்; பிறகு சர்வ கலாசாலையில் பேராசிரியராக இருந்தார். ஆரம்பத்திலிருந்தே அவர் ஆராய்ச்சித் துறையில் அவாவும், முயற்சியும்

கொண்டார். ஆதலால் ஆசிரியர் தொழிலிலிருந்து விலகிக் கொண்டு, விஞ்ஞான ஆராய்ச்சியிலேயே முற்றிலும் பாடுபடலானார். வாத்தியங்களின் சப்தங்களைக் கவனித்து ஆராய்ந்து, சில புதியவிஷயங்களைக் கண்டுபிடித்தார்; ஒளியைப் பற்றியும் பல உண்மைகளைக் கண்டுபிடித்தார். வெளிச்சம் சிதறும்போது, பல இயற்கை வர்ணங்கள் உண்டாகின்றன என்பதும் அவரால் கண்டுபிடிக்கப்பட்டது. அவர் கண்டுபிடித்த உண்மைகளுக்கு இராமனின் சித்தாந்தம் என்று உலக விஞ்ஞானிகள் பெயர் வழங்கினர். 1930-ம் ஆண்டில், உலகப் பரிசுகளிற் சிறந்ததாக விளங்கும் நோபல் பரிசு அவருக்கு அளிக்கப்பட்டது. அப்பரிசு 8000 பவுன் ஆகும். அவருடைய ஆராய்ச்சித் துணையால், இந்திய நாடு விஞ்ஞானத்தில் உயர்வுறும் என்பது அறிஞர்கள் துணிபு.

தாவர ஆராய்ச்சியில் நிபுணராக விளங்கியவர்



ஸர் ஜகதீச சந்திர போஸ் என்பவர். அவர் ஒரு வங்காளி. தாவரங்கள் உயிரும் உணர்ச்சியு முடை

யவை ; நாம் அவற்றை ஓர் ஊசியால் குத்தினாலும் அவை உணர்ச்சியுற்றுத் துன்புறுகின்றன ; உணர்ச்சி நரம்புகள் தாவரங்களுக்கும் உண்டு ; அவைகளும் உறங்குகின்றன ; இவ்வுண்மைகளைத் தாமே கண்டு பிடித்த நுண்ணிய கருவிகளைக் கொண்டு நிரூபித்துக் காண்பித்தார். போஸ் பிறந்தது 1858-ஆம் ஆண்டு ; அவர் இறந்தது 1937-ஆம் ஆண்டு.



ஸர் பி. ஸி. ரே என்பவர் மற்றொரு இந்திய விஞ்ஞானி ஆவார். அவரும் வங்காளியே. வங்காளத்தில் ரசாயன சாலை ஒன்று அவரால் நிறுவப் பெற்றது. மருந்துப் பொருள்கள் ரசாயன முறையில் அவரால் ஆராய்ச்சி செய்யப்பட்டன. அவருடைய ரசாயன ஆராய்ச்சி இந்தியாவிற்கு உலகில் புகழை உண்டாக்கியுள்ளது.

| | | |
|---|---|---|
| ஆராய்ச்சி | விஞ்ஞானக்கலை | புத்துயிர் |
| புதுமை | போராசிரியர் | உலகப் பிரசித்தி |
| துணிபு | சிதறும்போது | ஊடுருவி |
| தசை | கோபல் பரிசு | நிரூபித்து |
| நரம்பு | இரசாயன சாலை | நுண்ணிய கருவி |

## கேள்விகள்

1. மூன்று பெரும் இந்திய விஞ்ஞானிகள் யாவர்?
2. ஸி. வி. ராமன் எவ்வாராய்ச்சியில் நிபுணர்?
3. போஸ் கண்டுபிடித்த உண்மைகள் யாவை?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி:

   நிரூபி, ஆராய்ச்சி, ஊடுருவி.

2. கீழ்க்கண்ட வாக்கியங்களைச் சேர்த்து ஒரே வாக்கியமாக்கு:

   (i) நாம் நன்றாய்ப் படிக்க வேண்டும். இல்லாவிடில் மூடர்களாவோம்.

   (ii) அவன் காட்டிற்குச் சென்றான். ஒரு மரத்தை வெட்டினான். அதைச் சுமந்து வந்தான்.

3. பின் வரும் வினைச் சொற்களின் காலத்தையும் அக்காலத்தைக் காட்டும் இடை நிலையையும் எழுது:

   (i) மழை பெய்கிறது.

   (ii) சூரியனை மேகம் மறைத்தது.

   (iii) மன்னன் நெறி தவறாது ஆள்கிறான்.

   (iv) நீங்கள் போவீர்கள்.



## 22. இரட்டைப் புலவர்

ஊனமுடையோர்க்கு யூகம் அதிகம் என்பது உலக வழக்கு. பொதுவாகப் பிறவிக் குருடர்கள், நொண்டிகள், ஊமைகள் இவர்களின் குணாதிசயங்களை உற்றுக் கவனித்தால், அவர்கள் பேச்சிலும், யோசனையிலும் கூர்மையுடையவராக இருப்பது புலப்படும். அங்கத்தினால் அவர்கள் குறைவுற்றனர் என்று கருணை கொண்டே, கடவுள் அவர்களுக்கு யூகத்தை ஓரளவு அதிகம் அளிக்கின்றார் போலும்!

ஊனமுடைய இருவர் சிறந்த புலவர்களாய் விளங்கினார்கள். அவர்கள் இரட்டைப்புலவர் என்ற சிறப்புப் பெயர் பெற்றார்கள். இரட்டைப் புலவர்களுள் ஒருவர் முடவர்; மற்றொருவர் குருடர்; இக் குறைகள் அவர்களுக்குப் பிறப்பிலேயே ஏற்

பட்டவை. முடவரும் குருடரும் ஒருவருக்கொருவர் அத்தை மகனும், மாமன் மகனும் ஆவார்கள். அவ்வுறவு கொண்டு அவர்களிருவரும் ஒருவரோடொருவர் நேசப்பான்மையும், ஒற்றுமையும் உடையவராய் செல்லுமிடமெல்லாம் சேர்ந்தே செல்வர். குருடராயிருந்தவர் நொண்டியாயிருந்தவரைத் தம்முடைய தோள்களின் மீது உட்கார வைத்துக் கொள்வர். முடவர் வழியைக் கூறக் குருடர் அவ்வழியின்படியே, அவரையும் சுமந்துகொண்டு தாமும் நடந்து செல்வார். இவ்வாறே அவர்கள் தம் வாழ்நாளில், தலங்கள் பலவும் யாத்திரையாகச் சென்றார்கள்.

அவ்விருவரும் வேறு எத்தொழிலும் செய்யவியலாது அல்லவா! தமிழ் மொழியில் நல்ல புலமையைப் பெற்று, எடுத்த எடுப்பில் கவிகள் பாடும் வன்மையைப் பெற்றார்கள். உறுப்புக் குறைந்த அவர்கள் எவ்வாறு சிறந்த புலமையைப் பெற்றார்கள் என்பது விந்தையே. அவர்கள் செல்லுமிடங்களில் ஆங்காங்கு வசிக்கக்கூடிய பிரபுக்களைப் பற்றியும் அவர்கள் தரும சிந்தனை யுடையவர்களா என்பதைப் பற்றியும் விசாரித்துத் தெரிந்து கொள்வார்கள். பிறகு அவர்கள்பால் அணுகி, ஒருவர் ஒரு செய்யுளைத் தொடங்கி, அச்செய்யுளின் முதல் இரண்டு அடிகளை மட்டும் பாடி நிறுத்துவார்; உடனே மற்றவர் அதன் தொடர்ச்சியாகப் பின்னிரண்டு அடிகளையும் பாடி முடிப்பார். செய்யுள் முற்றுப் பெற்றபின், அதன் கருத்தும் பொருத்தமாக இருக்கும்; பார்ப்பவர்களுக்கு நான்கு அடிகளும் ஒருவர் பாடியவைபோலவே தோன்றும். தமிழ்ப் பற்றும், அறத்தில் மனமும் உடையவர்கள் இரட்டையர்களையும் அவர்கள்

இயற்றிய செய்யுட்களையும் சாலப் போற்றுவார்கள். பிரபுக்கள் பலர் அவர்களைப் பொருள் நனி கொடுத்து ஆதரித்தார்கள். ஈயாத உலோபிகளும் இரட்டையரின் கவியைக் கேட்டால், கொடையாளிகள் ஆயினர்.

அப்புலவர்கள் பாடிய செய்யுட்களைத் தனிப் பாடல் திரட்டு என்ற நூலில் நீங்கள் பரக்கக் காணலாம். அவற்றுள் இரண்டொரு செய்யுட்களை இப்பாடத்தில் படிப்போம்.

அண்ணன், தம்பி இருவர்களில் தம்பி அப் புலவர்களுக்குப் பொருள் வழங்கினன். அவ்வாறு கொடுப்பதை அண்ணல் தடுக்க முயன்றான். அப் போது பின்வரும் செய்யுளைப் பாடவும், இளையவன் புலவர்களைச் சமாதானம் கூறித் தேற்றி, பொருளை யும் கொடுத்தனுப்பினன்.

தேன்பொழியும் வாயான் திருவேங்க டேசனுடன்
ஏன்பிறந்தான் பாவி இனியான்காண்?—யான்சொலக்கேள்
சீதேவி யாள்பிறந்த செய்யதிருப் பாற்கடலுள்
மூதேவி ஏன்பிறந்தாள் முன் ?

இரட்டையர் தாம் பரிசில் பெற்று வைத்திருந்த பணமுடிப்பை, ஒரு பிள்ளையார் கோவிலில், சிலைக் குப் பின் மறைத்து வைத்துவிட்டுத் தூங்கினார்கள். துயிலெழுந்து பார்க்கையில், அம்முடிச்சில் பொரு ளைக் காணாதபோது வருந்திச் சினந்து பின்வரும் செய்யுளைப் பாடினார்கள். செய்யுள் பாடப் பெற்ற பின், அம்முடிச்சில் தாம் வைத்திருந்த பொருள் முழுமையும் சிறிது கூடுதலாக இருக்கக் கண்டு மகிழ்ந்தனர். ஐம்முகன், அவர்களின் செய்யுளைத் தாமும் கேட்பதற்காக அவ்வாறு சோதித்தார் போலும்!

தம்பியோ பெண்திருடி தாயா ருடன்பிறந்த
வம்பனே செய்திருடு மாமாயன்—அம்புவியில்
மூத்தபிள்ளை யாரோ முடிச்சவிழ்த்தீர் போமோகாண்
கோத்திரத்திற் குள்ள குணம்!

இரட்டையரைப்போலவே வேறு எண்ணிறந்த புலவர்கள் நம் தமிழகத்தில்வாழ்ந்திருந்தனர். அவர்கள் இயற்றிய செய்யுட்கள் பொருட்சுவையும், சொற்சுவையும் பொருந்தி விளங்கும். அவற்றைப் படிப்பதால் அறிவு நுட்பமும்,களிப்பும் உண்டாகும்.

| | | |
|---|---|---|
| யூகம் | உலகவழக்கு | எடுத்த எடுப்பில் |
| ஊனம் | உறுப்புக்குறைவு | பொருத்தமாக |
| அங்கம் | தருமசிந்தனை | முற்றுப்பெற்றபின் |
| ஓரளவு | விசாரித்து | தனிப்பாடல் |
| விந்தை | தொடர்ச்சியாக | கோத்திரம் |
| சால | உலோபி | வம்பன் |
| பரக்க | சமாதானம் | மாமாயன் |
| தேற்றி | ஐம்முகன் | அறிவுநுட்பம் |
| கூடுதலாக | சோதித்தார் | சொற்சுவை |
| பொருட்சுவை | குணாதிசயம் | |

## கேள்விகள்

1. இரட்டையர் பாடிய செய்யுட்களுள் ஒன்று கூறுக.
2. அவர்களுக்கு ஏன் அப்பெயர் வழங்கி வந்தது?
3. அவர்கள் எவ்வாறு வாழ்ந்து வந்தார்கள்?

## பயிற்சி

1. பொருள் கூறு:
ஊனம், விந்தை, ஐம்முகன், உலோபி, தேற்றி.

2. இப்பாடத்தில் வந்துள்ள பாடல்களுக்குப் பதவுரை கூறு.

3. பின்வரும் வாக்கியங்களில் உள்ள வினைச் சொற்களை எடுத்து, அவை எவ்வகை வினைச்சொல் என்றும் அவற்றின் காலம் என்ன என்றும் கூறு :

(i) அழுக்கு அடைந்த ஆடையை அணிகிறாய்.
(ii) புசித்துச் சென்றோம்.

4. கீழ்வரும் வாக்கியங்களிலுள்ள பிழைகளைத் திருத்தி எழுது :

(i) காகம் ஒரு பரவை.
(ii) வாளால் காயை அறி.
(iii) தென்னந்தோப்பில் எத்தனையோ மரங்கள் இருந்தது.

# 23. சோணாசலத்தின் அதிட்டம்

சோணாசலம் பட்டு நெசவு செய்து வாழ்க்கை நடத்தி வந்தான். பணத்தின் மதிப்பு சிறிதும் அவனுக்குத் தெரியவில்லை. பணத்தை எடுத்துக் கொண்டு வெளியே சென்றால், உபயோகமில்லாத விஷயங்களில் அதைச் செலவழித்து விட்டுத்தான் திரும்புவான். அவனுடைய இயல்பை அறிந்த ஜனங்கள், அவனை எளிதில் ஏமாற்றிப் பணம் பறித்துச் செல்வார்கள்.

வியாபாரத்துக்காக அவன் சென்றால், பிறர் கேட்ட விலையைக் கொடுத்துப் பொருளை வாங்குவான். தன்னிடமுள்ள பட்டாடை முதலியவற்றை விற்கும்பொழுது எவ்வளவு குறைந்த விலை கொடுத்

தாலும் வாங்கிக் கொள்வான். அவன் அவ்வளவு முட்டாளாக இருந்தமையால், அவனுடைய மனைவியே வியாபார விஷயங்களைக் கவனித்துக் கொண்டாள். சோணாசலத்தினிடம் அவள் பணம் கொடுப்பதே கிடையாது.

ஒரு நாள் சோணாசலம் தானே சந்தைக்குப் போய் வியாபாரம் செய்யவேண்டும் என்று தீர்மானித்தான். ஒரு கட்டுப் பட்டாடைகளை எடுத்துச் சென்றான். ஒரு வியாபாரியிடம் அவற்றை நூறு ரூபாய்க்கு விற்றான். பணத்தோடு வீட்டுக்குத் திரும்பிச் சென்றிருக்கலாமல்லவா? சோணாசலம் அப்படிச் செய்யவில்லை.

சந்தையில் ஒருவன் ஒரு கழுதையை விற்பதற்காக நின்று கொண்டிருந்தான். கழுதையைப் பார்த்த சோணாசலம் அதை வாங்க விரும்பினான். தன் வீட்டில் மூட்டை சுமக்கக் கழுதை உதவியாயிருக்கும் என்பது அவன் எண்ணம்.



சோணாசலம், "ஐயா, இந்த நூறு ரூபாயையும் வைத்துக்கொண்டு கழுதையை எனக்குக் கொடுப்பீரா?" என்று சொந்தக்காரனிடம் கேட்டான். நூறு அணாவும் பெறாத கழுதைக்கு நூறு ரூபாய் கொடுத்தால் யார்தான் வேண்டாமென்பார்கள்? சோணாசலம் கழுதையை வாங்கிக் கொண்டான். ஆனால் அது முரட்டுப் பிடிவாதமுள்ள மிருகமாயிருந்தது.

அதைத் தன் வீட்டுக்கு நடத்திச் செல்ல அவனால் இயலவில்லை. இந்த வேடிக்கையை மற்றொரு வியாபாரி பார்த்துக் கொண்டிருந்தான். சோணாசலம் அவனிடம் சென்று, "ஐயா, இந்தக் கழுதைக்கு எவ்வளவு விலை கொடுப்பீர்?" என்று கேட்டான்.

வியாபாரி, "மூன்று ரூபாய் கொடுத்தால் அதிகம்தான்" என்று பதிலளித்தான்.

சோணாசலம் அவனுக்குக் கழுதையை விற்று, மூன்று ரூபாயைப் பெற்றுக் கொண்டான். வழியில் உருளைக்கிழங்கு வியாபாரி ஒருவனிடம் ரூபாயைக் கொடுத்து ஒரு மூட்டை உருளைக்கிழங்கு வாங்கினான். சிறிது தூரமும் அவனால் மூட்டையைத் தூக்கிச் செல்ல முடியவில்லை; அவ்வளவு பளுவாயிருந்தது. அவ்விடத்தில் ஒரு மீன் கடை இருந்தது. ஒரு மூட்டை உருளைக் கிழங்கையும் மீன் வியாபாரியிடம் கொடுத்து விட்டு, சற்றுப் பெரிய மீன் ஒன்றை வாங்கினான்.



சோணாசலம் வீட்டுக்குச் சென்று மனைவியிடம் மீனைக் கொடுத்தான். கொண்டு சென்ற பட்டுத் துணியை நூறு ரூபாய்க்கு விற்றது முதல், மீன் வாங்கினது வரை நடந்ததையெல்லாம் தன் மனைவியிடம் அவன் சொன்னான். அவள் சோணாசலத்தை மிகவும் கோபித்தாள். "நூறு ரூபாய் கொடுத்து, இந்த மீனைத்தானா வாங்கி வருவது?" என்று கேட்டாள்.

மீனை அறுத்தபொழுது அதன் வயிற்றில் விலை மதிப்பிட முடியாத பெரிய முத்து ஒன்று இருந்தது.



அதைக் கண்ட சோணாசலத்தின் மனைவிமகிழ்ச்சி பொங்க, "இதன் விலை பல்லாயிரம் ரூபாய் இருக்கும் போலிருக்கிறதே!" என்று கத்தினாள்.

சோணாசலம், "பார்த்தாயா என் திறமையை! நூறு ரூபாய்ப் பிச்சைக் காசைக் கொடுத்துவிட்டு, விலை உயர்ந்த முத்தை விழுங்கிய மீன் வாங்கி வந்திருக்கிறேன். நீயோ எனக்குப் பணத்தின் மதிப்புத் தெரியாது என்கிறாயே!" என்றான்.

| | | |
|---|---|---|
| இயல்பு | அதிட்டம் | பெறாத |
| பறித்து | மதிப்பிட | பிச்சைக்காசு |

கேள்விகள்

1. சோணாசலத்தின் இயல்பென்ன?

2. பட்டாடைகளை விற்றபிறகு அவன் வேறு என்ன என்ன பொருள்களை வாங்கினான்?

3. சோணாசலத்திற்கு ஏற்பட்ட அதிட்டம் யாது?

4. சோணாசலம் தன் நண்பனிடம் கூறுவதுபோல் இந்தக் கதையை எழுது.

பயிற்சி

1. பின்வரும் வார்த்தைகளைச் சொந்த வாக்கியங்களில் உபயோகி:

இயல்பு, மதிப்பிடு, அதிட்டம்.

2. பின்வரும் சொற்களின் அர்த்தம் விளங்கும்படி வாக்கியங்களில் உபயோகி:

(i) கரி, கறி. (ii) அரை, அறை.

3. பின்வரும் வாக்கியங்களைச் சேர்த்து ஒரே வாக்கியமாக்கி எழுது:

(i) பணத்தை எடுத்துக்கொண்டு வெளியில் செல்வான். அதை உபயோகமில்லாத விஷயங்களில் செலவழிப்பான்.

(ii) அவன் முட்டாளாக இருந்தான். அவனுடைய மனைவியே வியாபார விஷயங்களைக் கவனித்தாள்.

# 24. ஆடைகள்

உடலின் தோற்றத்தை அழகு செய்வன ஆடையும், அணியும். அவற்றுள் ஆடைகளே இன்றியமையாதவை. நாகரிகத்தில் முதன்மையாகக் கொள்ளப் படுபவை ஆடைகள்.

மக்கள் வசிக்கும் இடத்தின் தன்மையையொட்டியும், அவர்கள் செய்யும் தொழில்களை யொட்டியும் ஆடைகளின் வகைகள் மாறுபடும். குளிர் மிகுந்த நாடுகளில் வசிப்பவர் தடித்த கம்பளி ஆடைகளை விரும்புகிறார்கள். வெப்ப மிக்க நாடுகளில் வசிப்பவர்கள் பருத்தி நூலாலாகிய மெல்லிய ஆடைகளையே பெரும்பாலும் விரும்புகிறார்கள். வயல்களில் வேலை செய்கிறவர்களையும், நாற்காலிகளில் அமர்ந்து வேலை செய்கிறவர்களையும், கைத்தொழில்கள் செய்கிறவர்களையும் பாருங்கள். அவர்களுடைய வேலைகளுக்கு

ஏற்றனவாயிருக்கும்படி ஆடைகளின் வகையும் மாறுகிறது. உத்தியோக முறையில் அவர்கள் செய்யும் பணிக்கு ஏற்றபடி ஆடைகள் அணிவது வழக்கமாகக் கொள்ளப்படும். ஒருவர் தம் உத்தியோக முறையில் உடுத்து வரும் ஆடையைக்கொண்டு அவர் ஒரு வக்கீல், உபாத்தியாயர், போலீஸ் இலாகாவினர், வைத்தியர், தொழிலாளி என்ற விவரங்களை மற்றவர்கள் அறியக்கூடும்.

பொதுவாக ஆடைகள் மனத்திற்கு நிறைவைத் தரும். சரியான ஆடையில்லாவிடில், மனம் தெளிவற்றும், சுறுசுறுப்பில்லாமலும் இருக்கும். "ஆடையில்லா மனிதன் அரை மனிதன்" அன்றோ! ஆடைகள் செவ்வையாகவும், சுத்தமாகவும் இருக்க வேண்டும். "இரக்கப் போனாலும், சிறக்கப்போ" என்பது பழமொழி. இதனால் வீண் ஆடம்பரமான ஆடைகள் அணியவேண்டுமென்பது கருத்தல்ல. தேவையில்லாத வகையில், ஆடம்பரமான ஆடைகள் அணிந்து திரிகின்றவர்களை 'வீணர்' என்றும் பொருளின் அருமை தெரியாதவர்கள் என்றும் உலகம் இகழும்.

காலப்போக்கில் ஆடைகளின் வகையும் பலவாறு மாறுகிறது. அஃது நாகரிகமாகவும் கொள்ளப்படும். நமது நாட்டில் சட்டைகளைப்பற்றித் தெரியாத காலம் ஒன்று இருந்தது. இப்போது சட்டை அணியாதவர்களைப் பிறர் சட்டை செய்வதில்லை.

இவ்வாறு நம் வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாகிய ஆடைகளை, நம் தேவைக்குத் தக்கபடி நாமே தயார் செய்யவேண்டும். ஆடைகளுக்கு அந்நிய

நாட்டினரை எதிர் பார்ப்பது கூடாது. 'தன் கையே தனக்கு உதவி' என்பதை நாம் உணரவேண்டும். இதுபற்றியே காந்தியடிகள் ஒவ்வொருவரும் சிறிது நேரமாவது நூல் நூற்கவேண்டும் என்றும், "கைத் தறி நெசவை விருத்தி செய்ய வேண்டுமென்றும் வற்புறுத்தினர். 'செய்யும் தொழிலெல்லாம் நெய் யும் தொழில் இனிது' என்பது ஒரு பழமொழி. அதாவது நெய்யும் தொழில் பாவமற்றதும், மேன்மையானதும் ஆகும். நெசவுத் தொழிலாளர் கள் நம் நாட்டில் எல்லாப் பாகங்களிலும் தொன்று தொட்டு வாழ்கிறார்கள். கைவன்மையைக் கொண்டே அவர்கள் பல ரகங்களில் மிக்க நேர்த்தியான ஆடை களை நெய்யக்கூடியவர்கள். உள்நாட்டு நெசவை ஆதரிக்க வேண்டியது பொதுமக்களின் கடமை.

பள்ளிப் பிள்ளைகள் பற்பல பாடங்களைக் கற்றுக்கொள்வது போலவே, நூல் நூற்பதற்கும் பயில வேண்டும். தினசரிக் கடமைகளுள், நூற்பதை யும் ஒன்றாகக் கொண்டு நெய்தற்றொழிலுக்கு முற் போக்கை அளிக்கவேண்டும்.

| | | |
|---|---|---|
| தோற்றம் | சட்டை | நிறைவு |
| வெப்பம் | அமர்ந்து | தெளிவற்று |
| ரகம் | தினசரி | முற்போக்கு |
| இரக்க | இலகுவான | செவ்வையாக |
| சிறக்க | உத்தியோகம் | ஆடம்பரம் |
| தேவை | அருமை | காலப்போக்கு |
| | கைவன்மை | |

### கேள்விகள்

1. ஆடைகளைப்பற்றி வழங்கும் பழமொழி ஒன்று கூறு.

2. ஆடைகளின் வகை எவ்வாறு மாறுபடும்?

3. பள்ளிப் பிள்ளைகள் தினசரிக் கடமைகளில் ஒன்றாகக் கொள்ளவேண்டியது யாது?

### பயிற்சி

1. எதிர்ப்பதம் கூறு:
வெப்பம், மிக்க, ஏற்ற, தேவையில்லாத.

2. கீழ்க்கண்ட வாக்கியங்களைப் பிழையின்றி எழுது.
(i) ஆடைகளே இன்றியமையாதது.
(ii) கந்தன் வேலனோடு வந்தார்கள்.
(iii) கந்தனும் வேலனும் வருகிறான்.

## 25. மாதிரிக் கடிதங்கள்

வெளியூரில் உள்ள ஒருவருக்கு ஏதேனும் சமாசாரம் தெரிவிக்க வேண்டுமானால், கடிதம் எழுதித் தபாலில் அனுப்புகிறோம். உள்ளூரிலும் நேரில் போக முடியாவிட்டால் கடிதம் மூலம் ஒருவருக்குச் செய்தி அனுப்புகிறோம்.

வெளியூர் வியாபாரிகளிடமிருந்து சரக்குகள் வரவழைக்க வேண்டுமானால் கடிதத்தின் மூலமாக எழுதித் தெரிவிக்கிறோம். உபாத்தியாயரிடம் இரஜா கேட்க வேண்டுமானாலும், அதிகாரிகளுக்கு ஏதேனும் தெரிவிக்க வேண்டுமானாலும் நம் வேண்டுகோளை விண்ணப்பத்தில் எழுதித் தெரிவிக்கிறோம்.

மாதிரிக் கடிதங்கள் சில இங்கே காட்டப் படுகின்றன.

## (1) உறவினருக்கு எழுதும் கடிதம்

அன்பரகம்,
18, ஆண்டார் தெரு,
திருச்சிராப்பள்ளி,
15—10—48.

க்ஷேமம்.

அன்புள்ள மாமா அவர்களுக்கு, கண்ணப்பன் வணக்கம். இவ்விடத்தில் எல்லாம் நலமே. அவ்விடத்திய நலச் செய்திகளை அறிய விரும்புகிறேன்.

தங்களையும், அத்தையையும் பார்க்கவேண்டுமென்று எல்லோரும் ஆவலாய் இருக்கிறோம். ஆகையால் இம்மாதக் கடைசியில் வரும் தீபாவளிப் பண்டிகைக்கு அத்தையை அழைத்துக்கொண்டு தாங்கள் இங்கே வரவேண்டுமென்று கேட்டுக் கொள்ளும்படி அப்பாவும் அம்மாவும் என்னை இக் கடிதம் எழுதச் சொன்னார்கள்.

தங்கள் வரவை நாங்கள் ஆவலுடன் எதிர் பார்க்கிறோம்.

இங்ஙனம்,
தங்கள் அன்புள்ள
கண்ணப்பன்.

## (2) புத்தக வியாபாரிக்கு எழுதும் கடிதம்

விஜயன் புத்தகசாலை,<br>திருச்சிராப்பள்ளி.

ஸி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ்,<br>புத்தக வியாபாரம்,<br>தம்பு செட்டித் தெரு,<br>சென்னை.

ஐயா,

பின் கண்ட புத்தகங்களை வி. பி. தபாலில் அனுப்பி உதவுக.

4 பிரதிகள், திருக்குறள் பரிமேலழகர் உரை, கழகப்பதிப்பு.

4 பிரதிகள், நாலடியார், புத்துரை, கழகப் பதிப்பு.

2 பிரதிகள், தமிழ்ப் பேரகராதி, இ. மா. கோ. பதிப்பு.

விஜயன்,<br>உரிமையாளர்.

20—10—48

## (3) ஆசிரியருக்கு எழுதும் கடிதம்

திருச்சிராப்பள்ளி ஆரியன் ஸ்கூல் 5-வது வகுப்பு ஆசிரியர் அவர்களுக்கு:— ஷை வகுப்பு மாணவன் சுந்தரம் வணக்கமாய் எழுதிக்கொண்ட விண்ணப்பம்.

ஐயா,

என் அன்னை உடல் நலம் இல்லாமல் இருக்கிறார்கள். நான் அவர்களுக்கு வேண்டிய பணிவிடைகள் செய்ய வேண்டியிருப்பதால், இன்று முதல் மூன்று நாட்களுக்கு மட்டும், எனக்கு இரஜா அளிக்கும்படி தங்களை வேண்டுகிறேன்.

இங்ஙனம்,

22—9—48 தங்கள் வணக்கமுள்ள

சுந்தரம்.

## (4) நண்பனுக்கு எழுதும் கடிதம்

3, சின்னக்கடைத் தெரு,
திருச்சிராப்பள்ளி,
1—11—48.

நண்ப,

நலம். சில நாட்களாக உன்னிடமிருந்து கடிதமே வரவில்லை. ஆகையால் உன் நலன்களைப்பற்றி அறிய ஆவலுறுகின்றேன். இக்கடிதம் கண்டதும் நீ அன்புடன் பதில் எழுதுவாயாக. வருகிற டிசம்பர் விடுமுறையில், நீ இங்கு வந்து சில நாட்கள் தங்கிச் செல்ல வேண்டுமென்று விரும்புகிறேன்.

உன் அன்புள்ள

குணசீலன்.

பயிற்சி

1. உனக்குத் தேவையாயுள்ள புத்தகங்களை அனுப்பும் படி வெளியூரிலுள்ள புத்தக வியாபாரி ஒருவருக்கு எழுது.

2. உனக்கு ஒரு கடிகாரமோ பேனாவோ பரிசளிக்கும் படி உன் மாமாவுக்கு எழுது.

## 26. நன்றியுடைமை

மனிதர்களுக்கு அமையப் பெறவேண்டிய பண்புகளுள் நன்றியுடைமை ஒன்றாகும். நன்றி என்பது உதவி. ஒருவர் தமக்குச் செய்த உதவியை மறவாமல் இருத்தல் நன்றியுடைமை எனப்படும். நன்றியுடையவர்கள் இன்பம் அடைவார்கள். நன்றி மறந்தவர்கள் மிகவும் கடையர்கள் ஆவர்; இறுதியில் அவர்கள் அல்லற்படுவர். "நன்றி கொன்ற மகற்கு உய்வில்லை" என்பர் பெரியோர்.

பகுத்தறிவில்லாத மிருகங்களுள்ளும் நன்றியுள்ளவை உண்டு. நாய் மிகவும் நன்றியுள்ள பிராணி என்று நீங்கள் அறிவீர்கள். ஒரு கவளம் சோறு அளித்தவர்களை அது எப்போதும் மறப்பதில்லை. அது அவர்களிடம் தன் வாலை ஆட்டி நின்று களிப்பைத் தெரிவிக்கின்றது. அம் மிருகம் தன்னுடைய எஜமானனுக்கும், அவனுடைய பொருளுக்கும் மெய்யான காவலாக உழைக்கின்றது. பட்டிகளை உடையவர்கள் அப்பட்டிகளுக்குக் காவலாக நாய்களை வளர்க்கிறார்கள். வீடுகளிலும் பலர் காவலுக்காக நாய்களை வளர்க்கிறார்கள்.

காட்டில் வாழும் துஷ்ட மிருகமாகிய சிங்கம் ஒன்று, தன் காலில் தைத்த முள்ளை எடுத்துதவிய

ஓர் அடிமையைக் காப்பாற்றியது என ஒரு கதை வழங்கும். கொடிய நஞ்சுடைய நாகமும், தன்னைத் துன்புறுத்தாமல் பால் வார்த்தவர்களைக் கடிக்காமல் அகலும் என்பர். மிருகங்களில் பெரிதாகிய வேழமும், தன்னை உணவளித்து வளர்க்கும் பாகன் பால் நன்றியுடன் பழகுகிறது; அவன் ஏவும் வேலைகளைச் செய்கிறது. ஆகவே பகுத்தறிவும், மேன்மையும் பெற்ற மனித வர்க்கத்தார் தமக்குப் பிறர் செய்த நன்றியை மறக்கலாமா? 'உப்பிட்டவரை உள்ளளவும் நினை' என்பது பழமொழி யன்றோ!

நாம் யாரிடத்தில் நன்றியுள்ளவர்களா யிருக்க வேண்டும் என்பதைப் பற்றிக் கவனிப்போம். முதலாவதாகத் தாய் செய்த நன்றியை நாம் பாராட்ட வேண்டும். தாய் தன் குழந்தையைப் பத்து மாதம் சுமந்து பெற்றாள்; குழந்தை பிறந்தவுடனே அதைப் பரிந்து தன் கைகளில் எடுத்தாள்; பால் வார்த்தும், தொட்டிலிலிட்டுத் தாலாட்டியும், கொஞ்சியும், நோய் அணுகாமல் மருந்து அளித்தும் காப்பாற்றினாள். ஆடை அணிகளால் தன் குழந்தையை அழகு செய்து களித்தாள்.

அடுத்தபடியாகத் தந்தை செய்த நன்றியைப் பாராட்ட வேண்டும். வீட்டிற்கு வேண்டிய பொருளை ஈட்டுபவர் அவர். குழந்தையை வளர்ப்பதில் தாய்க்கு வேண்டிய உதவியைச் செய்பவர் அவர். தகப்பனார் தம் பிள்ளையைப் படிக்க வைக்கிறார்; அவர் தம் பிள்ளையை உபாத்தியாயர்பால் ஒப்படைத்து, நல்ல பயிற்சியை அளிக்கச் செய்கிறார்.

ஆசிரியர் அவர் குழந்தைகளின் மனத்தை களின் இளம்பிராயத்திலே நல்வழியில் திருப்புகிறார்;

அவர்களுக்குக் கல்வியறிவை ஊட்டுகிறார். பிற்காலத்தில் அவர்கள், நல்ல பிரஜைகளாக ஆவதற்கு வேண்டிய பயிற்சியை அளிப்பவர் ஆசிரியர். பிள்ளைகளுக்குத் தெய்வத்தின் தன்மையைப்பற்றி அறிவிப்பவரும் ஆசிரியர். ஆதலால் தான் மாதா, பிதா, குரு, தெய்வம் என்று வரிசைப் படுத்திக் கூறுவர் பெரியோர்.

சில பிள்ளைகள் இளமையில் மாமன், அத்தை முதலிய உறவினர்களிடத்திலோ, அல்லது வேறு பிறரிடத்திலோ வளர்வர்; அவர்களால் கல்வியும் அளிக்கப்படுவார்கள். யாராயினும் தம்மை வளர்த்தவர்களைப் பெற்றோர் போலவே கருதி மறவாமல் இருக்கவேண்டும்.

பொதுவாக உற்றபோது உதவும் எவரிடத்தும் நன்றி பாராட்டவேண்டும். தினையளவு உதவியை ஒருவர் செய்தாலும், அதைப் பனையளவாக எண்ணி அவர்களைப் போற்ற வேண்டும். நன்றி மறந்தவர்களை நாயினும் கடையரென்று உலகத்தார் தூற்றுவர். நன்றி பாராட்டுபவர்கள் என்றைக்கும் குறைவின்றி வாழ்வார்கள்.

| | | |
|---|---|---|
| நன்றி | உற்றபோது | துஷ்டமிருகம் |
| கடையர் | தினையளவு | தாலாட்டி |
| தூற்றுவர் | பனையளவு | அணுகாமல் |
| பிரஜை | வேழம் | இளம்பிராயம் |
| நஞ்சு | ஏவும் | தெய்வம் |
| ஈட்டுபவர் | ஒப்படைத்து | பால்வார்த்த |

## கேள்விகள்

1. நாம் யாரிடத்தில் நன்றி பாராட்ட வேண்டும்?

2. நன்றி மறந்தவர் எவ்வாறு ஆவர்: நன்றியுடையவர் எவ்வாறு வாழ்வர்?

3. பிள்ளைகளுக்குத் தந்தை செய்யும் உதவி யாது?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் உபயோகி:
தூற்று, ஈட்டு, ஒப்படை.

2. கோடிட்ட இடங்களில் தகுந்த வாக்கியங்களை அமைத்துப் பூர்த்தி செய்:

(i) நன்றி கொன்ற — — — உய்வில்லை.

(ii) — — — உள்ளவும் நினை.

(iii) தினையளவு — — ஒருவர் செய்தாலும் அதை — — — எண்ண வேண்டும்.

3. கீழ்க்கண்ட வாக்கியங்களில் தடித்த எழுத்திலுள்ளவை என்ன சொல் என்று எழுது:

(i) நாய் நன்றியுள்ள **பிராணி** என்று நீங்கள் **அறிவீர்கள்**.

(ii) **யானை** தன் **பாகன் ஏவும் வேலைகளைச் செய்கிறது**.

(iii) நான் **படிக்க விரும்புகிறேன்**.



# 27. பேபர்

## (சிறு நாடகம்)

### காட்சி — 1

பாத்திரங்கள் : பேபர், மந்திரிகள், சேனைத்தலைவர், ஹுமாயூன், ஒரு முஸ்லிம் துறவி முதலியோர்.

இடம்: ஆக்ரா—பாதுஷாவின் சபை.

காலம் :—பகல்

[பாதுஷா பேபரின் ஆஸ்தான மண்டபம், சிம்மாதனத்தில் பேபர் அமர்ந்திருக்கிறார். மந்திரி, பிரதானிகள் ஏற்ற இடங்களில் அமர்ந்துள்ளனர்.]

பேபர் : சேனாதிபதி! வங்காளத்தில் ஆப்கானியத் தலைவர்கள் நமது ஆணைக்குக் கீழ்ப் படிந்து விட்டார்களா ?

சேனைத்தலைவர்: ஆம், பாதுஷா! ஹிந்துஸ்தானம் முழுவதும் தங்களுடைய குடைக்கீழ் வந்து விட்டது.

பேபர்: ஷெர் கான் ஏதேனும் கிளர்ச்சி செய்கிருனே?

சேனைத்தலைவர்: நம் ஒற்றர்கள் அவனைக் கண்காணித்து வருகிருர்கள். அவன் கிளர்ச்சி செய்வதாகத் தெரியவில்லை.

பேபர்: பிரதானி! நம் தலைநகரத்து ஜனங்கள் நமது ஆட்சியைப்பற்றி என்ன பேசிக்கொள்கிருர்கள்!

பிரதானி: பாதுஷா! அன்றைக்குத் தாங்கள் மதயானையினல் கொல்லப்படவிருந்த குழந்தையைக் காப்பாற்றியது முதல், தங்களைத் தந்தையாகவே மக்கள் கருதுகிருர்கள்.

பேபர்: பிரதானி! இளவரசர் ஹுமாயூனுக்கு இன்னும் உடம்பு குணமாகவில்லையே! எத்தனையோ வைத்தியர்களும் ஹகீம்களும் பார்த்துக் கைவிட்டுவிட்டார்களே! அவரைக் குணப்படுத்த உமக்கு ஏதேனும் புதிய யோசனை தோன்றுகிறதா?

பிரதானி: பாதுஷா! நம் ராஜ்யம் முழுவதும் முக்கியமான நகரங்களில் எல்லாம் இதைப்பற்றிப் பறை அறையச் செய்திருக்கிறேம்; இளவரசரைக் குணப்படுத்தக்கூடிய ஹகீம் யாரேனும் சீக்கிரமே வரக்கூடும்.

[ வாயில் காப்போன் உள்ளே வந்து
பாதுஷாவைப் பணிகிறான். ]

வாயில் காப்போன் : ஸலாம், பாதுஷா !

பேபர் : என்ன விசேஷம் ?

வாயில் காப் : பாதுஷா ! சாந்தமான முகத்தை யுடைய பக்கிரி ஒருவர் தங்களைப் பார்க்க விரும்பு கிறார்.

பேபர் : பிரதானி ! தாங்கள் இவன் கூடவே சென்று அவரை அழைத்து வாருங்கள். நானும் இதோ வருகிறேன்.

[ வாயில் காப்போனுடன் பிரதானி செல்கிறார். ]

பேபர் : அல்லாவே இவரை அனுப்பியிருக்கிறார் ! இவருடைய கருணையால் என் மகன் பிழைத்து எழுந்திருப்பான் என்று என்மனம் நம்புகிறது.

[ பக்கிரி, பிரதானி உள்ளே நுழைகின்றனர். பேபர் தம் ஆசனத்திலிருந்து இறங்கி பக்கிரியை எதிர்கொண்டு அழைத்து, தமது சிம்மாதனத்துக்குப் பக்கத்திலுள்ள ஓர் ஆசனத்தில் அமர்த்துகிறார். பிறகு தமது ஆசனத்தில் அமர்கிறார். ]

பக்கிரி : அல்லா ஹோ அக்பர் !

பேபர் : தங்கள் வரவால் என் மனம் சாந்தி அடைந் துள்ளது.

பக்கிரி : பாதுஷாவுக்குத் தற்சமயம் ஒரு மனக் குறை இருப்பதாகக் கேள்விப்பட்டோம்.

பேபர் : தங்கள் வருகையினால் அந்தக் குறை தீர்ந்து விட்டது.

பக்கிரி: ஹுமாயூன் நிச்சயம் குணமடைந்து சாம்ராஜ்யத்தை ஆளப்போகிறான். அதற்குப் பாதுஷா செய்யவேண்டியது ஒரே ஒரு தியாகம் தான்.

பேபர்: தாங்கள் எதைத் தியாகம் செய்யச் சொன்னாலும் தயாராயிருக்கிறேன்.

பக்கிரி: பாதுஷா! தங்களிடமுள்ள மிகச் சிறந்த பொருளைத் தியாகம் செய்து விடுங்கள். ஹுமாயூன் வியாதி நீங்கிக் குணமடைவான்.

பேபர்: மிகச் சிறந்த பொருள் எது என்று தாங்களே சொல்லக் கூடாதா?

பக்கிரி: அதைப் பாதுஷாவே நிச்சயித்துக் கொள்ளவேண்டும்.

## காட்சி 2

**இடம்:** அரண்மனையில் ஹுமாயூன் பள்ளியறை.

**காலம்:** மாலை.

[ஹுமாயூன் நோய்ப்பட்டுப் படுத்திருக்கிறார். இரண்டு ஹக்கீம்களும், ஏவலாளரும் ஒதுங்கி நிற்கின்றனர். பேபர் அறைக்குள் நுழைகிறார்.]

பேபர்: ஹக்கீம்!

ஹக்கீம்: பாதுஷா!

பேபர்: இப்பொழுது இளவரசருக்கு உடம்பு எப்படியிருக்கிறது?

ஹக்கீம்: காலையிலிருந்ததைப் போலவேதான் இருக்கிறது. உடம்பில் மாறுதல் எதுவும் இல்லை.

பேபர்: (ஹுமாயூன் அருகே சென்று), கண்மணி! ஹுமாயூன்! தன் நினைவுகூட இல்லாமல் படுத்திருக்கிறனே! (சற்று மௌனம்) இன்று வந்த துறவி என்னிடமுள்ள சிறந்த பொருளைத் தியாகம் செய்யச் சொன்னர். சிறந்த பொருள் எது? (சற்று மௌனம்) என் கிரீடமா? கோகினூர் வைரமா? அல்லது என் பொக்கிஷத்திலுள்ள செல்வமா? (முன்னும் பின்னும் உலாவிக்கொண்டே யோசிக்கிறர்.) தெரிந்து கொண்டேன்! என்னிடமுள்ள சிறந்த பொருள் என் உயிர்தான். இந்த யோசனை எனக்கு ஏன் இதுவரை தோன்றவில்லை?

[ஹுமாயூன் படுத்திருக்கும் கட்டிலை மூன்று முறை சுற்றி வருகிறர். பிறகு முழங்கால் படியிட்டுக் கடவுளைத் தொழுகிறர்.]

சர்வ சக்தியுள்ள அல்லா! என் மகனை வாட்டும் நோயை எனக்குத் தந்து அருள் செய்க. (மௌனம்)

ஹுமாயூன்: (மெலிந்த குரலில்) அப்பா! தாகமாயிருக்கிறதே!

பேபர்: கண்மணி! இதோ பானம் கொண்டுவரச் சொல்கிறேன். (ஹக்கீம் ஒருவரிடம் தகுந்த பானம் கொண்டுவர உத்தரவிடுகிறர்.) (ஏவலாளரிடம்) நீங்கள் என் மந்திரிகளையும் சேனதிபதிகளையும் அழைத்து வாருங்கள்.

[ஹக்கீம், ஏவலாளர் போகின்றனர்.]

வெற்றி பெற்றேன்! என் மகன் பிழைத்து விட்டான்.

[ஹக்கீம் பானத்துடன் திரும்பி வந்து ஹுமாயூனுக்குக் கொடுக்கிறார். மந்திரிகளும் சேனைத் தலைவரும் வருகின்றனர்.]

பேபர்: பிரதானி! சேனாபதி! என் மகன் பிழைத்து விட்டான்!

பிரதானி: சந்தோஷம், பாதுஷா!

பேபர்: அல்லாவின் அருளால் அவனுடைய நோயை நான் ஏற்றுக்கொண்டு விட்டேன்.

[பிரதானிகள் தமக்குள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்கிறார்கள்.]

பேபர்: நான் சொல்வதில் உங்களுக்கு இப்பொழுது நம்பிக்கை ஏற்படாமல் இருக்கலாம். என் மகனுடைய வியாதியை எனக்குத் தரும்படி நான் அல்லாவைத் துதித்தேன். என் வேண்டுகோளை அல்லா ஏற்றுக்கொண்டுள்ளார் என்பதை நான் உணர்கிறேன். சில நாட்களாக உணர்ச்சி அற்றுக்கிடந்த ஹுமாயூன் இப்பொழுது கண் விழித்துத் தாகமாயிருக்கிறதென்று சொன்னான். சில நாட்களில் ஹுமாயூன் எழுந்து நடமாடுவதையும், நான் இம் மண்ணுலகைத் துறப்பதையும் நீங்கள் பார்ப்பீர்கள்.

பிரதானி: பாதுஷா! தங்களைப் பிரிந்து நீங்கள் எப்படி இருப்போம்!

பேபர்: எனக்குப் பதிலாக என் ஹுமாயூனை வைத்துவிட்டுத்தானே போகிறேன்! இப்பொழுது நீங்கள் எனக்கு ஒரு வாக்குறுதி தர வேண்டும்.

பிரதானி, சேனைத்தலைவர் : என்ன கட்டளை யிட்டாலும் செய்யக் காத்திருக்கிறோம்.

பேபர் : நான் மரணமடைந்த பிறகு நீங்கள் என் ஹுமாயூனை அரசனாக ஏற்றுக்கொண்டு விசுவாசத்துடன் ஊழியம் செய்வதாக இப்பொழுது எனக்கு வாக்குறுதி தரவேண்டும்.

பிரதானி, சேனைத்தலைவர் : உங்களுக்குப் பிற்காலத்தில் ஹுமாயூனையே அரசராக ஏற்றுக் கொள்வோம்; அவரிடம் விசுவாசமாக இருப்போம். இது நிச்சயம்.

[திரை]

| | | |
|---|---|---|
| பாதுஷா | எதிர்கோள் | பிரதானி |
| குடைக்கீழ | தியாகம் | ஹக்கீம் |
| ஒற்றர் | தொழு | விசுவாசம் |

பயிற்சி

இந்த நாடகத்தை நடித்துக் காட்டுக.



## 28. ஸ்ரீ சத்தியமூர்த்தி

தமிழ் நாட்டில் நம் தேசிய காங்கிரசு மிகுந்த செல்வாக்குடன் இருப்பதற்குக் காரணமா யிருந்த வர்களில் ஸ்ரீ சத்தியமூர்த்தி முக்கியமானவர். இவர் 1887-ல் புதுக்கோட்டை சமஸ்தானத்திலுள்ள திருமயம் என்ற ஊரில் பிறந்தவர். இவருடைய தந்தையார் சுந்தர சாஸ்திரியார், தாயார் சுப்பலக்ஷ்மி அம்மாள்.

சத்தியமூர்த்திக்கு எட்டு வயதாகும்பொழுது தந்தை காலமானார். தாயார் மிகுந்த கஷ்டத்துடன்

இவரை பீ. ஏ. வகுப்புவரை படிக்க வைத்தார். 1906-ல்இவர் பீ. ஏ. பட்டம் பெற்ற பின் சட்டக் கல்லூரியில் சேர்ந்து படித்துப் பட்டம் பெற்ருர்.

அக்காலத்தில் தேசீய காங்கிரசு இயக்கம் தீவிர மடைந்து வந்தது. விபின சந்திர பாலர் சென்னை யில் ஒரு பிரசங்கம் செய்தார். அதைக் கேட்டு சத்தியமூர்த்தி அதுமுதல் தேசீய இயக்கத்தில் ஈடு பட்டார். 1908-ல் சென்னையில் காங்கிரசு சபைக் கூட்டம் நடைபெற்றது. அப்பொழுது சத்திய மூர்த்தி தொண்டர் படையில் சேர்ந்து ஊழியம் செய் தார். மறு வருஷம் மதுராந்தகத்தில் நடந்த கூட்ட மொன்றில் முதன்முதல் தமிழில் பேசினுர். பொதுக் கூட்டங்களில் தமிழில் பேசுவது என்ற முறையை ஆரம்பித்து வைத்தவர் சத்தியமூர்த்தி அவர்களே.

1919-க்குப் பிறகு காங்கிரசின் தலைமையை மகாத்மா காந்தி ஏற்றுக் கொண்டார். காங்கிரசுப் பிரசாரம் நாட்டில் அதிகமாயிற்று. தமிழ் நாட்டில் காங்கிரசின் கொள்கைகளையும் நோக்கங்களையும் விளக்கிச் சொல்லி காங்கிரசுக்கு ஆதரவு தேடுவதில் சத்தியமூர்த்தி அரிய சேவை செய்தார். 1920-ல் முக்கியமான எல்லா ஊர்களுக்கும் இவர் சென்று பிரசங்கம் செய்தார். சத்தியமூர்த்தியின் பிரசங் கத்தைக் கேட்பதற்குப் பெருந்திரளாக மக்கள் கூடுவது வழக்கம்.

1923-ல் காங்கிரசில் ஒரு பிரிவினர் சுயராஜ்யக் கட்சியை அமைத்துக் கொண்டு சட்டசபைகளுக் குள் புகுந்து அரசாங்கத்தை எதிர்க்க முயற்சித் தனர். சத்தியமூர்த்தி இந்தக் கட்சியில் சேர்ந்திருந் தார். சென்னை சட்டசபைக்கு இவர் அங்கத்தின

ரானார். சட்டசபையில் இவர் செய்த பிரசங்கங்களும், அரசாங்க நிர்வாக சபையினரையும் மந்திரிகளையும் இவர் கேட்ட கேள்விகளும் இவருடைய அபார அரசியல் ஞானத்தை விளக்கின. இவருடைய கேள்விகளுக்குப் பதில் கூறமுடியாமல் அரசியலார் திகைத்ததுண்டு. பிற்காலத்தில் மத்திய சட்டசபையில் அங்கத்தினராயிருந்த பொழுது, அச்சபையின் காங்கிரசு கட்சிக்கு உபதலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். "காங்கிரசின் சார்பாக ஸ்ரீ சத்தியமூர்த்தி ஒருவரே சட்டசபைக்குப் போனால் போதுமானது" என்று மகாத்மா காந்தி ஒரு சமயம் சொன்னாரென்றால், சட்டசபை விஷயங்களில் சத்தியமூர்த்தியின் திறமையை நாமே யூகித்துக் கொள்ளலாம்.

1926-முதல் பல ஆண்டுகள் இவர் சென்னை கார்ப்பரேஷன் அங்கத்தினராக இருந்தார். அக்காலங்களில் சென்னை நகரத்தை அழகு செய்யவும் சென்னை மக்களுக்கு வாழ்க்கை வசதிகள் செய்யவும் முக்கியமாகக் குடி தண்ணீர் வசதியை அதிகப் படுத்தவும் பெருமுயற்சி செய்திருக்கிறார். 1939-ல் இவர் சென்னை நகர மேயரானார். அவ்வருஷத்தில் இவர் பூண்டி நீர்த்தேக்கத் திட்டம் தயாரித்து அதை நிறைவேற்ற ஏற்பாடுகளைச் செய்தார். அந்த நீர்த் தேக்கத்திற்கு சத்தியமூர்த்தி சாகர் என்று பெயரிடப்பட்டுள்ளது.

1931-ல் நடந்த சத்தியாக்கிரஹப் போரில் ஈடுபட்டு இவர் சிறை சென்றார். 1932-ல் விடுதலை செய்யப்பட்டு மற்றொரு முறை கைதியானார். 1943-ல் மத்திய சட்டசபைத் தேர்தலுக்குச் சென்னையின்

சார்பாக நின்று வெற்றி பெற்றார். 1937-ல் புதிய அரசியல் திட்டப்படி மாகாண சட்ட சபைகளுக்குத் தேர்தல் நடைபெற்றது. அதில் காங்கிரசுக் கட்சி பெருவாரியாக வெற்றி பெற்றது. இந்த வெற்றிக்குக் காரணமாயிருந்தவர் சத்தியமூர்த்தியே. தேர்தல் பிரசாரத்திற்குத் தமிழ் நாடெங்கும் சுற்றினார்.

1942-ல் மகாத்மா காந்தியின் தலைமையில் கூடிய காங்கிரசு சபையினர் 'இந்தியாவை விட்டு வெளியேறு' என்ற தீர்மானத்தை நிறைவேற்றினர். இதன் விளைவாக காங்கிரசுப் பிரமுகர்கள் கைதியாயினர். அவர்களில் சத்தியமூர்த்தியும் ஒருவர். சிறைவாசம் இவர் தேகத்துக்கு ஏற்கவில்லை. சிறையிலேயே நோய்வாய்ப் பட்டார். 1943-ம் ஆண்டு மார்ச்சு மாதம் சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் காலமானார்.

நம் நாட்டின் விடுதலைப் போரில் ஈடுபட்டு உயிரையும் அதற்காகத் தியாகம் செய்த வீரர்களில் ஒருவராகவே நாம் சத்தியமூர்தியைக் கருதவேண்டும். "மகாத்மா காந்தி உயிருள்ள பொழுதே இந்தியா சுதந்திரமடைய வேண்டும். அது என் அபிலாஷை" என்று சத்தியமூர்த்தி அடிக்கடி சொல்லுவார். அவருடைய விருப்பம் நிறைவேறியுள்ளது. ஆனால் காலத்தின் கொடுமையால் தம் விருப்பம் நிறைவேறியதை அவர் இவ்வுலக வாழ்க்கையிலிருந்து பார்க்கக்கூடவில்லை.

| | | |
|---|---|---|
| செல்வாக்கு | போதுமானது | பெருவாரியான |
| பட்டம் | கீர்த்தேக்கம் | பிரமுகர் |
| தீவிரம் | தொண்டர் படை | தீர்மானம் |
| ஆதரவு | சாகர் | அபிலாஷை |
| சார்பு | கைதியானார் | பிரசாரம் |

## கேள்விகள்

1. *சத்தியமூர்த்தி சட்ட சபைகளில் செய்த தொண்டு என்ன ?*

2. *சென்னை நகர மக்களுக்கு சத்தியமூர்த்தி என்ன நன்மைகள் செய்துள்ளார் ?*

3. *சத்தியமூர்த்தி ஒரு சிறந்த தியாகி என்று எவ்வாறு கூறலாம் ?*

## பயிற்சி

1. *சொந்த வாக்கியங்களில் உபயோகி : செல்வாக்கு, தீவிரம், சார்பு, பிரமுகர்.*

2. *பின்வரும் வாக்கியங்களில் தடித்த எழுத்திலுள்ள சொற்கள் என்ன வகைச் சொற்கள் என்று எழுது :*

(i) **தாயார்** மிகுந்த *கஷ்டத்துடன்* **இவரை** *பி. ஏ. வகுப்புவரை* **படிக்க வைத்தார்.**

(ii) *சுயராஜ்யக் கட்சியினர்* **சட்டசபைகளில் புகுந்து** *கொண்டு* **அரசாங்கத்தை எதிர்க்க முயற்சித்தனர்.**

# 29. நல்வழி

சாதி யிரண்டொழிய வேறில்லை ; சாற்றுங்கால்
நீதிவழுவா நெறிமுறையின் — மேதினியில்
இட்டார் பெரியோர் ; இடாதார் இழிகுலத்தோர் ;
பட்டாங்கி லுள்ள படி. (1)

வருந்தி யழைத்தாலும் வாராத வாரா ;
பொருந்துவன போமினென்றாற் போகா ; —இருந்தேங்கி
நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரந் தாம் நினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில். (2)

ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்கா லுலகூட்டும் ; — ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலும்
இல்லையென மாட்டா ரிசைந்து. (3)

ஒருநா ளுணவை யொழியென்றா லொழியாய் ;
இருநாளுக் கேலென்றா லேலாய் ! — ஒருநாளும்
என்னோ வறியாய், இடும்பைகூ ரென்வயிறே !
உன்னோடு வாழ்த லரிது. (4)

ஆற்றங் கரையின் மரமும் அரசரிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே ? — ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை ; கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு. (5)

பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சைபல சொல்லி இடித்துண்கை ; — சீச்சீ !
வயிறு வளர்க்கைக்கு மானம் அழியா
துயிர் விடுகை சால வுறும். (6)

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே ! கேளுங்கள்—கூடுவிட்டிங்
காவிதான் போயினபின் யாரே யனுபவிப்பார்
பாவிகாள், அந்தப் பணம் ? (7)

ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகும் ;
அன்றி யதுவரினும் வந்தெய்தும் ; — ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும் ;
எனையாளு மீசன் செயல். (8)

ஆறிடு மேடும் மடுவும்போ லாஞ்செல்வம்
மாறிடும் ஏறிடும் ; மாநிலத்தீர் ! — சோறிடும்,
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து. (9)

பூவாதே காய்க்கும் மரமுள ; மக்களுளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே ; — தூவா
விரைத்தாலும் நன்றாகா வித்தெனவே பேதைக்
குரைத்தாலும் தோன்றா துணர்வு. (10)

—ஔவையார்

| | | |
|---|---|---|
| சாற்றுங்கால் | ஏல் | மடு |
| வழுவா | இடும்பை | பேதை |
| மேதினி | பழுது | ஏவாதே |
| பட்டாங்கு | சால | வித்து |
| துஞ்சுவது | பணி | உணர்வு |
| மாந்தர் | உறும் | கூர் |
| ஊட்டும் | கூடு | எய்தும் |
| நல்கூர்ந்தார் | ஆவி | வீறும் |

அரும்பதவுரை : சாற்றுங்கால் - *சொல்லுமிடத்து*. வழுவா-*தவறாத*. மேதினி - *பூமி*, *உலகம்*. பட்டாங்கு - *சாத்திரம்*. பொருந்துவன-(*நம்மை*) *வந்து அடைவன*. நெடுந்தூரம்-*நெடுங் காலம்*. துஞ்சுவது - *சாதல்*. உலகு ஊட்டும் - *உலக மக்களுக்கு உணவு அளிக்கும்*. நல்கூர்ந்தாராயினும் - *ஏழைகளானபோதி லும்*. ஏல்-*ஏற்றுக்கொள்*. என்நோ-*எனது துன்பம்*. இடும்பை-*துன்பம்*. கூர் - *மிகுந்த*. பழுது - *குற்றம்*. பணி - *தொழில்*. சாலஉறும் - *மிகவும் நன்றாகும்*. ஆவி - *உயிர்*. எய்தும் - *அடையும்*. மடு - *பள்ளம்*. ஏறிடும் - *உயரும்*. சோறிடும் - *உணவு அளியுங்கள்*. தண்ணீரும் வாரும் - *தண்ணீர் தானம் செய்யுங்கள்*. உண்ணீர்மை - *மனத்தின் தன்மை*. வீறும் - *மேன்மையடையும்*. ஏவாதே - *கட்டளையிடாமலே*. தூவா - *தூவி*. வித்து - *விதை*. பேதை - *அறிவிலி*. உணர்வு - *அறிவு*.

## 30. மூதுரை

நன்றி யொருவர்க்குச் செய்தாக்கா லந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால். (1)

நல்லா ரொருவருக்குச் செய்த வுபகாரம்
கல்மே லெழுத்துப்போற் காணுமே—அல்லாத
ஈரமிலா நெஞ்சத்தார்க் கீந்த வுபகாரம்
நீர்மே லெழுத்திற்கு நேர் (2)

அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளவில்
நட்டாலும் நண்பரல்லார் நண்பரல்லர்;
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும். (3)

அடுத்து முயன்றாலு மாகுநா ளன்றி
எடுத்த கருமங்க ளாகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்க ளெல்லாம்
பருவத்தா லன்றிப் பழா. (4)

உற்ற விடத்தி லுயிர்வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவ தல்லாற் பெரும்பாரந் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான். (5)

நீரளவே யாகுமாம் நீராம்பல் தான் கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு—மேலைத்
தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகுங் குணம். (6)

நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார் சொற் கேட்பதுவும் நன்றே—நல்லார்
குணங்க ளுரைப்பதுவும் நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவும் நன்று. (7)

தீயாரைக் காண்பதுவும் தீதே—திருவற்ற
தீயார் சொற் கேட்பதுவுந் தீதே—தீயார்
குணங்க ளுரைப்பதுவுந் தீதே யவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது. (8)

நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே பொசியுமாம்—தொல்லுலகில்
நல்லார் ரொருவ ருளரே லவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யு மழை. (9)

பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம்—கொண்டபேர்
ஆற்ற லுடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமஞ் செயல். (10)

மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல் சிறிய ரென்றிருக்க வேண்டா—கடல்பெரிது
மண்ணீரு மாகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரு மாகி விடும். (11)

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சபைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவனன் மரம். (12)

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி. (13)

வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி
ஆங்கதனுக் காகார மானாற்போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த வுபகாரம்
கல்லின்மே லிட்ட கலம். (14)

அற்ற குளத்தி லறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வா ருறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவா ருறவு. (15)

உடன் பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டா
உடன்பிறந்தே கொல்லும் வியாதி—உடன் பிறவா
மாமலையிலுள்ள மருந்தே பிணிதீர்க்கும்
அம்மருந்து போல்வாரு முண்டு. (16)

நற்றா மரைக்கயத்தில் நல்லன்னஞ் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை யுகக்கும் பிணம். (17)

நஞ்சுடைமை தானறிந்து நாகங் கரந்துறையும்
அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு—நெஞ்சில்
கரவுடையார் தம்மைக் கரப்பார்; கரவார்,
கரவிலா நெஞ்சத்தவர். (18)

மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்-மன்னர்க்குத்
தன்தேச மல்லாற் சிறப்பில்லை கற்றோர்க்குச்
சென்றவிட மெல்லாஞ் சிறப்பு. (19)

சந்தன மென்குறடு தான்தேய்ந்த காலத்தும்
கந்தங் குறைபடா தாதலால்—தந்தம்
தனஞ்சிறிய ராயினும் தார்வேந்தர் கேட்டால்
மனஞ்சிறிய ராவரோ மற்று. (20)

—ஔவையார்

| | | |
|---|---|---|
| தெங்கு | தொல்லுலகு | காமுறுவர் |
| தாள் | பண்டு | முகப்பர் |
| ஈரம் | மண்ணீர் | முதுகாடு |
| கேர் | உண்ணீர் | உகக்கும் |
| அட்டாலும் | நீட்டோலை | கரந்து |
| கட்டாலும் | விடதாரி | கரவு |
| பற்றலர் | பாங்கு | சீர்தூக்கின் |
| திருவற்ற | உற்றுழி | குறடு |
| போசியும் | உறுவார் | கந்தம் |

அரும்பதவுரை : எனவேண்டா - என்று கருத வேண்டாம். தாள் - பாதம், வேர். ஈரம் - அன்பு. அட்டாலும் - காய்ச்சினாலும். நட்டாலும் - நட்புச் செய்தாலும். பழா - பழுக்காட்டா. உற்ற இடத்தில் - ஆபத்து நேர்ந்த காலத்தில் ஒற்றலர் - பகைவர். இறுவது - ஒடிவது. மேலை - முன்பிறப்பு. திரு - மேன்மை, பொலிவு. பொசியும் - கசியும். தொல் உலகு - பழமையான உலகம். பண்டு - முதலில். ஆற்றல் - திறமை, வலிமை. மண்ணீர் - கழுவுதற்கு உரிய நீர். விடதாரி - விஷவைத்தியன். பாங்கு - தன்மை. கலம் - பாத்திரம், சட்டி. உற்றுழி - துன்பம் வந்த சமயத்தில். தீர்வார் - விலகுபவர். உறுவார் - பொருந்துபவர். பிணி - நோய். காமுறுவர் - விரும்புவர். முகப்பர் - விரும்புவர். முதுகாடு - சுடுகாடு. கரவு - ஒளித்தல். குறடு - கட்டை. கந்தம் - வாசனை.

# 31. பல்சுவைப் பாடல்கள்

வாலிபந்தனில் வித்தை கற்கவேண்டும்; கற்ற
வழியிலே நிற்கவேண்டும்;
வளைகடல் திரிந்து பொருள் தேடவேண்டும்; தேடி
வளரறஞ் செய்யவேண்டும்;
சீலமுடையோர்களைச் சேரவேண்டும்; பிரிதல்
செய்யாதிருக்க வேண்டும்;
செந்தமிழ்ப் பாடல் பல கொள்ளவேண்டும்; கொண்டு
தியாகம் கொடுக்க வேண்டும்;
ஞாலமிசை பலதருமம் நாட்டவேண்டும்; நாட்டி
நன்றாய் நடத்த வேண்டும்;
நம்பணிணை அடிபூசை பண்ணவேண்டும்; பண்ணி
ஞானகுரு பக்திவேண்டும்;
ஆலமமர் கண்டனே! பூதியணி முண்டனே,
அழகன் எமதருமை மதவேள்
அனுதினமும் மனதில் நினை தரு சதுரகிரிவளர்
அறப்பளீசுர தேவனே! (1)

—அறப்பளீசுர சதகம்

உள்ளம் கவர்ந்தெழுந்து ஓங்கு சினங்காத்துக்
கொள்ளும் குணமே குணமென்க—வெள்ளம்
தடுத்தல் அரிதோ, தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ, விளம்பு. (2)

—நன்னெறி

சிறந்தமெய்ப் பொருளை அழிவிலா மணியைத்
தெரிந்து முக்காலமும் உணர்ந்து
துறந்தவர் இதயா சனத்திருந் தவனைத்
தொடர் இன்ப துன்பமற் றவனைப்
பிறந்தபல் உயிரின் மனத்துளே உறைந்து
பிறப்பு இறப்பு ஒன்றிலா தவனை
மறந்தவர் சுவர்க்கப் பதியையு மறந்து
மண்ணினும் மதிமறந் தவரே. (3)

—உமறுப்புலவர்

ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை—தூய
உருப்பளிங்குபோல்வாள் என்உள்ளத்தினுள்ளே
இருப்பள் இங்குவரா திடர். (4)

—கம்பர்

சித்திரமும் கைப்பழக்கம்; செந்தமிழும் நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்;—நித்தம்
நடையும் நடைப்பழக்கம்; நட்பும் தயையும்
கொடையும் பிறவிக் குணம். (5)

ஔவையார்

முன்னமோர் பொய்யுரைக்க
அப்பொய்வெளி யாகாமல்
மூடும் வண்ணம்
பின்னுமோர் பொய்யுரைக்க
அதையும்நிலை நிறுத்திடவோர்
பெரும்பொய் சொல்ல
இன்னவகை கைதவம் ஒன்று
இருநூறு கைதவத்துக்கு
இடமாம்; வாய்மை
தன்னையே முன்பகரில் சங்கடம்
ஒன்றிலை, அதுவே
தகைமை நெஞ்சே! (6)

—வேதநாயகம் பிள்ளை